# மாறன் பாப் பாவினம்

## செய்யுள் இலக்கண மேற்கோள்

### பாடல்கள்





விளக்கவுரை:
டாக்டர்
அருட்கவி அரங்க சீனிவாசன்

# மாறன் பாப்பாவினம்




THIS BOOK IS

PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

UNDER THEIR SCHEME

"AID TO PUBLISH RELIGIOUS BOOKS".

விளக்கம் :

அருட்கவி அரங்க சீனிவாசன்

# மாறன் பாப்பாவினம்

அருளியவர்

திருக்குருகைப்பிரான் கவிராயர்

விளக்கியவர்

அருட்கவி அரங்க சீனிவாசன்

விற்பனை உரிமை :




ஐந்திணைப் பதிப்பகம்

279, பாரதி சாலை

சென்னை-600 005

முதற்பதிப்பு : டிசம்பர் 1989



விலை ரூ. 30/-

---

அச்சிட்டோர் :

கவின்கலை அச்சகம்

கந்தசாமி நகர்

பாலவாக்கம், சென்னை 600 041

தொலைபேசி : 41 71 41

# முன்னுரை

மாறனை ஏத்தியே
மாறனைத் துங்கெடு
மாறனை போல்அருள்
மாறனை வாழ்த்துவாம்.[1]

எழுத்து, சொல், பொருள் எனத் தமிழ் இலக்கணத்தை முப்பெரும் பிரிவுகளாக வகுத்தார் தொல்காப்பியர்.

பின்னர்ப், பொருளதிகாரத்தின் பகுதிகளாக இருந்த செய்யுளியலும் உவமையியலும் யாப்பு, அணி என விரிந்தன. அதுமுதல் தமிழ் நன்னூல் துறைகள் அஞ்சு என்று வழங்கலாயின.

தொல்காப்பியர் காலத்தை ஒட்டியே செய்யுளிலக்கணம் கூறும் யாப்பு நூல்கள், பற்பல தோன்றின என்று அறிகின்றோம்.

அவற்றுட் சிலவற்றின் பெயர்கள் மட்டுமே இன்று எஞ்சியுள்ளன. நூலின் பெயரும் ஆசிரியர் பெயரும் அறிய இயலாத சில நூற்பாக்கள் கிடைத்துள்ளன.

---

1. பாடலின் அன்வயமும் பொருளும் :

மால் த(ன்)னை ஏத்தியே மாறு அனைத்தும் கெடுமாறு அ(ன்)னை போல் அருள் மாறனை வாழ்த்துவாம்.

திருமாலை ஏத்தி, பகை (துன்பம்) அனைத்தும் கெடுமாறு தாய்போல் அருள் செய்கின்ற நம்மாழ்வாரை வாழ்த்துவோம்.

ஆசிரியர் பெயரால் அமைந்த சில நூல்களின் நூற்பாக் களும் ஆசிரியர் பெயர் அறிய இயலாமல் நூலின் பெயர் மட்டும் அறியக்கூடிய சில நூற்பாக்களும் பெற்றுள்ளோம்.

| நூலின் பெயர் | கிடைத்துள்ள நூற்பாக்கள் |
|---|---|
| அவிநயம் | 63 |
| கடிய நன்னியம் | 2 |
| காக்கை பாடினியம் | 73 |
| சங்க யாப்பு | 7 |
| சிறுகாக்கை பாடினியம் | 34 |
| நக்கீரர் அடிநூல் | 1 |
| நத்தத்தம் | 24 |
| நல்லாதம் | 1 |
| நல்லாறம் | 4 |
| நாலடி நாற்பது | 5 |
| பரிமாணம் | 7 |
| பல் காப்பியம் | 2 |
| பல் காயம் | 26 |
| பனம்பாரம் | 1 |
| பன்னிருபடலம் | 1 |
| பாட்டியல் மரபு | 2 |
| பெரியப்பம் | 1 |
| மயேச்சுரம் | 64 |
| மாபுராணம் | 1 |
| வாய்ப்பியம் | 4 |

பின்னர் விருத்த யாப்பால் இயன்ற இதம்பரப் பாட்டியல் என்ற நூலும் செய்யுளியலில் யாப்பிலக்கணம் கூறுகின்றது.

யாப்பிலக்கணம் மட்டுமே கூறும் நூல்கள், அமிதசாகர னார் அருளிய யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை ஆகிய இரண்டு மட்டுமே!

யாப்பதிகாரம் என ஒருநூல் இருந்துள்ளது என்பதனை, இறையனார் களவியல் உரையால் அறிகின்றோம். செய்யுளிய லுடையார் என்று யாப்பருங்கலவிருத்தி கூறுவதால் செய்யுளியல் என ஒரு நூலும் இருந்துள்ளது என்று அறிகின்றோம்.

நன்னூல் துறைகள் அஞ்சு என ஒரு பாடல் குறிப்பிடுவ தால், நன்னூல்கூட யாப்பிலக்கணம் கூறியிருக்கலாம். அது கிடைக்காமற்போனது என்று சிலர் கருதுகின்றனர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டினராக புத்தமித்திரனார் வீரசோழியம் என்ற இலக்கண நூலில் யாப்புப் படலம் என ஒரு பகுதியைச் சேர்த்துள்ளார்.

அதன் பிறகு நான்கு நூற்றாண்டுகள் அதாவது பதினாறாம் நூற்றாண்டுவரை யாப்பிலக்கணத் தொடர் புடைய நூல் ஏதும் தோன்றியதாகத் தெரியவில்லை? நானூறு ஆண்டுகளுக்குப்பின் வாராது போலவந்த மாமணி யாகத் தோன்றிய ஒரே நூல் மாறன் பாப்பாவினம்.

மாறன் பாப்பாவினம் என்ற பெயர், சில இடங்களில் பாப்பாவினம் என்று மட்டுமே குறிப்பிடப் பெற்றுள்ளது.

எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலிய யாப்பின் உறுப்பிலக்கணமும், பாக்களுக்கும் பாவினங் களுக்கும் உரிய இலக்கணங்களும் கூறாமல், எடுத்துக்காட்டுச் செய்யுட்களை மட்டும் நிரல்படக் கோவையாகத் தரும் நூல் இது. அதுவரை யாரும் மேற் கொள்ளாத புதுமை; புது முயற்சி இது.

ஒவ்வோர் எடுத்துக்காட்டுப் பாடலுக்கும் உரிய பெயர், அலங்காரம், திணை, துறைகளை மட்டும் சுருக்கமாகக் குறிப்

பிட்டுச் செல்கின்றது இந்நூல். இப்பதிப்பில் அவை அடைப்புக் குறிக்குள் ஒவ்வொரு பாடலுக்குப் பின்னும் தரப் பட்டுள்ளன.

பெரும்பாலும் தொல்காப்பியம் செய்யுளியலைத் தழுவி னாலும், யாப்பருங்கலவிருத்தி, காரிகை முதலிய பிறநூல் களின் கொள்கைகளையும் ஆசிரியர் தரும் சுருக்கக் குறிப்பு விளக்குகின்றது.

இந்நூல்கள் மட்டுமின்றி மூதுரை, சங்கப் பரிபாடல், கலித்தொகை, காக்கைபாடினியம் என்பவற்றையும் குறிப் புரையில் காட்டியுள்ளார்.

இந்நூலின் பாடல் தொகை :

| | |
|---|---|
| வெண்பா | 28 |
| வெண் பாவினம் | 13 |
| ஆசிரியம் | 34 |
| ஆசிரியப் பாவினம் | 16 |
| கலிப்பா | 20 |
| கலிப் பாவினம் | 12 |
| வஞ்சிப்பா | 3 |
| வஞ்சிப் பாவினம் | 5 |
| மருட்பா | 4 |
| பரிபாடல் | 5 |

தொல்காப்பியம் செய்யுளியலில்மட்டுமே பரிபாடலுக்கு இலக்கணம் உண்டு. சங்க நூல்களில் பரிபாடல் என ஒரு நூலில், சில பரிபாடல்கள் மட்டும் உள்ளன.

அதற்குப்பின் யாருமே பரிபாடலுக்கு இலக்கணம் செய்ததாகவோ, அதற்கு இலக்கியமாகப் பரிபாடல் இயற்றி யதாகவோ வரலாறே இல்லை.

கவிராயர் இவர்மட்டுமே, இந்த நூலில் ஐந்து பரிபாடல் களைப் பாடி இணைத்துள்ளார்.

நெடுங்காலமாகவே வழக்கற்றுப்போன பரிபாடலை, எடுத்துக்கொண்ட நூல் முழுமையாக இருத்தல் வேண்டும் என்று கருதியே செய்துள்ளார் எனலாம்.

இங்குள்ள பரிபாடல் ஐந்தும் அகத்தியர் கூறிய ஐந்து உறுப்புடன் சங்கத்தார் பரிபாடல் நடையமையப் பாடப் பட்டுள்ளன.

"தரவே எருத்தே, அராகம், கொச்சகம்,
மடக்கியல் வாரமொடு ஐந்துஉறுப்பு உடைத்தே"

என்பது அகத்தியர் காட்டிய ஐந்துறுப்புக்கள்.

கவிராயர், தாம் பாடிய பரிபாடல் ஒவ்வொன்றும் சங்கப் பரிபாடலில் இன்னதனைத் தழுவியது என்று காட்டு கின்றார்.

"ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை" எனத் தொடங்கும் சங்கப் பரிபாடலைத் தழுவியது முதற்பாடல்.

கடுவன் இளவெயினனார் பாட்டாய், முதலே மூன்றாவ தாயப் பெட்டனாகனார் இசை பண்ணுப் பாலையாழாய் 'மாஅ யோயே! மாஅ யோயே!" என்னும் பரிபாடலைப் போன்றது இரண்டாவது பாடல்.

"கார்மலி கதழ்பெயல் தலைஇ" என்னும் பரிபாடலைத் தழுவியது மூன்றாம் பாடல்.

"தொன்முறை இயற்கையின்" எனத் தொடங்கும் பரி பாடலைப் போன்றது நான்காம் பாடல்.

ஐந்தாவது பாடல் சங்கப் பரிபாடலில் எதனைத் தழுவியது என்று குறிப்பிடப்படவில்லை.

இந்நூல் தோன்றியபிறகு, வைணவர்கள் பெரும்பாலும் இதன் செய்யுட்களையே யாப்புக்கு மேற்கோளாகக் காட்டு வதை வழக்கமாகக் கொண்டனர்.

ஒரு நூற்றாண்டுக்காலம் இவ்வாறு தனிச்செங்கோல் ஓச்சிவந்த இந்நூலின் சிறப்புக் கண்ட சைவசமயத்தார், தங்கள் சமயச் சார்பாகவும் இவ்வாறு ஒரு நூல் இருப்பின் சிறப்பாக இருக்குமே என்று கருதினர்.

பதினேழாம் நூற்றாண்டில் தோன்றியவர் குமரகுருபரர். கவிராயர் பிறந்த ஆழ்வார் திருநகரிக்கு அருகிலுள்ளதும் நவ திருப்பதிகளுள் ஒன்றானதும் ஆகிய ஸ்ரீவைகுண்டம் குமர குருபரரின் பிறப்பிடம்.

அவரிடம் சைவச்சான்றோர் சிலர் சென்று, மாறன் பாப்பாவினம் போன்று செய்யுளிலக்கண மேற்கோள்களாக ஒரு நூல் சைவச் சார்பாகச் செய்து தரவேண்டுமென்று வேண்டினர்.

அதனால் உருவானதுதான் ''சிதம்பரச் செய்யுட் கோவை''.

ஆயினும் அது இதனினும் சிறியது. அதனுட் பரிபாடல் இல்லை. ஆனால் அதன் செய்யுட்கள் இலக்கிய வளமும் கற்பனை வளமும் உடையன.

சிதம்பரச் செய்யுட்கோவை தோன்றுவதற்குக் காரண மாயும் அதற்குப் படிச்சந்தமாயும் அமைந்தது இந்நூலுக்குத் தனிச் சிறப்புத்தானே!

மாறன் பாப் பாப்பாவினம் காட்டிய வழியில் அண்மை யில் அரங்கன் செய்யுள் அமுதம் என ஒரு நூல் வெளி வந்துள்ளது.

பாம்பன்சுவாமிகள் பல்சந்தப் பரிமளம் என ஓர் அரிய நூல் அருளியுள்ளார். அடியேன் சிறுவயதில் தமிழ் அமுதக் கோவை என ஒரு நூல் செய்தேன். அது அழிந்துவிட்டது. சில பாடல்கள்மட்டுமே எஞ்சியுள்ளன. அவை பின் இணைப் பாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

மாறன் பாப்பாவினம் என்ற பெயருக்கு ஏற்பக் குருகூரையும் நம்மாழ்வார் ஆகிய மாறனையும் திருவாய் மொழியையும் வாழ்த்தும் பாடல்கள் மிகுதியாக உள்ளன.

திருவரங்கம், வடவேங்கடம், திருமோகூர், அனந்தை, எவ்வுள். முதலான சில தலங்களைப்பற்றியும் திருமாலைப் பற்றியும் சில பாடல்கள் பயின்று வருகின்றன.

நம்மாழ்வாரையும் நம்பெருமாளையும் வாழ்த்தும் நூலாக இருப்பதால், பொதுவான பெயரிடல் வேண்டும் என்று கவிராயர் கருதியிருக்கலாம்.

மாறன் பாப்பாவினம் என்ற பெயரே பொதுவான பெயராகக் கொள்ளும்படி அற்புதமாக அமைந்துள்ளது வியப்பைத் தருகின்றது.

மாறன் என்றால் நம்மாழ்வாரைக் குறிக்கும் என்பதில் தடை இல்லை.

அச் சொல்லை மால்+தன் என்று பிரிக்கலாமே! அவ்வாறு பிரித்தால் திருமாலினுடைய என்று ஆகுமே!

மாறனுடைய பெயரால் அமைந்த பாப்பாவினம் என்றும் திருமாலினுடைய பெயரால் அமைந்த பாப்பாவினம் என்றும் பொதுவாகப் பொருள்படும்படி பெயரிட்ட கவிராயர் புலமைத்திறம் என்னே! என்னே!

நம்மாழ்வாரைப் பாராட்டுவதோடு சில பாடல்களில் ஆழ்வாரின் சொற்றொடர்களை அப்படியே கையாண்டுள்ளார் கவிராயர்.

"அற்றதுபற் றெனில் உற்றதுவீடுஉயிர்
செற்றது மன் னுறில் அற்றிறைபற்றே"

என்பது நம்மாழ்வார் வாக்கு. இது இந்நூலில் அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளது.

நம்மாழ்வாரை மட்டுமென்றி, நம்மாழ்வாரின் ஒரே முதன்மைச் சீடராகிய மதுரகவியாழ்வாரையும் இரு பாடல்களில் (48-95) போற்றுகின்றார் கவிராயர்.

இந்நூலின்பாடல்கள் யாப்பிலக்கணத்துக்குரிய மேற்கோட் செய்யுட்களே ஆயினும், அணியிலக்கணத்துக்குரிய அணிகள் பாடல்தோறும் பயின்று வருகின்றன. தொல்காப்பியம் குறிப்பிடும் அகத்திணைத்துறைகளும் புறத்திணைத் துறைகளும் பாடல்தோறும் இடம் பெற்றுள்ளன.

சங்க நூல்களில் தெளிவில்லாமல் காணப்படும் குறிபபுப் பொருள்களாகிய உள்ளுறை உவமைகள் இங்கு விளக்கமாகத் தரப்பட்டுள்ளன.

அந்த உள்ளுறைநுட்பங்கள் ஆங்காங்கே உரையில் தவறாமல் விளக்கம் பெற்றுள்ளன.

பெரும்பாலும் பிற்கால இலக்கண நூல்களைத் தழுவாமல், தொல்காப்பிய நெறியையே தழுவியமையால், பாடல்கள் மிடுக்கானநடையில் அமைந்துள்ளன. சங்கப் பாடல்களைப்போலத் தனித்தன்மை வாய்ந்தன. தமிழ்ச் சுவை ததும்புவன, கற்குந்தோறும் கழிபேருவகை தருவன. அளவிறந்த அருஞ்சொற்களைப் பொருள்விளக்கத்துடன் அறிமுகப்படுத்துவன.

தமிழ் இலக்கண ஆய்வாளர்க்கு இது அரிய பொக்கிஷம். தமிழ்ச்சுவை தேடும் இதயங்களுக்கு இது அமுத தடாகம். வைணவசமயச் சார்பினருக்குத் தனித்தமிழ்ப் பக்தி இலக்கியம்.

இந்த நூலுக்கு ஒரே ஒரு பிரதிமட்டுமே கிடைத்துள்ளது. அதன் சிறப்புணர்ந்த மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திராதிபர் அமரர் தி. கி. ராமாநுஜ ஐயங்கார், உள்ளதுஉள்ளபடியே செந்தமிழில் வெளியிட்டுப், பின்னர், நூலாகவும் வெளியிட்டார்.

அதற்குமுன்பே கலாநிலையப்பதிப்பாகவெளிவந்துள்ளது என்று தெரிகின்றது. ஆயினும் அப்பதிப்பு அரிதாகிவிட்டது.

செந்தமிழ்ப் பிரசுரமான பதிப்பில் பாடல்கள் சந்தி பிரிக்காமலும், விளக்கம் ஏதும் இல்லாமலும் ஏட்டில் உள்ள படியே தரப்பட்டமையால், அதைப் படித்துப் புரிந்து கொள்வது புலவர்க்கே அரிய செயலாகும். அத்துடன் இன்று அப்பிரதி எங்கும் கிடைப்பதாகத் தெரியவில்லை.

இப்பதிப்பில் பாடல்கள் முழுவதும் சந்தி பிரிக்கப்பட்டுள் ளன. பாடல்களின் சாரமும் அருஞ்சொற்பொருளும் வினை முடிவுகளும் பகுதி, துறை, அணிகள் முதலியவற்றின் விளக் கங்களும் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடலுக்கும் உரிய யாப்பு விளக்கமும் தெளி வாக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ள பல செய்திகள் தொகுக்கப்பட்டு நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளன.

எண்ணுந்தோறும் இனிப்புத்தரும் இப்புனித நூலுக்கு இறவா வரம் அளித்தவர் அமரர் தி.கி. ராமாநுஜ ஐயங்கார் அவர் நன்றி கலந்த வணக்கத்துக்கு உரியவர் ஆகின்றார்.

கிடைத்தற்கரிய ஒரே பிரதியை அளித்து, உரைஎழுது மாறு பணித்தவர் என் உடன் பிறவாத்தம்பி, உழுவல் அன்பர், கவியரசர், டாக்டர் த. கோவேந்தன் டி. லிட், ஆவர். இந்நூலுக்கு உரை காண ஆற்றுப்படுத்திய அவர்க்கு என்றென்றும் என் இதயத்தைக் காணிக்கையாக்குவதல்லது வேறு கைம்மாறு உண்டோ?

அறியாதன அறிவித்தவன் என்று இறைவனை நம்மாழ் வார் பாராட்டுவார். சிலபாடல்களின் உட்பொருள்கள் விளங்காதனவற்றை அந்த இறைவன் அறிவித்தமையாலேயே இந்நூலின் உரை முழுமையானது என்று நம்புகின்றேன்.

திருமலை- திருப்பதி தேவஸ்தானத்தார் இதுகாறும் அடியேனுடைய நூல்களுக்குத் தொடர்ந்து நிதியுதவி செய்து வருகின்றனர். இந் நூலும் அவர்களின் உதவியாலேயே வெளிவருகின்றது. அவர்களுக்குத் தலையல்லால் கைம் மாறில்லேனே!

இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டு உதவிய என் கெழுதகை நண்பர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கு நன்றிகூற வார்த்தைகளுக்கு வலுவேது?

அட்டைபபடத்தில் நம்மாழ்வார் திருவுருவம் இடம் பெற வேண்டும் என்று விரும்பினேன். என் விருப்பத்துக் கிணங்க ஞாலச்சிகரமாகிய நம்மாழ்வாரை நூலின் முகப்பில் எழுந்தருளச் செய்து நூலுக்குத் தெய்விகமணம் ஊட்டியுள்ள ஓவியர் நாதன் அவர்களுக்கும் எம் நன்றி உரியது.

அச்சுக்கோத்து அச்சிட்டுதவிய அச்சகத் தொழில் பிரிவினர்க்கு என் ஆசிகள்.

நூலுக்கு விற்பனை உரிமை பெற்று உதவ முன்வந்த ஐந்திணைப்பதிப்பக உரிமையாளர் கவிஞர் குழ. கதிரேசனார் காலத்தினால் செய்த உதவி ஞாலத்தின் மாணப் பெரிதன்றோ?

அரங்க. சீனிவாசன்

# நூலாசிரியர் வரலாறு

திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றிய நூல் மாறன் பாப் பாவினம்.

திருக்குருகைப் பெருமாள் என்பது நம்மாழ்வாரைக் குறிக்கும் பெயர். நம்மாழ்வார் சன்னிதியில் ஆத்தானக் கவிஞராக இருந்தமையால், இப்பெயரைப் பெற்றார் எனலாம்.

இவரது இயற்பெயர் சடையன் என்பதே யாகும். நம்மாழ்வார் பெயர்களுள் ஒன்றாகிய சடகோபன் என்ற பெயரே சடையன் என ஆனது.[1]

சடையன் என்பது சிவனைக் குறிக்கும் பெயர். இக் கவிராயர், அப்பெயரையே கொண்டார் என்று சிலர் கருதக் கூடும்.

சைவப்பற்றாளராகிய முதுபேரறிஞர் மு. அருணாசலம் அவர்கள், சடகோபன் என்பதே சடையன் என மாறியது என்று நடுநிலையோடு குறிப்பிட்டுள்ளார்.

கவிராயர் நம்மாழ்வார் தோன்றிய வேளாண்குலத்தி னர். இச்செய்தியை, இவர் செய்த மாறன் அலங்காரம் என்ற நூலின் பாயிரம் குறிப்பிடுகின்றது.

"மருக்கமழ் சீரகத் தார்வணி கன்புகழ்த்
திருக்குரு கைப்பெரு மாள்கவி ராயன்
அருட்குணத் தான்வளர் சடையன்"

1. கம்பனை ஆதரித்த வள்ளல் சடையன் பெயரும் சடகோ பன் என்றே இருந்திருக்கலாம். அதுவே மருவிச் சடையன் என ஆனது என்பதனை இங்கே நினைவு கூரலாம்.

திருக்குருகை மான்மியப் பாயிரமும் இதே செய்தியைச் சற்று விரிவாகப் பேசுகின்றது.

''இருக்குமுதற் பனுவலினால் இயல்தமிழ்த்தேர்
நாவீறன் என்னும் மேன்மை
அருட்புலவலைப் புகழ்புலமைத் திருக்குருகைப்
பெருமான்பே ரன்பு கூரும்
தருக்குலவும் பொழிற்குருகா புரிவணிகன்
சடையன்இதைத் தமிழால் சாற்றித்
திருக்குருகைப் பெருமான்வன் கவிராசன்
எனப்புனைபேர் சிறந்த தன்றே''

என்பது அப்பாயிரம். இதில் அவரது இயர்பெயர் சடையன் என்றும் குருகை மான்மியப் பெருங்காப்பியம்பாடியமையால், திருக்குருகைப் பெருமான் கவிராயர் என்று புனைபேர் சிறந்தது என்றும் அறிகின்றோம்.

இப்பாயிரமும் இவரை வணிகன் என்றே கட்டுகின்றது. பூவணிகர் (நிலம் உழுவோர்), கோவணிகர் (பசு வளர்ப்போர்), தனவணிகர் (வர்த்தகம் செய்வோர்) என வணிகர் மூவகைப்படுவர். அவருள் நிலம் உழுவோராகிய பூவணிகரே வேளாளர் ஆவர்.

மாறன் அகப்பொருள் என்ற நூலையும் இவரே செய்துள்ளார். அதன் சிறப்புப் பாயிரத்திலும்,

''மாறன் அகப் பொருளை
வகுத்துரைத்தான் ஆய்ந்து
சடையன்எனும் இயற்பெயரோன்
தமிழ்நா விறன் சார்குருகைப்
பெருமான்சீர் வணிகன் தானே''

என்று இச்செய்தியை மறவாமல் குறிப்பிடுகின்றார்.

இதுமட்டுமின்றி, மாறன் அலங்கார உரையில் ஒவ்வோ ரியல் இறுதியிலும் உள்ள பாடல்,

''கவிராய ராயன் சடையன் அன்பால்
புனை அலங்காரம்''

என்று இவர் இயற்பெயரையே தொடர்ந்து குறிப்பிடுகின்றது.

இவர் அருட்செல்வராக மட்டுமன்றிப் பெரும் பொருட் செல்வராகவும் கொடைச்செல்வராகவும் இருந்துள்ளார் என்று கருதவும் சான்று உள்ளது.

பொருட்செல்வரைப் புகழ்ந்து கவிபாடிப் பரிசு பெறுவது அக்காலத்துப் புலவர் வழக்கம்.

யாரோ ஒரு கவிஞர், இவரிடம் பரிசு பெறுவதற்காக அகப் பொருட்பாடல் ஒன்று பாடியுள்ளார். அது தனிப் பாட லாகக் கிடைத்துள்ளது.

''நேற்றும் பிறந்து வருபாவி யான
நிலாநெருப்புக்கு
ஆற்றும் படிதொங்கல் தந்தில னே!அருட்
கூடற் சங்கம்
தோற்றும் படிசொன்ன சொல்நாற்பத் தொன்பதை
ஐம்பது என்று
சாற்றும் திருக்குரு கைப்பெரு மாள்நம்
சடைக்குட்டியே!''

இந்தத் தனிப்பாடலிலிருந்து, அவருக்குச் சடைக்குட்டி என ஒரு செல்லப்பெயரும் இருந்துள்ளது என்ற புதுச் செய்தியும் கிடைக்கின்றது.

இவர் வாழ்ந்த காலத்தை இவர் செய்த குருகா மான் மியம், மாறன் அகப்பொருள் என்ற இருநூல்களின் பாயிரத் தால் தெளிவாக அறிந்து கொள்கின்றோம்.

"அறம்திகழ் ஆண்டு அவைஎழுநூற்று இருபான் மூன்றில்
அணிகிளர்கார்த் திகைமாதம் எட்டில் வாழ்வு
சிறந்திடுதிங் களின்நாள்உத் தரத்தில் ஏகா
தெசிமகர முகூர்த்தம்இவை திருந்த முற்றத்
துறந்தவர்ஒன் மகிழ்மாறர் திருமுன் ஆதிச்
சுருதியுடன் மிருதியும்சொல் தமிழின் வாய்மை
பிறந்தபெருங் காப்பியமும் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுடன் அரங்கேற்றப் பெற்ற தன்றே"

இது குருகை மான்மியப் பாயிரப் பாடல். இதிலிருந்து இந் நூல் அரங்கேற்றிய காலம் கொல்லம் 723. (கி.பி. 1548) கார்த்திகை எட்டாம்நாள் என்று அறிகின்றோம்.

இதேபோல், மாறன் அகப்பொருள் பாயிரத்திலிருந்து, அந்நூல் செய்தகாலம் கொல்லம் 727. (கி.பி. 1552) என்று அறிகிறோம்.

வைணவர் சைவப்பெருமக்கள் தம்பேச்சிலும் எழுத்திலும் இலக்கண மேற்கோள் காட்டநேரும்போது தொல்காப்பியம், சங்கநூல்கள், திருக்குறள்முதலிய சமயப் பொது நூல்களிலிருந்தும் தத்தம் சமய நூல்களிலிருந்துமே எடுத்தாள்வதற்கு விரும்புவர்.

ஆனால், தாம் கருதிய மேற்கோள்களெல்லாம் அவற்றுட் கிடைப்பதில்லை. அதன் பொருட்டுச் சமணர் முதலிய புறச்சமயத்தினர் பாடல்களை மேற்கோளாகக் காட்டும் கட்டாயம் ஏற்படுவதுண்டு.

அந்தக் குறையைப்போக்க விரும்பினார், திருக்குருகைப் பெருமாள் கவிராயர்.

அதுகாறும் இருந்த அணியிலக்கணங்களெல்லாம் வடமொழியைத் தழுவியோ மொழிபெயர்த்தோதான் வழங்கி வந்தன.

அவ்வாறின்றி முழுவதும் தமிழ்மரபுக்கு ஏற்றபடி மாறன் அலங்காரம் என்ற அணியிலக்கணம் ஒன்று படைத்தார் அவர்.

அகப்பொருளுக்கு மேற்கோளாக அமையும்படி மாறன் அகப்பொருளும் அதற்கு இலக்கியமாகத் திருப்பதிக்கோவையும் புனைந்துதவினார்.

மாறன் அலங்காரத்தில் கூறப்பட்ட அணிகள் அனைத்துக்கும் எடுத்துக்காட்டு அமையுமாறு குருகா மான்மியம் என்ற பெருங்காப்பியம் படைத்தார். பலப்பல யாப்பு வகைகளும் புதுவகைக் கற்பனைகளும் வகைவகையான வண்ணங்களும் (சந்தங்களும்) தொட்டஇடம் எங்கும் சுவை சொட்டும்படி அமைந்த விரிவான காவியம் அது. கம்பன் பாடல்களைப் போன்ற கற்பனைகள் நிரம்பியிருப்பினும், சங்கத் தமிழ் போன்ற மிடுக்கான நடையில் அமைந்த காவியம் அது. பிற்கால இலக்கணங்களைத் தழுவாமல், பெரும்பாலும் தொல்காப்பியத்தையே தழுவி எழுந்த படைப்பு அது.

இதுகாறும் சொன்ன

மாறன் அலங்காரம்
மாறன் அகப் பொருள்
திருப்பதிக் கோவை
மாறன் பாப்பாவினம்
குருகை மான்மியம்

என்ற இலக்கண இலக்கிய நூல்களைத் தவிர,

நம்பெருமாள் மும்மணிக்கோவை
மாறன் கிளவிமணி மாலை
திருப்பதிக் கலம்பகம்

முதலிய நூல்களும் செய்திருக்கின்றார். ஆனால் அவை இப்போது கிடைக்கவில்லை. அவற்றிலிருந்து இரண்டொரு செய்யுட்கள் மாறனலங்கார உரையில் எடுத்தாளப்பட்டுள்ளமையாலேயே அந்நூல்களின் பெயரை அறிகின்றோம்.

பிறப்பால் வைணவராகிய இவர், இராமாநுசருக்கும் மணவாளமாமுனிகளுக்கும் காப்புப் பாடியிருப்பதனால் தென்கலை வைணவர் என்பது தெளிவாகின்றது.

இளமையிலேயே இலக்கண இலக்கியப் புலமை பெற்றுக் கருவிலே திருவுடையரான இவர்தம் ஞான ஆசாரியர் சீநிவாசச்சீயர் ஆவார்.

அந்தச் சீயர் திருப்பதி மடத்திலிருந்துவந்து, குருகூரை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தவர். அங்கு, மணவாள மாமுனிகளின் ஆசாரியரான திருவாய்மொழியாழ்வான் என்னும் திருவாய்மொழிப்பிள்ளை ஒரு மடம் நிறுவி யிருந்தார்.

அந்த மடம் உடையவர் சந்நிதியில், எம்பெருமானார் சீயர் மடாதீனம் எனப் பெயர் பெற்று விளங்கியது. அந்த ஆதீன பரம்பரையில் அதிபராக ஆட்சி நடத்தியவர் சீநிவாச சீயர்.

சீநிவாசசீயர் திருமலையிலிருந்து வருகையில் திருமலைச் சீனிவாசன் திருவுருவத்தைத் தம்முடன் கொண்டுவந்தார். இன்றும் அத்திருவுருவம் அந்த மடத்தில் உள்ளது. அதற்குப் பூசை முதலிய வழிபாடுகள் தவறாமல் நடந்துவருகின்றன என்று ஆழ்வார் திருநகரித் திருப்பணி மாலைஎன்ற நூலால் அறிகின்றோம்.

சீனிவாசசீயர் எம்பெருமானார் திருமடத்தில் உடையவர் சந்நிதிக்குத் திருப்பணிகள் செய்துள்ளார் என்று, அந்தத் திருப்பணிமாலை கூறுகின்றது.

''இவர்ந்தபூ தூர்எதி ராசன் கோவிலை
உவந்துஅமைத்து அழகும்கண்டு உலகின் ஓங்கிமுன்
சிவந்தபங் கயமுகன் சீனி வாசமா
தவன்திரி கோல்கொள்மா தவர்கி ரீடமே''

என்பது, இச்செய்தி குறிக்கும் செய்யுள்.

தென்மொழி, வடமொழி (உபய) வேதாந்த வல்லுந ராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயர் தம் ஞான ஆசிரியரைத் தம் நூல்களில் பல இடங்களில் நினைவு கூர்கின்றார்.

மாறன் அலங்காரத்தில் காபாலிகாந்திய பாடாண் திணை குரவன் வாழ்த்துத்துறைக்கு மேற்கோளாகத் தந்த ஒருபாடலும் வாகைத் திணையில் தாபத வாகைத்திணைத் துறைக்கு மேற் கோளாகத் தந்த பாடலும் சீநிவாச சீயருக்குப் புகழாரமாக உள்ளன.

கவிராயர், சீநிவாச சீயரிடம் உபதேசம் பெற்றபின், நம்மாழ்வார் புகழல்லால் வேறொன்றிலும் நாட்டம் வைக் காமல், நம்மாழ்வார் பெயரிலேயே சில இலக்கண, இலக்கிய நூல்கள் செய்து கொண்டு வாழ்ந்திருந்தார்.

பழைய நூல்கள் அனைத்தும் தேடித்தொகுத்து, ஒரு கல்விக்களஞ்சியம் (நூல்நிலையம்) அமைத்திருந்தார் என்றும் தெரிகின்றது.

வேறொரு வேளாள மரபினர் திருக்குருகைப்பெருமாள் கவிராயர் என்ற பெயருடன், ஆழ்வார் சந்நிதியில் திருப்பணி மாலை படிக்கும் உரிமை பெற்றிருந்தனர்; இருக்கின்றனர் என்று மாறன் அலங்காரப்பதிப்பு ஒரு செய்தியைத் தருகின்றது. அந்த வேளாள மரபினர் இந்தக் கவிராயர் மரபினராகவே இருக்கலாம் என்று கருதுவது தவறு ஆகாது.

கவிராயர் தோன்றியமையால் அவர் மரபினர் இத்தகு சிறப்பு, வழிவழியாகப் பெற்று வருகின்றனர் என்று கொள்வது பொருத்தந்தானே!

மாறன் பாப்பாவினம் இயற்றியவர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் அல்லர். மாறன் அலங்கார உரை

யாசிரியர் ஆகிய பேரைக் காரிரத்தினக் கவிராயரே என்று மாறன் அலங்கார நூல் முகவுரையில் திரு ஆ.மா. சடகோப ராமாநுசாச்சாரியார் குறிப்பிட்டுள்ளார்.

அக்கருத்து தவறு என்பதற்கு. மாறன் பாப்பாவின நூலை முதன்முதலில் பதிப்பித்த தி. கி. இராமாநுச ஐயங்கார் விரிவான ஆதாரங்கள் தருகின்றார்.

"இந்நூல் செய்யுட்களின் நடைமுதலியவை, மாறன் அலங்கார உதாரணச் செய்யுட்களின் நடை முதலியவற்றை ஒத்தனவாய் இருத்தலி னாலும், மாறன் அலங்காரத்துள் உதாரணமாக எடுத்தாளப் பட்டனவும் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றியனவுமான குருகைமான்மியச் செய்யுட்களில் சிலவும் நம்பெருமாள் மும்மணிக் கோவைச் செய்யுட்களும் வேறு பல செய்யுட்களும் இந்நூலுள் காணப்படுதலாலும் இது மாறன் அலங்கார ஆசிரியராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயராலேயே தொகுத்தியற்றப் பட்டிருக்க லாம்.

"மேலும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் தமிழ் இலக்கணம் ஐந்தனுள், செய்யு ளைப் பற்றி வருவன பொருளும் அணியும் ஆகும்.

"அவற்றுட் பொருளிலக்கணத்துட் பிற்காலத்துப் பயிற்சி குன்றிய புறப்பொருட்பகுதி ஒழித்து. அகப்பொருள் பற்றி மாறன் அகப்பொருளும் அணி யினுட் பொருளணி சொல்லணி ஆகிய எல்லாம் அடங்க மாறன் அலங்காரமும் தம் ஈடுபாடு தோன்றப் பகவத் பாகவத விஷயமாக உதாரணச் செய்யுட்களுடன் வேண்டுவ கூட்டி, விரித்து இயற்றிய திருக்குருகைப் பெருமாள் கவிராயர்

> அவ்வாறே பொருளும் அணியும் ஆகிய அவற்றுக்கு இடனாய் விளங்கும் யாப்பிலக்கணம் அமைய இதனை (மாறன் பாப்பாவினம்) இயற்றினர் என்று யூகித்தலும் பொருந்துவதாம்''

என்பன அவர்தரும் ஆதாரங்கள்.

கவிராயரின் நூல்களில் இது இறுதியானது போலத் தோன்றுகின்றது.

பின்னும் வேண்டுவன கூட்டியும் திருத்தியும் விரித்தும் செம்மை செய்து கொள்வதற்கேற்ப மூற்பட வரைந்த வரைவேயாய் இந்த ஏடு தென்படுகின்றது.

> ''இனிக் கோயிற் கலம்பகத்துள் 'கரை பொருது ஒழுகும் காவிரியாறே' என்னும் அகவல் போல இடையிடையே தனிச்சொற் பெற்று, முதலே அடி ஐந்து அந்தாதிப்பதாக ஓர் அகவல் பாடவேணும். இரண்டாவது இவ்விரண்டடியாய் ஏழும் எட்டுத் தானமாய் ஒன்பதாம் தானம் நேரிசையாசிரியப் பாவாய்ப் பாட வேணும்''

என்பது கவிராயர் ஓர் ஏட்டின் இறுதியில் எழுதியுள்ள குறிப்பு.

அவர் விருப்பம் நிறைவேறியதாகத் தெரியவில்லை. எடுத்துக் கொண்ட இந்நூல் செம்மை செய்வதற்கு முன்பே திருநாடு அலங்கரித்து விட்டார் போலும் என்று எண்ணத் தோன்றுகின்றது.

# பாட்டுடைத் தலைவர் வரலாறு

திருமால் குடிகொண்ட திருத்தலங்கள் ஒன்பது திருநெல்வேலிக்கு அருகில் உள்ளன. அவை நவதிருப்பதிகள் என்று அழைக்கப் பெறுவன.

அவற்றுள் ஒன்று திருக்குருகூர், தாமிர வருணி நதியின் கரையிலே உள்ளது அத்திருப்பதி.

தொல்பொருள் ஆய்வுத்துறையினர் பூமியை அகழ்ந்து பண்டைக் காலத்து நாகரிகச் சின்னங்கள் பலவற்றை எடுத்த ஆதித்த நல்லூருக்கு எட்டு கி. மீ. தொலைவில் உள்ளது திருக்குருகூர்.

பலசமயத்தினரும் போற்றிக் குடி கொண்ட திருத்தலம் அது. சைவப்பெருமக்கள் நவலிங்கபுரம் என்று அதனை அழைத்தனர்.

சமண தீர்த்தங்கரர்களில் முதல்வர் ஆதி பகவன். ஆதி நாதர் என்றும் அவரை அழைப்பர். இத்திவ்விய தேசத்தில் வீற்றுள்ள திருமால் திருப்பெயர் ஆதிநாதர் என்பதாகும்.

இவ்வூருக்கு அருகே சமணன் திடர் என ஓர் இடம் இருந்ததாகக் கூறுவர். ஆதலால் சமணர்களுக்கும் புனிதத் தலமாக விளங்கியது திருக்குருகூர் எனலாம்.

இதைச் சுற்றியுள்ள பகுதி, வழுதிவள நாடு என அழைக்கப்பட்டது. பாண்டியர் ஆட்சிக்கு உட்பட்டதாக இருந்தமையால், அப்பெயர் பெற்றது.

காரியார் என்ற குறுநிலமன்னர், இப்பகுதியை ஆண்டு வந்தார்.

திருவண்பரிசாரம் என்பது, மலைநாட்டிலுள்ளதோர் திருப்பதி. அது இப்போது திருப்பதிசாரம் என மருவி வழங்கப்படும் சிற்றூராக உள்ளது.

அவ்வூரினர் திருவாழ் மார்பர். அவர்தம் திருமகளார் உடைய நங்கை. காரியார், உடைய நங்கையை மணந்து இல்லறம் நடத்தி வந்தார். நெடுநாள்களாக மகவில்லாக் குறையால் வருந்திய தம்பதியர், திருக்குறுங்குடி இறைவன் அருளால் ஓர் ஆண்மகவைப் பெற்றனர். பிறந்த மகவு அழவில்லை; பால் உண்ணவில்லை. எனினும் உடல் வாட வில்லை. கைகால் அசையாமல் இருந்தபடி இருந்தது; கிடத்தியபடி கிடந்தது. வளர்ச்சி மட்டும் இருந்தது.

இந்த அதிசயம் கண்ட பெற்றோர். பிறந்த பன்னிரண் டாம் நாளில், ஆதிநாதர் ஆலயத்துக்குக் குழந்தையை எடுத்துச் சென்றனர்.

அங்கு, இறைவன் முன் தண்டனிடும் படி குழந்தையைக் கிடத்தினர். என்னே அதிசயம். அதுகாறும் அசையாமல் இருந்த குழந்தை, தவழத் தொடங்கியது. தவழ்ந்து போய்ப் புளியமரத் தடியில் யோகாசனமிட்டு அமர்ந்து கொண்டது.

குழந்தையின் செயலைக்கண்ட பெற்றோர் மகிழ்ந்தனர். வீடு திரும்பும்போது குழந்தையை எடுத்துக் கொள்ள முயன்றனர். அசைக்கவே முடியவில்லை. பலமுறை முயன்றும் தோல்வியே கண்டனர்.

பெற்றோர், அக்குழந்தைக்கு அருகிலேயே பாதுகாவலாக இருந்து வந்தனர். அவர்கள் வேறு என்ன தான் செய்வர்?

வளர்ச்சிமட்டும் குறையாமல் அந்த நிலையிலேயே பதினாறு ஆண்டுவரை மௌனத்துடன் இருந்தது அக் குழந்தை.

திருக்குருகூருக்கு அருகில் உள்ளது திருக்கோளூர். அதுவும் நவதிருப்பதிகளில் ஒன்று. அங்குப் பிறந்தவர் மதுரகவியார். ஞான விடாய் கொண்ட அவர், பாரத நாடு முழுதும் பயணம் மேற் கொண்டார் பண்டிதர்களையும் பக்தர்களை யும் அணுகி, ஞானோபதேசம் பெற முயன்றார் ஆத்ம சாந்தியைக் காட்டக் கூடிய ஆசாரியனைத் தேடித்தேடி அலுத்தார்.

இறுதியில் சரயு நதிக்கரையில் அமைந்த சாகேதபுரி என்னும் அயோத்தியை அடைந்தார். அங்கேயே தங்கி யோக நிலையில் நிலைக்கலானார்.

"எவ்வளவு காலமாக அலைகின்றேன். என் குறிக்கோள் வீண்தானா? இனி என்ன செய்வது" என்ற ஏக்கப் பெரு மூச்சுடன் தம் ஊர் இருந்த திசையை நோக்கினார். இரவு நேரம் அது. அந்த இரவில் தென்திசையில் சூரியன் உதித்தது போன்ற பேரொளிக் காட்சி! அந்தப் பேரொளி யாது? என அறியும் ஆவல் அவரைத் தூண்டியது.

அந்த ஒளியையே குறியாகக் கொண்டு தென்திசை நோக்கி நடக்கலானார். பகலில் ஓய்வெடுத்து இரவெல்லாம் நடந்தார்.

அருகிலே இருப்பதுபோல் தோன்றிய சோதி, நடக்க நடக்க எட்டியே சென்றது. விடாமல் நடந்து தாமிரவருணிக் கரையை அடைந்தார். அங்கிருந்த குருகூரில் அச்சோதி முடிவடைந்தது. ஆலயத்துக்கு அருகே சென்று, 'இவ்வூரில் ஏதேனும் அதிசயம் உண்டோ' என்று வினவினார். மக்கள் புளியமரத்தைக் காட்டினர்.

அங்கே ஓர் இளஞாயிறு பத்மாசனத்தில் கண்கள் மூடிய வாறு யோகத்தில் இருந்தது. அந்த ஞாயிற்றின் முகத்தி லிருந்து ஞானஒளி வெள்ளம் நாலுதிசைகளிலும் பொங்கிப் பிரவகிப்பதுபோலத் தோன்றியது.

இந்த இளஞான ஞாயிறு கண்திறந்து பார்க்குமா? பேசுமா? என்று அறிய விரும்பினார் மதுரகவி.

ஒருசிறுகல் எடுத்து, அதன் அருகே விழும்படி எறிந்தார். கல்விழும் ஓசைகேட்டதும் அந்த இளஞாயிறு கண்விழித்தது. அந்தப் பார்வையிலேயே தன் குறிக்கோள் நிறைவேறியதாக உணர்ந்தார் மதுரகவி.

''செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால்
எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?''

என்று ஓர் வினாமலரை அந்த இளஞ்சூரியனுக்குச் சமர்ப்பித்தார்.

''அத்தைத் தின்று அங்கே கிடக்கும்''

என்று முதல்முதலாகத் திருவாய் மலர்ந்தது அந்தத் தெய்விகத் திருவடிவம்.

பொருள் பொதிந்த வினாவிற்கு அருள் பொதிந்த விடை கிடைத்தது.

'நாம் தேடிய ஆசாரியன் இவரே' என்று அவர் திருவடிகளில் அடைக்கலமானார் மதுரகவி.

அதுமுதல் ஆசாரிய கைங்கரியம் செய்து கொண்டு அங்கேயே தங்கிவிட்டார் மதுரகவி.

உலகர் இயல்போடு மாறுபட்டு இருந்தமையால் மாறன் என்ற பெயர் அவருக்கு வந்தது என்பர் சிலர்.

மாறன் என்பது பாண்டிய மன்னன் பெயர். பாண்டியர் மரபினர் ஆதலின் மாறன் எனப் பெயர் பெற்றார் என்பர் சிலர்.

குழந்தைகள் பிறக்கும்போது ஞானத்துடன்தான் பிறக்கும். அப்போது சடம் என்ற மாயை, வாயு உருவில் வந்து குழந்தையின் அறிவை மறைக்கும் என்பது ஆன்றோர் கொள்கை. இந்த ஞானக்குழவி பிறந்தபோதும் அந்தச் சட வாயு இவரை அணுக வந்தது. இவர் ஹூங்காரம் செய்து, அதனை விலகிப்போகச் செய்தமையால், சடகோபன் என்ற பெயர் இவருக்கு வந்தது என்பர் சிலர்.

இறைவன் இவரை நம் ஆழ்வார் என்று அபிமானம் செய்தமையால் நம்மாழ்வார் ஆனார் என்பர் சிலர். காரியார் மகன் ஆதலால் காரிமாறன் என்ற பெயரும் இவருக்கு உரிமையானது. குருகூரர், பராங்குசன், நாவீறன், பொருநைத் துறைவர், குமரி கொண்கன் முதலிய பல பெயர்களும் அவருக்கு உண்டு.

தாமிரவருணியின் கரையில், அப்பன் கோவில் என்று ஓர் ஆலயம் உள்ளது. அது காரியாரின் அரண்மனை இருந்த இடம். அங்கு நம்மாழ்வார் அவதார ஸ்தலம் என்று எழுதப் பட்ட ஓர் மேடை உள்ளது.

காரியாரும் உடைய நங்கையும் அர்ச்சை வடிவில் எழுந்தருளி அருள் பொழிந்து வருகின்றனர்.

அந்த ஆலயத்துக்கு அருகே காரியாருக்கு எண்ணாயிரம் கோட்டை விதைப்பாடு நன்செய்நிலம் இருந்ததாம். ஒரு கோட்டை விதைப்பாடு என்பது சற்றேறப்ப இரண்டு ஏக்கருக்குச் சமம் என்பர். அங்குள்ள ஒரு மேட்டுக்குக் காரி மண் களம் என்று பெயர் சூட்டியுள்ளனர். காரி என்னும் அரசருக்குரிய நெல் களம் என்பது அதன் பொருள்.

ஆழ்வார் பிறந்தமையால், திருக்குருகூர் ஆழ்வார் திருநகரி என்று பெருமை பெற்றது.

ஆசானாகிய ஆழ்வார் இளைஞர். குலத்தில் தாழ்ந்த வேளாளர். பள்ளிப் படிப்பு இன்னதென்று அறியாதவர் உலகியல் தெரியாமல் தெரிந்துகொள்ள வாய்ப்பில்லாமல் — புளியமரத்தடியிலேயே இருந்தவர்.

சீடரோ வயது முதிர்ந்தவர். வேதம் உபநிஷதம் முதலிய அனைத்துக் கலைகளும் கற்றவர். தமிழர்க்கு இரு கண்களாகிய தமிழும் வடமொழியும் கற்றவர். இனிய கவி பாடும் திறமையால் மதுரகவி எனப் பெயர் பெற்றவர். பிறப்பால் அந்தணர். உலகம் சுற்றி அனுபவ முதிர்ச்சி எய்தியவர். வேளாளரை ஆசானாகக் கொண்டு, அடி பணிந்து ஓர் அந்தணர் தொண்டு செய்தார் என்பது அக் காலத்து எண்ணிக்கூடப் பார்க்க முடியாத ஒருநிலை.

மதுரகவியாரின் அன்புக்கு உவந்த ஆசாரியன் தத்துவ சாரங்களையெல்லாம் உபதேசம் செய்யக் கருதினார். தாமிர வருணியின் வெள்ளம்போல் கவிதை வெள்ளம் தொடர்ந்து அந்தாதியாகப் புறப்பட்டது. ஆசிரியன் திருவாய் மலர்வன அனைத்தும் சீடர் ஓலையில் எழுதிவரலானார். ஆசிரியரின் உபதேசம் நான்கு பிரபந்தங்களாக உருவானது.

திருவாய்மொழி
பெரிய திருவந்தாதி
திருவாசிரியம்
திருவிருத்தம்

எனப் பெயர் பெற்ற பிரபந்தங்கள் நான்கும், நான்கு—வேதங்களின் சாரமாக விளங்கின.

வடமொழி வேதங்களில் ஆங்காங்கே தோன்றும் ஐயங்கள் அனைத்தும் நம்மாழ்வார் பாசுரங்கள் படித்தால் தீர்ந்துபோயின. ஆதலால் தெளியாத மறைநிலங்கள் தெளி கின்றோம் என்று பிற்காலச் சான்றோர் பாராட்டலாயினர்.

இராமாநுசர் நம்மாழ்வார் பாசுரங்களைக் கொண்டே விசிட்டாத்வைதம் என்ற ஒரு புதிய தத்துவத்தை உலகுக்கு அறிமுகப்படுத்தினார். கன்னியாகுமரி முதல் காஷ்மீரம் வரை பரப்பினார். ஆலயங்களில் நுழைவதற்குத் தடை விதிக்கப்பட்டிருந்த தமிழுக்கு, ஆலயப் பிரவேச உரிமை கிடைத்ததும் ஆலயத்துக்குள்ளிருந்த வடமொழி ஆதிக்கம் தகர்ந்து, இரண்டாவது இடத்துக்குத் தள்ளப்பட்டது. அதுமட்டுமா? மேலக்கோட்டை முதலிய சில ஊர்களில் நாலாம்வருணத்தவரும ஆலயப்பிரவேச உரிமை பெற்றனர்; தீர்த்தக்குளத்தைப் பயன்படுத்தவும் அனுமதிக்கப்பட்டனர்.

பிறப்பால் உயர்வு இல்லை. அந்தணராயினும் அன்பு (பக்தி) இல்லாதவன் சண்டாளனே! பஞ்சமனாயினும் அன்பு இருந்தால் அவன் நாம் வணங்கும் தெய்வமே என்ற புரட்சியை நம்மாழ்வார் வாக்கு நாடெங்கும் முழங்கியது.

தமிழுக்கும் தமிழர்க்கும் பெருமை தரவும் உண்மையான பக்திநெறியை அறிமுகப்படுத்தவும் அவதாரம் செய்தார் ஆழ்வார். அவதாரத்தின் நோக்கம் முடிந்ததுபோலும்! இளமை மாறு முன்பே திருநாடு அலங்கரித்தார்; இவ்வுலகை நீத்தார். நானும் உடன் வருவேன் என்ற சீடரை, இன்னும் சிறிது காலம் இருந்து, இந்தத் தமிழ் மறையை நாடெங்கும் பரப்பு என்று மரகவிக்கு ஆணையிட்டார் நம்மாழ்வார்.

அவர் பிரிவைத் தாங்க முடியாத சீடர் மீளாத்துயரில் ஆழ்ந்தார். ஆயினும் ஆசான் ஆணையை மீற இயலுமா? ஆசான் படைப்புக்களைப் பரப்புவதே தம் கடமையாகக் கொண்டு, பின்னர் சிறிது காலம் வாழ்ந்து. ஆசான் சென்ற இடத்துக்குப் புறப்பட்டார்.

## நம்மாழ்வார் அறிவுறுத்திய கொள்கைகளில் சில

உழைப்பாலேயே உயர்நலம் வரும்

உடல்வருந்தி உழைக்கவேண்டும்

உடல் வலுவில்லாதவர் ஏதாவது கைத்தொழில் செய்யலாம்.

இல்லை என்று செல்வரிடம் பல்லை இளிப்பது இழிவு.

தகுதியில்லாதவரைப் பொருளுக்காக முகஸ்துதி செய்தலாகாது.

நாட்டில் பசி, பட்டினி, பகை, வியாதி முதலியன இல்லாமல் இருக்கப் பணி செய்ய வேண்டும்.

இறைவன் உளளான்.

அவன் திருடனைப்போல் எங்கோ மறைந்திருக்கவில்லை.

உலகிலுள்ள ஒவ்வோரணுவிலும் அவனைக் காணலாம்.

வறுமை, செல்வம், நரகம், சுவர்க்கம், பகை, நட்பு, நஞ்சு - அமுதம் ஆகிய எதிர்மறைப் பொருள்கள்கூட அவன் வடிவங்களே!

உலகம் முழுவதும் இறைவன் செல்வம். ஆதலால் உலகினைப் பொய் என்றோ, மாயம் என்றோ, கொடியது என்றோ வெறுக்கலாகாது.

உலக உயிர்கள் அனைத்துக்கும் அவன் முதற்காரணம். ஆகையால் அவனைத் தந்தை எனலாம்.

அவன் தந்தையானால் அவன் மக்களாகிய நாமெல்லாம் சகோதரர்களே!

சகோதரர்களுக்குள் உயர்வு தாழ்வு கருதலாமா?

பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை.

அன்பு உள்ளவர்கள் எப்பிறப்பினராயினும் அவர்கள் நாம் வணங்கத்தக்கவர்கள். அன்பு இல்லாதவர் அந்தணரா யினும் அவர்கள் புலையர்களே!

இறைவன் உருவமாகவும் உள்ளான். அருவமாகவும் உள்ளான். ஞானிகள் அருவத்தை வழிபட இயலலாம.

சாதாரண மக்களின் மனம் உருவத்தில்தான் ஈடுபட இயலும். அதற்காகவே அவன் எங்கும் அர்ச்சை வடிவாக உள்ளான்.

வீடு (மோட்சம்) என்பது எங்கோ இல்லை. அகங்காரம் ஒழிந்தால், இன்றே இப்போதே அந்த வீடு இங்கேயே வந்து விடும். இறைவனும் மடிதற்று முன்நிற்பான்.

மக்களின் துன்ப வாழ்வு கலியுகம் எனப்படும்.

மக்களின் இன்ப வாழ்வு கிருதயுகம் எனப்படும். இறைவனைப் பற்றிய உண்மையை உணர்ந்துகொண்டால் கலியுகம் கெடும். கிருதயுகம் மலர்ந்துவிடும்.

(இக்கருத்தைப் பாரதியார் பெரிதும் வற்புறுத்தி யுள்ளார்).

உலகிலுள்ள பல தெய்வங்களும் நாராயணனே! சிவ பெருமான் நாராயணனது வலப்பாகமாக உள்ளான். அவரவர் தகுதிக்கேற்ப வழிபடும்படி, இறைவன் ஒருவனே

பல தெய்வங்களை ஆங்காங்கே நிறுவியுள்ளான். அனைத்துத் தெய்வங்களுக்கும் அந்தர்யாமியாக இருப்பவன் இறைவன் ஒருவனே! ஆதலால் தெய்வங்களுக்குள் உயர்வு தாழ்வு இல்லை.

உலகிலுள்ள ஏற்றத் தாழ்வுகள் நாமே ஏற்படுத்திக் கொண்டவைகள். நாம் படைத்த சிக்கலை நாமே தீர்த்துக் கொள்ள இயலும்.

நான் எனது என்ற அகங்கார மமகாரங்கள்தாம் நம் இழிநிலைக்கும் இன்னல்களுக்கும் காரணம். நான் எனது என்ற சொல்லைக்கூட உச்சரிப்பது கூடாது.

பலனில் பற்று வைக்காவிடின் நாம் செய்யும் செயலால் வரும் நல்வினை தீவினைகள் நம்மைப் பாதிக்கமாட்டா!

இதுகாறும் கூறிய கருத்துக்களை நோக்கும்போது சமயக் காழ்ப்புக்கு இடமில்லை என்பது நன்கு விளங்கும். மொழி வெறி, இனவெறி, சாதி வெறி முதலிய வெறிகள் தலை காட்டவும் வழியில்லை.

நம்மாழ்வார் பக்தி மார்க்கத்தில் ஒரு புரட்சியை உருவாக்கியவர்.

இறைவன் நாமத்தைச் சொன்னால் போதும். அனைத்துச்செல்வமும் வரும். நினைத்தவை கைகூடும் என்று அனைத்துச் சமயங்களும் கூறுகையில், உழைத்தால்தான் உயர்வு வரும் என்று புரட்சிக்குரல் எழுப்பியவர் நம்மாழ்வார்.

உலகுக்கே பொதுவான கருத்துக்களை வழங்கியமையால்தான், நம்மாழ்வார் ஞானச்சிகரம் என்று போற்றப்படுகின்றார். சைவசமயத்தாரும் நம்மாழ்வாரைப் போற்றுகின்றனர். தத்துவராயசுவாமிகள், தண்டபாணி சுவாமிகள் முதலிய பிறசமயத்தார் நம்மாழ்வார்க்குத் தரும் பெருமை சொல்லால் சொல்லும் தரமன்று.

# பாயிரம்

என்றும் திருமாற்கே ஆள்ஆவேன். எம்பெருமான்
என்றும் எனக்கே பிரான்ஆவான்.—என்றும்
பிறவாத பேராளன் பேர்ஆ யிரமும்
மறவாது வாழ்த்துகஎன் வாய்!

ஆள் - அடிமை. பிரான் - தலைவன். பிறவாத பேராளன் - சேதனர்போல் வினைவசப்பட்டுப் பிறவாத பெருமையன்.

தேவர் திருவள் ளுவர்புலமைச் செல்வத்தால்
யாவர்இணை என்பார் இசைத்தகுறட்—பாவினையும்
பாடினேன் பாப்பா வினம்பாடப் புல்லறிவால்
நாடினேன் என்பதனால் நான்.

என்பார் - திருவள்ளுவர். நாடினேன் - விரும்பினேன். பாப்பாவினம் - பாவும் பாவினமும். பாப்பாவினம் பாடப் புல்லறிவால் நாடினேன் என்பதனால் நான், ......என்பார் இசைத்த குறட்பாவினையும் பாடினேன் என்று கூட்டுக.

குறட்பா வள்ளுவர்போல் பாட எவராலும் இயலாது என்பதை அறிந்திருந்தும் பாவும் பாவினமும் பாட விரும்பியமையால், அவர் பாடிய குறட்பா யாப்பில் நானும் பாட நேர்ந்துள்ளது என்பது அவையடக்கம்.

# பா—பாவினம்

## வெண்பா வகை

### ஒரு விகற்பக் குறள் வெண்பா

திருமகளோ பார்மகளோ தென்னரங்கன் வெற்பில்
வருமகளோ யாரோஇம் மாது! 1

அடிதோறும் முதலெழுத்துக்கு அயல் எழுத்து 'ருகரம்' வந்தமையால் இஃதுஒரு விகற்பக் குறள்வெண்பா. இரண்டடிகளிலும் பொழிப்பு மோனை வந்துள்ளது. வகரத்துக்கு மகரம் மோனையாக வரும் அனுஎழுத்து. காசு என்ற வாய்பாட்டில் முடிந்தது. இஃது அகத்துறைப் பாடல். ஐயுறல் என்னும் துறை. தலைவன் ஒரு தலைமகளைக் கண்டு ஐயுற்றுக் கூறியது.

(இஃது ஒரு விகற்பக் குறள் வெண்பா. அலங்காரம் - சந்த சந்தயம். பகுதி - இயற்கை. துறை - ஐயுறல்.)

### இருவிகற்பக் குறள் வெண்பா

மாதர் இலவிதழ்போல் மாண்பிற்றோ மாதவனால்
வானோர் அருந்து மருந்து. 2

முதற்குறள் போல் அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றாக வாராமல், வேறுபட்டு வந்தமையால், இஃது இருவிகற்பக் குறள் வெண்பா எனப்படும். முதலடியில் ஒன்று, மூன்று; நான்காம் சீர்களில் மோனை வந்துள்ளது. இஃது ஒரூஉ மோனை எனப்படும். பிறப்பு என்னும் வாய்பாட்டில் முடிந்தது.

மாதர் - அழகிய பெண். இலவிதழ் - செம்முருக்கம் பூப்போன்று செவ்விய இதழ். இஃது ஆகுபெயராய் இதழில் ஊறிய நீரைக் குறித்தது. மருந்து - தேவாமுதம். கடல் கடைந்து திருமாலால் தேவர்களுக்குத் தரப்பட்டமையின் மாதவனால் எனப்பட்டது. தலைவியைக் கூடிய தலைவன் அவ் இன்பத்தைப் புகழ்ந்து கூறுதலின் இது புணர்ச்சியின் மகிழ்தல் என்னும் துறையாகும்.

இதழுக்கு இலவு உவமையாகக் கூறியமையால் அவயவ உவமையானது.

(இஃது இரண்டு விகற்பக் குறள் வெண்பா. அலங்காரம்- அவயவ உவமை. பகுதி - இயற்கை. துறை - புணர்ச்சியின் மகிழ்தல்)

### ஒரு விகற்பக் குறள் வெண்பா

மலைமதிதேன் மாறன் வரைவேல் விழியாள்
முலைவதனம்—நண்பா!—மொழி. 3

முதலடியில் மூன்று சீர்களிலும் மோனை வந்துள்ளமையால் இது கூழைமோனை எனப்படும். மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்தது. மலை, மதி, தேன் என்பன முறையே முலை, வதனம், மொழிகளுக்கு உவமையாக வந்துள்ளன. இவ்வாறு வருவது நிரல்நிரை எனப்படும்.

தலைவியைக் கூடிவந்த தலைவனின் வடிவ வேறுபாடு கண்ட பாங்கன் காரணம் வினாவ, தலைவன் தலைவியின் அழகையும் இருப்பிடத்தையும் கூறுவதாக அமைந்தபாடல். இஃது இயல்பிடம் கூறல் என்னும் துறையாகும். உவமைகள் அழகு. மாறன்வரை என்பது இருப்பிடம்.

(இதுவும் ஒரு விகற்பக் குறள் வெண்பா. அலங்காரம் - நிரல்நிரை உவமை. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - இயல்பிடம் கூறல்)

## ஒரு விகற்பக் குறள் வெண்பா

**தேர்வலவா! என்ஆம் முகில்முந்தின், செங்கண்மால்**
**காரகத்தாட்கு என்வாசகம். 4**

முதலடியின் முதற் சீரும் நான்காம் சீரும் மோனை பெற்றுள்ளமையால் இது ஒரூஉ மோனை. என்வாச கம் என்று சொல் பிரிந்து சீராக வந்தது வகையுளி. இவ்வாறு வருவது சிறப்பு இல்(லாத) சீர் எனப்படும். நாள் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

பிரிந்து சென்ற தலைவன் சென்ற செயல் முடித்துத் திரும்புகின்றான். செல்லும்போது கார்ப்பருவத்துக்கு முன் வந்து விடுவேன் என்று தலைவிக்கு உறுதி கூறியுள்ளான். குறித்த பருவத்தில் திரும்பாவிடின் தலைவி இறந்து படுவாள் என்று கருதிய தலைவன், தேர்ப்பாகனிடம் விரைந்து தேர் செலுத்துமாறு கூறுவதாக அமைந்தது இப்பாடல்.

தேர்ப்பாகனே செங்கண்மால் வீற்றுள்ள காரகம் என்ற திருப்பதியில் உள்ள என் தலைவிக்கு நான் வாக்களித் துள்ளேன். இப்போது நாம் விரைந்து செல்லாமல், மேக மானது முந்திவிட்டால், (மாரிக்காலம் வந்து விட்டால்) என் வாக்குறுதி என் ஆகும். ஆதலால் விரைந்து தேரைச் செலுத்து என்பது பொருள். முகில் முந்தின் என் வாசகம் என்ஆம் என்று கூட்டுக.

(இதுவும் ஒருவிகற்பக் குறள் வெண்பா. அலங்காரம் - சுவையினுள் அழுகை. வறுமை பற்றிய அழுகை[1] பகுதி - பொருள்வயிற் பிரிதல். துறை - வலவனொடு கூறல்.

ஆக இவற்றுள் காசு, பிறப்பு, நாள், மலர் என்னும் நான்கு உதாரணத்தான் வந்து இற்றவாறு கண்டு கொள்க)

---

1. மாறன் அலங்காரத்தில் இஃது 'இளிவரல் பற்றி வந்த அழுகை' என்று காட்டப்பட்டிருக்கிறது. (பக். 304)

நிலம்அ னிலம்அனல்வான் நீர்என்[1] பனவாய்
அலம னலமன் அமலன்—புலன்ஐந்தும்
வென்றார் தொழுமால் விளங்குதிரு விண்ணகரம்
என்றார்க்கும் உண்டோ இடர்? 5

முதலிரண்டடி ஒரெதுகையும் பின்னிரண்டடி வேறோர் எதுகையும் அமைந்தமையால் இஃது இருவிகற்ப வெண்பா. எதுகை பெற்ற தனிச்சொல் வந்துள்ளமையால் இது நேரிசை வெண்பா. இரு குறள் இணைந்து தனிச்சொல் பெற்று வருவது நேரிசை வெண்பாவின் இலக்கணம். இப்பாடலின் முதற்குறளின் இறுதி, மலர் வாய்பாட்டில் முடியாமல் அதனோடு ஓர் அசை வந்துள்ளது. இவ்வாறு வருவது ஒராசிடையிட்ட நேரிசைவெண்பா எனப்படும். இரண்டாவது அடி. யலம னலம னம என்றிருப்பின் குறள் வெண்பாஆகும். ஆனால் இங்கு இறுதிச்சீர் னமலன் என உள்ளது. அதிகமாக உள்ள லன் என்பது நேரசை எனப்படும். அதனால் (ஓர்) ஆசிடையிட்ட வெண்பா ஆனது.

பழைய உரைகாரர் ஆசிடை கூறாமல் இருகுறள் நேரிசை வெண்பா என்றுள்ளார். அவர் ஒருக்கால் யலம னலமனல மன் என்று சேர்த்து அலகிட்டார் போலும்! அது பொருத்தமாக அமையவில்லை. ஏனெனில் தனிச்சொல் லோடு வெண்டளை யமையவில்லை.

முதலிரண்டடிகளின் முதலில் நிலம னிலம என்றும் யலம னலம என்றும் மடக்கணி வந்துள்ளது. இவ்வாறு வருவது இடைவிடா அடிமுதல் மடக்கு என்பர். திருவிண்ண கரம் என்னும் நகரின் பெருமை கூறுவதால் இது நகர வாழ்த்து என்னும் துறை. இது புறப்பொருள். பாடாண் திணை.

---

1. "நிலம நிலமன் னெடுவளிதீ நீராய்" என்பது மாறன் அலங்காரத்துக் கண்ட பாடம். (பக். 383)

(இஃது) இரண்டு விகற்பத்தான் இரண்டு குறள் வெண்பாவாய் நடுவு தொடைக்கேற்ற தனிச் சொல்லால் அடி மூஉய் வந்த இருகுறள் நேரிசை வெண்பா. அலங்காரம்-சொல்லணியினுள் முதலடியும் இரண்டாம் அடியும் இடை விடா அடிமுதல் மடக்கு. திணை - பாடாண். துறை – நகர வாழ்த்து.)

உலகு புகழ்அரங்கத்து உத்தமமெய்ஞ் ஞானத்
திலக ருடன்பயின்று சென்று—புலவீர்
நிலமிசைதாழ்ந் தேத்தின் நெடுமால் உமக்கும்
தலமிசைபே ரின்பம் தரும். 6

இரண்டு குறள் வெண்பாக்கள் இடையில் எதுகைக் கேற்ற தனிச்சொல் பெற்று வந்துள்ளன. ஒரு விகற்பத்து இருகுறள் நேரிசை வெண்பா எனப்படும்.

இதுவும் பாடாண் திணை. துறை – புலவராற்றுப் படை. திலகர் – திலகம் போன்று சிறந்த பாகவதர்கள். பயின்று - கூடி. நிலமிசை - தரையில். தாழ்ந்து ஏத்தின் - வணங்கி இறைஞ்சினால். தலமிசை - பூமியில். தலம் இசை பேரின்பம் என்று பிரித்து, பூமியும் புகழும் இன்பமும் என்றும் பொருள் காணலாம். தரும் - தருவான்.

(இதுவும் இரண்டுகுறள் வெண்பாவாய் நடுவு தொடைக் கேற்ற தனிச்சொல்லால் அடிமூஉய் ஒரு விகற்பத்தால் வந்த இருகுறள் நேரிசை வெண்பா. திணை - பாடாண். துறை - புலவராற்றுப்படை.)

நாவலவன் பின்போந்த நன்னீர்த் திருவரங்க[1]
காவலன்பொன் தாளாம் கமலத்தே—பாவலர்தம்
பாமாலை சூட்டாது அப் பாமா லையைஎவனோ
தாம்மா னிடர்க்களிக்கும் சால்பு! 7

---

1. நாவலன்பின் போந்த நறுநீர்த் திருவரங்கம் என்பது மாறு அலங்காரத்துக் கண்ட பாடம். (பக். 74)

கமலத்தே என்பதில் லத், தே என்று இரண்டு அசைகள் ஆசாக வந்துள்ளமையால் ஈராசிடையிட்ட இருகுறள் நேரிசை வெண்பா,

திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பணிதல். நாவலன் - திருமழிசை யாழ்வார். இந்த வரலாற்றைச் செந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டல் என்றார் பிறரும். காவலன் - பெரிய பெருமாள். பொற்றாளாம் கமலத்து - அழகிய தாமரை மலர்போன்ற பாதங்களில். பாவலர் - புலவர்கள். தம் பாமாலை - தங்களது பாடல் களை. எவனோ - ஏன். சால்பு - குறிப்பாக இகழ்வைக் குறித்தது.

தாம் அப் பாமாலையை மானிடர்க்கு அளிக்கும் சால்பு எவனோ என்று கூட்டுக!

பழிச்சினர்ப்பணிதல் - அடியார்களை ஏத்துதல். இங்குத் திருமழிசைப் பிரான் புகழப் பட்டிருத்தல் காண்க.

தாட்கமலம் என்பது தொகை உருவகம். தாளாம் கமலம் தொகைவிரி உருவகம்.

(இது திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பணிதல். அலங்காரம் - தொகைவிரி யுருவகம்.)

பூங்கமலக் கோயிலாள் புத்தமுதி னுட்பிறந்தாள்
வீங்கு துணைமுலையாள் வெண்ணகையாள்—ஓங்குபுனற்
பொன்னி நடுவுட் பொருள்மார் பகத்தாள்என்
சென்னி பிரியாத் திரு. 8

திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. தன்மை அணி. இதுவும் இருவிகற்பத்தால் வந்த இரு குறள் நேரிசை வெண்பா. இரண்டு ஆசு வந்தன.

புத்தமுதினுள் - புதிய அமுதத்தினுள்ளே. விங்கு - பெருத்ததுணை - இரண்டு. பொன்னி - காவிரி. பொன்னி நடுவுட்பொருள் - திருமால். சென்னி - தலை. திரு - திருமகள்.

(திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - பொருள் தன்மை.)

அருள்மனையா ளாய்உவந்தது ஆழியான் கோடு
பொருதிரைப்பால் தெள்ளமுதில் போந்த—திருஅரங்கம்
பூம்பதுமக் கண்முகிழ்த்துப் புத்தேளிர் கைதொழுமால்
பாம்பணைமேல் வைகும் பதி.

தனிச்சொல்லாகவந்ததிருஅரங்கம் என்பது இருசொற்களாய் அருள்மனையாளாய் உவந்தது திரு என்றும் வைகும்பதி அரங்கம் என்றும் முறையே இணைதல் காண்க. இடையிலே இருபெயர்கள் இணைந்திருந்து முறையே முன்பகுதியோடும் பின்பகுதியோடும் சேர்ந்து பொருள் பயப்பது இணையிடை நிலைப்பெயர் நிரல்நிரை என்னும் அணி என்பர்.

மனையாள் - மனைவி. ஆழியான் - திருமால். கோடு பொரு - கரையை மோதுகின்ற திரைப்பால் தெள்ளமுதில் போந்த - பாற்கடலமுதுடன் பிறந்த. பதுமக்கண் - தாமரை போன்ற கண். முகிழ்த்து - மூடி. புத்தேளிர் - தேவர்கள்.

(திணையும் துறையும் அது. அலங்காரம் இணையிடை நிலைப்பெயர் நிரல்நிரை. இவை மூன்றும் முதற்குறட்பாவினொடு தனிச்சொலிடை வேறுபட்டு இரண்டசையானும் ஓரசையானும் ஆசிட்டு இரண்டு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.)

சிரம்தான் இழந்தான் அயன்அச் சிரம்கொய்து
இரந்தான் இரப்புஒழிப்பாய் என்ன—வரம்தான்
புரந்தான் இருப்பப் பொருள்வேறுஉண் டென்று
பரந்தான்உண்டு என்ன பயன்! 10

திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அணி - சுவையினுள் பேதைமைபற்றி வந்த நகை.

இஃது ஓராசிடையிட்டு ஒருவிகற்பத்தால் வந்த இரு குறள் நேரிசை வெண்பா.

அயன் சிரம்தான் இழந்தான் என்று மாற்றிப் பொருள் கொள்க. இரந்தான் - சிவன். இரப்பொழிப்பாய் - நான் பிச்சையெடுப்பதைத் தவிர்ப்பாய். புரந்தான்-கொடுத்தவன்; திருமால். பொருள் - தெய்வம். பரந்தான் - அலமருதலுற் றால். என்ன பயன் உண்டு என்று மாற்றுக.

(இதுவும் திணையும் துறையும் அது. அலங்காரம் - சுவை யினுள் பேதைமை பற்றி வந்த நகை.)

மாதங்கம் மூலம்எனும் வண்குருகூர் மால்வரைஓர்
மாதங்கம் அஞ்ச வருபோழ்து இம் — மாது அங்கம்
மாதங்குஅவ் வாகுவல யத்தணைத்துவல்விரைந்துஅம்
மாதங்கம் வென்றான்ஓர் மன். 11

வரை பொருட்பிரிவு. துறை - (தோழி கூற்று. செவிலி முன்னிலை.) களிற்றிடை யுதவிக்கு அறத்தொடுநிற்றல். அதாவது தலைவி யானையைக்கண்டு அஞ்சுகையில் தலைவன் சாத்துக் காதல் கொண்டமையைத் தோழி செவிலித்தாய்க்குக் கூறித் திருமணத்துக்கு ஒப்புமாறு வேண்டுதல்.

மாதங்கம் என்ற சொல் முதலிரண்டடிகளில் ஒரே பொருளில் வந்தமையால் சொற்பொருட்பின் வரும் நிலை அணி எனப்படும். மடக்கு அணியும் இப்பாடலில் உள்ளது.

இஃது ஈராசிடையிட்டு ஒரு விகற்பத்தால் வந்த இரு குறள் நேரிசை வெண்பா.

முதலடி கீழ்க்கதுவாய் மோனை. மூன்றாம் அடி மேற் கதுவாய் மோனை.

மாதங்கம் - யானை. மால் - திருமாலின். வரை - மலையில். மாது அங்கம் - தலைவியின் உடல். வாகுவலயம் - தோள் அணி. மா - திருமகள். வல்விரைந்து - மிக விரைந்து. மாதங்கம் வென்றான் - பொருள்தேடி வந்தான்.

கஜேந்திரன் ஆதிமூலமே என அழைத்த வளவிய குருகூரில் வாழும் திருமாலினது மலையிலே ஓர் யானை யானது நம் தலைவி அஞ்சும்படி வருகின்றபோது, இந்தத் தலைவியின் அங்கத்தைத் தலைவனானவன் திருமகள் வாழும் தோள்களால் அணைத்துக் காத்தான். பின் இவளையே மணக்க விரும்பித் திருமணப் பரிசத்துக்காக விரைந்துசென்று பொருள்தேடி வந்துள்ளான் என்பது திரண்டபொருள்.

(இது பகுதி - வரை பொருட் பிரிவு. துறை - (தோழி கூற்று, செவிலி முன்னிலை) களிற்றிடை யுதவிக்கு அறத்தொடு நிற்றல். அலங்காரம் - சொற்பொருட்பின் வருநிலை. இவை முதற்கறட்பாவின் இறுதிக்கண் ஓரசையானும் ஈரசையானும் ஆகிட்டு ஒரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.)

காவலர்பொற் காவலர்போல் காதம் கமழ் அநந்தை
காவலனைக் காவலர் தூய்க் காவல்எனக் கற்றுணர்ந்தோர்
காவலனே காவலனே காத்திஎனக் கண்டுற்றும்
காவலகா என்னார் கலர். 12

திணை - பொதுவியல். துறை - பொருள் மொழிக் காஞ்சி. அணி - சொற்பொருட்பின் வரும்நிலை.

நான்கடியாய்த் தனிச்சொல் பெறாமல் ஒருவிகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா.

முதல் மூன்றடிகளும் முற்றுமோனை.

காஅலர் - சோலைமலர்கள். பொற்கா அலர்போல்- கற்பகச் சோலைமலர்போல். அநந்தை சாவலன்-திருவனந்த புரத் திருமால். தூஉய் - தூவி. காத்தி - காப்பாற்று. கண் டுற்றும் - கண்டிருந்தும். கலர்- கீழோர். காவல காஎன்னார்- காவலனே காப்பாற்று என்னமாட்டார்.

பொழிப்புரை :

கற்றவர்கள், சோலை மலர்கள் கற்பகச் சோலை மலர் போலக் காத தூரம் மணம் பரப்பும் திருவனந்தபுரத்தில் வீற்றிருக்கும் திருமாலைச் சோலை மலர்கள் தூவி நீயே எமக்குக் காவல் என்றும் காவலனே! காவலனே! காப்பாற்று என்றும் கூறுவதைக் கண்டிருந்தும், கீழானவர்கள் காவலனே காப்பாற்று என்று கூறமாட்டார்கள்.

(இது திணை - பொதுவியல். துறை பொருள் மொழிக் காஞ்சி. அலங்காரம் - இதுவுமது.)

வாராய்நன் னெஞ்சமே! வைகலும்நம் பால்இளமை
தீராமுப் பெய்தும் திறம்இன்று உணர்ந்தனமால்
நாரா யணன்புகழே நாடிஇனி நாம்சனனம்
சாராதது ஆராய்தல் சால்பு. 13

திணை - வாகை. துறை - பொருளொடு புகறல். அலங் காரம் - சுவையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.

இது நான்கடியாய்த் தனிச் சொல் இன்றி ஒரு விகற்பத் தான் வந்த இன்னிசை வெண்பா.

மூன்றாம் அடி கீழ்க்கதுவாய் மோனை.

இளமைதீரா - இளமைதீர்ந்து. சாராதது - சாராதவழி. சால்பு - சிறப்பாகும்.

"நெஞ்சமே! நாடோறும் நம்மிடம் இளமை தீர்ந்து முப்பு அடையும் தன்மையை இன்று அறிந்து கொண்டோம்,

ஆதலால் நாராயணனது புகழையே விரும்பி இனிமேல் பிறவி வாராமையை நாம் ஆராய்வது சிறப்பாகும்" என்பது பொழிப்புரை.

(இது திணை - வாகை. துறை - பொருளொடு புகல்தல். அலங்காரம் - கலையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.

இவையிரண்டும் நான்கடியாய்த் தனிச்சொல் இன்றி ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா.)

இவ்வுலகத்து இன்பம்உவர்த்து எஞ்ஞான்றும் பூமகள்கோன்
அவ்வுலகத்து இன்பம் அதுவே விருப்புற்றார்
முந்நீர் வளாகம் முழுதுறினும் வாய்க்கொள்ளார்
உய்ந்நீர அல்லா உரை. 14

திணை - வாகை. துறை - சால்புமுல்லை.

அணி - கல்விபற்றிய பெருமிதம்.

தனிச்சொல் பெறாமல் இருவிகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா. முதலடி கூழைமோனை.

பூமகள்கோன் அவ்வுலகம் - திருமாலின் பரமபதம். உவர்த்து -வெறுத்து. முந்நீர் வளாகம்-கடல் சூழ்ந்த உலகம். வாய்க்கொள்ளார் - சொல்லமாட்டார். உய்ந்நீர அல்லா உரை - வாழ்வதற்கு உரிய தன்மையில்லாத சொற்கள்; இறைவன் புகழல்லாத சொற்கள்.

(இதுவும் திணைவாகை. துறை - சால்புமுல்லை. அலங்காரம் - இதுவுமது. இது தனிச்சொல் இன்றி இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.)

மன்னுயிரே வான்பிரமம் மாதவன்அன்று என்றுரைத்தல்,
பொய்,கொலை,கள் உண்டல், பொருள்வெளவல்
இவ்வனைத்தும்
இன்றே சிறியர் இடத்தனஇவ் வூழிக்
கடைக்கால்என் செய்வார் கலர்! 15

திணை - பொதுவியல். துறை - முதுகாஞ்சி. அணி - பேதைமைபற்றிய நகை.

இது பலவிகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா. முதலடி கூழை மோனை.

மன்னுயிரே வான்பிரமம் - உயிர்களே பிரமம் ஆகும். மாதவன் அன்று - திருமால் பிரமம் அல்ல. இன்றே - இவ் வாழ்வில். சிறியர் இடத்தன - சிறியோர் இடத்தில் உள்ளன. ஊழிக் கடைக்கால் - ஊழி யிறுதிக்காலத்தில். கலர்-கீழோர்.

உயிரே பிரமம்; மாதவன் பிரமம் அல்லன் எனலும், பொய் முதலாயின தீமைகளும் சிறியோர் இடத்தே உள்ளன. ஊழியிறுதிக் காலத்தில் அந்தச் சிறியோர் எவ்வாறு உய்வர்? உய்ய மாட்டார் என்பது திரண்ட பொருள்.

(இது திணை - பொதுவியல். துறை - முதுகாஞ்சி. அலங் காரம். பேதைமை பற்றிய நகை.)

கண்ணன்அருள் பெற்றார்நன் கல்வியே செல்வம்எனக்
கொல்லா விரதம் குறிக்கொள்ப வேறுசிலர்
தீக்கொலையிற் செய்பொருளே செல்வம்என நின்றனரால்
என்னே உலகியற்கை என்! 16

திணை - பொதுவியல். துறை-பொதுமொழிக் காஞ்சி. அணி - சுவையினுள் இழிவுபற்றிய அழுகை. இதுவும் பல விகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா.

குறிக்கொள்ப - குறிக்கோளாகக் கொள்வர்.

தீக்கொலையில் - தீய கொலைவழியினால்.

செய்பொருள் - தேடும் செல்வம்.

(திணை - இதுவுமது. துறை - பொதுமொழிக்காஞ்சி. அலங்காரம் - சுவையினுள் இழிவுபற்றிய அழுகை.)

கோங்கரும்பு போலும் குவி முலைகள். ஆம்பலகத்து
ஆங்கு அரும்பு முல்லை அரும்புஏய்க்கும்—பூங்குழற்குச்
செவ்வாயும் வெண்ணகையும், செண்பகமால் தண்சிலம்பில்
காமர் சுனைக்காவி கண். 17

திணைப்பகுதி - பாங்கற் கூட்டம். துறை - இயல் இடம் கூறல்.

தலைவியைக் கூடிவந்த தலைமகன்பால் வேறுபாடு கண்டு பாங்கன் வினாவ, அவனுக்குத் தான் கலந்த தலைவியின் அழகும் இருக்கும் இடமும கூறுதல் இந்தத் துறை.

அணி - தொகைவிரியுவமை. உவமைச் சொல்லானது சுனைக்காவி (போலும்) கண் என்ற விடத்து தொகையாகவும் (மறைந்தும்) பிற இடங்களில் போலும், ஏய்க்கும் என்று விரிந்தும் (வெளிப்படையாயும்) வந்துள்ளமையால் இது தொகைவிரி உவமையானது. இஃது இரண்டாமடி யிறுதி தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தால வந்த இன்னிசை வெண்பா.

செவ்வாயும் வெண்ணகையும் (முறையே) ஆம்பலரும்பும் முல்லையரும்பும் போலும் என்று கூட்டுக.

பூங்குழல் - தலைவி. சிலம்பு - மலை. காமர் - அழகிய சுனைக்காவி - சுனையில் பூத்த காவிமலர்.

செவ்வாய் வெண்ணகை என்பது முரண்தொடை.

(இஃது இரண்டாம் அடி இறுதி தனிச்சொல்பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. அலங்காரம் - தொகைவிரி உவமை. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - இயல்பிடம் கூறல்.)

நாராய ணாய நமஎன்றே நாவீறன்
ஓரா யிரம்என்று உரைத்தகவிப் பாவமுதம்
ஆராய் பவர்க்கடிமை ஆகினேன். வாரான்இங்கு
என்பால் ஒருநாள் யமன். 18

திணை-வஞ்சி. துறை நெடுமொழி. அணி - தொகைவிரி யுவமை.

மூன்றாமடி யிறுதி தனிச்சொல் பெற்று இருவிகற்பத் தால் வந்த இன்னிசை வெண்பா. முதலடி மேற்கதுவாய் மோனை.

நாவீறன் - சடகோபன். ஓராயிரம் என்று உரைத்த கவிப்பா அமுது - திருவாய்மொழி. என்பால் யமன் ஒரு நாளும் வாரான் என்று கூட்டுக.

(இது, மூன்றாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. திணை-வஞ்சி. துறை - நெடுமொழி அலங்காரமும் அது.)

மாதராய் தென்னரங்கன் மால்வரைவாழ் மாதராள்
காமன் இரதிஎனும் காட்சியாள். காமவேள்
பூவாளி என்பவற்றுள் மன்னுயிர்உண் பூவாளி
கண்டார் நிறையினைஉண் கண்.

திணைப்பகுதி - சேட்படை. துறை அவயவம் கூறல். அணி - தொகை விரி உவமை. இரதி எனும் காட்சியாள் என்ற இடத்து உவமைச் சொல் விரிந்தும் கண் பூவாளி என்ற இடத்து மறைந்தும் இருப்பதால், தொகைவிரி உவமை யானது. அடிதோறும் ஒரூஉ எதுகை பெற்று நேரிசை வெண்பாவிற் சிறிது வேறுபட்டு வந்த இன்னிசை வெண்பா.

மாதராய் - தோழியே! மால்வரை - பெரியமலையில். காமன் இரதி - காமன் தேவியான இரதி. காட்சி - அழகு.

இரதி எனும் காட்சி - இரதி போன்ற அழகு. பூவாளி - மலர் அம்பு. உயிர் உண் பூவாளி - நீல மலர். 'முழுநீலம் கொல்லும்'. என்பதால் உயிர் உண் பூவாளி நீலமலர் ஆனது. கண்டார் நிறையினை உண்கண் - கண்டவரது உறுதியை உண்ணுகின்ற (அழிக்கின்ற) கண்கள்.

கண் பூவாளி என்று கூட்டுக.

தோழியே! அரங்கனுக்குரிய மலையில் வாழும் இப் பெண், காமனுக்குரிய இரதி போன்ற அழகி. கண்டவரின் உறுதியினை அழிக்கின்ற இவளின் கண்கள், மன்மதனின் பூ அம்புகளில் உயிரை உண்ணுகின்ற நீலமலர் அம்பு ஆகும் என்பது பொழிப்பு.

(இஃது அடிதோறும் ஒரூஉத் தொடை பெற்று நேரிசை வெண்பாவிற் சிறிது வேறுபட்டுவந்த இன்னிசை வெண்பா. பகுதி - சேட்படை. துறை - அவயவம் கூறல். அலங்காரம் தொடைவிரியுவமை.)

இமிழ்திரைநீர் ஞாலத்து இருள்இரிய வான்தோய்ந்து
உமிழ்கதிர்வெண் திங்க ளுடனேஎஞ் ஞான்றும்
வலம்செய் சுவண வடவரைபோல் மாடம்
பொலம்செய் மதின்கோ புரம்சிகர பந்தி
இலங்கும் எழில்அரங்கத் தெம்பிரான் பல்புகழைப்
பாடினார் பாதமலர் பாடிப் பணிமுடிமேல்
சூடினார்க் குண்டோ துயர் 20

திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப்பணிதல். அணி பலபொருட்கு ஒரு பொருள் உவமை. மாடம், மதின், கோபுரம், சிகரபந்தி ஆகிய பல பொருள்களுக்கு வடவரை ஒன்றே உவமையாக வந்தமை காண்க.

இஃது ஏழடிபெற்று வந்த பலவிகற்பப் பஃறொடை வெண்பா.

நான்கடிக்குமேல் பெற்றுவருவது பஃறொடை வெண்பா எனப்படும். ''அடிபல துன்னின் பஃறொடை'' என்பது இலக்கண விளக்கம்.

எம்பிரான் பல்புகழைப் பாடினார் பாதமலா பாடி அவர் இட்ட பணியை முடிமேல் சூடினார்க்குத் துயர் உண்டோ என்பது சாரம்.

பணி முடிமேல் சூடினார் என்பது சிலேடை. புகழ் பாடினார் பணிமுடிமேல் சூடினார் என்றும் பாம்பைத் தலைமேல் சூடினார் என்றும் இருபொருள் படுவது காண்க. பணி - ஏவல்; பாம்பு. இமிழ்திரைநீர் - ஒலிக்கின்ற கடல். இரிய - ஓட. உமிழ்கதிர் - ஒளிவிடுகின்ற சூரியன். திங்கள் - சந்திரன்

சுவண வடவரை - பொன்மேரு மலை. பந்தி -வரிசை. பணி - தொண்டு. பணிமுடிமேல் சூடினார் என்பது சிவனையும் குறிக்கும். சிவன், திருமாலுக்குத் தொண்டன்; பாகவதன் என்பது வைணவர் கொள்கை.

(இஃது ஏழடித்தாய் வந்த பலவிகற்பப் பஃறொடை வெண்பா. அலங்காரம் - பலபொருட்கு ஒரு பொருள் உவமை. திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பணிதல்)

தண்துழாய் மார்பன் வடமலைசார் தண்புறவின்
விண்துழாய் ஓங்கி மிடைகோங்கின் கொம்பர்உழ
மண்டுகார் உக்க குறுந்திவலை வண்தளவம்
கண்டுகார் என்று கடுக்கை யுடன்மலர்தல்
பண்டுநம் கேள்வர் பருவம் குறித்ததெனக்
கொண்டதெவன் நன்நெஞ்சே கூறு. 21

திணை - பெருந்திணை (படலம்). துறை - பருவம் கண்டு தலைவி கூற்று. அணி - திரிவதிசயம். கோங்கின்கிளை உழுதலால் மேகம் சிந்திய துளியைக் கண்டு தளவமும் கடுக்

கையும் கார் காலம் என்று பிறழ நினைந்து மலர்ந்தன என்பதால், இது திரிவதிசய அணியானது. திரிவு, ஒன்றை இன்னொன்றாக உணாவது. இங்குக் கார் காலமல்லாத காலத்தைக் கார்காலம் என்று தலைவி பிறழ உணர்ந்தமை காணலாம். முதலடியும் மூன்றாமடியும் ஒரூஉ மோனை.

இஃது ஆறடியான் வந்த ஒருவிகற்பப் பஃறொடை வெண்பா. புறவின் - முல்லை நிலத்தில். விண் துழாய் - விண்ணைத்துழவி. மிடைகோங்கின் கொம்பர் உழ-நெருங்கிய கோங்கமரத்தின் கிளைகள் உழுதலால். மண்டு கார் உக்க குறுந்திவலை - நெருங்கிய மேகங்கள் சிந்திய குறுமழைத் துளிகள். தளவம் - முல்லை. கார் என்று - கார்காலம் என்று. கொண்டதுஎவன் - கொண்டது ஏன்?

கார்காலத்துக்குமுன் வருவேன் என்று தலைவன் பிரிந்து சென்றான். முல்லையும் தோன்றியும் மலர்வது கார்காலத் தில். அவை மலரக்கண்ட தலைவி கார்காலம் வந்து விட்டதே! தலைவன் வரவில்லையே என்று வருந்தினாள். இது கார்காலமன்று. கோங்க மரக்கிளை கிழித்ததால், மேகம் குறுந்துளி சிந்தியது. அதைக் கார்காலம் என்று கருதி முல்லை மலர்ந்துள்ளது. அவ்வளவே என்று பாங்கி தலைவியை ஆற்றியதாக அமைந்தது இப்பாடல்.

(திணை - பெருந்திணை(ப் படலம்) துறை பருவம்மயங் கல், தலைவி கூற்று. இஃது ஆறடியான் வந்த ஒருவிகற்பப் பஃறொடை வெண்பா. அலங்காரம - திரிவதிசயம.)

மாதவனை எவ்வுயிர்க்கும் வழுத்தும்படியெய்யும் மாதவர்தாம்
இன்ப முறஎதிர்சென்று ஈந்தறனும் துன்ப முடன்
பேரின்பம் எய்துவதும் ஈறிலாப் பேரின்பப்
பொன்னே நிதியம் தருமென முன்ன பொன் அனையாட்கு
உற்றதைஎவ் வாறுரைப்பேன் உற்று. 22

இது பொருள்வயிற் பிரிதல். துறை - வாட்டங்கூறல். அணி - அவயவி உவமை.

அவயவியாகிய தலைவியைப் பொன் அனையாள் என்றமையால் இஃது அவயவி யுவமையானது. அவயவி-அவயவங் களை உடையவள்.

இஃது ஐந்தடியாய் அடிதோறும் ஒரூஉ எதுகைத்தொடை பெற்றுப் பல விகற்பத்தால் வந்த பஃறொடை வெண்பா.

தலைவன், தான் பொருள் தேடும் பொருட்டுப் பிரிந்து போகும் செய்தியைத் தோழியிடம் கூறுவதாக அமைந்தது இப் பாட்டு.

பேரின்பப் பொன்னே - தோழியே! எவ்வுள் - திருவெவ்வுளூர் என்னும் திருப்பதி. (இஃது இப்போது திருவள்ளூர் எனப்படுகின்றது.)

ஈதிறன் - கொடுக்குங் கொடை. பொன் அனையாள் - தலைவி. உற்றது - உண்மைக்காரணம்.

"ஈதிறனும் பேரின்பம் எய்துவதும் நிதியமே தரும் (ஆதலால் அதன் பொருட்டுப் பிரிந்து செல்வேன்) என்று பிரிவுக்கான உண்மைக் காரணத்தைத் தலைவிக்கு எவ்விதம் கூறுவேன்" என்பது தலைவன் கூற்று.

(இது, பொருள்வயிற் பிரிதல். துறை - வாட்டம் கூறல். அலங்காரம - அவயவி உவமை. இஃது ஐந்தடியாய் அடி தோறும் ஒரூஉத் தொடை பெற்றுப் பல விகற்பத்தான் வந்த பஃறொடை வெண்பா.)

கேளா திருந்திலேன் கேசவா என்பதனை
வாளா திருந்திலேன் வாழ்த்தினேன்—ஆள்ஆனார்க்கு
ஆளானேன் என்இணை இங் கார்! 23

திணை - வஞ்சி. துறை - நெடுமொழி. அணி - பெருமிதம் சார்ந்த உவகை; நெடுமொழிகூறல்.

இஃது, ஒரு விகற்பத்தால் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா.

கேசவா என்பதனைக் கேளாது இருந்திலேன் - கேசவா என்னும் பெயரைக் கேட்டேன். வாளா திருந்திலேன் - நான் சும்மா இருக்காமல். வாழ்ந்தேன்-பல்லாண்டு பாடினேன். ஆளானார்க்கு - அடியவர்களுக்கு. ஆனானேன் - தொண்டன் ஆனேன். என் இணை-எனக்கு நிகர். இங்கு ஆர் -இங்கேவர்?

(இஃது ஒரு விகற்பத்தால் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா. திணை - வஞ்சி. துறை - நெடுமொழி. அலங்காரம் - பெருமிதம் சார்ந்த உவகை; நெடுமொழி கூறல்.)

திருந்திழையாய்! மாறன் திருவாய் மொழியே
மருந்துபிற விப்பிணிக்கு மாதர்—தரும்பிணிக்கு
வாய்ந்தமருந் தென்பர் மடல். 24

பகுதி - மடல். துறை - உலகின்மேல் வைத்துக் கூறல். அணி - மாட்டேறில்லா ருபகம்; ஏகதேச வுருவகம்.

இஃது இரண்டு விகற்பத்தால் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா.

திருந்திழையாய் - தோழியே! மாறன் - நம்மாழ்வார். மருந்து பிறவிப் பிணிக்கு - பிறவி நோய்க்குத் திருவாய் மொழியே மருந்தாகும். மாதர்தரும்பிணிக்கு மருந்து மடலே ஆகும் என்க.

தலைமகளை அடையப் பெறாத தலைவன் மடலூர நினைக்கின்றான். தன் கருத்தைத் தோழிக்குச் சொல்வதாக அமைந்த பாடல் இது.

(இது, பகுதி - மடல். துறை—உலகின்மேல் வைத்துக் கூறல். அலங்காரம் - மாட்டேறில்லா (ரூபகம்) ஏகதேச உருவகம். இஃது இரண்டு விகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா.)

அலங்காரம் - மாட்டேறில்லா (ரூபகம்) ஏகதேச உருவகம் என்ற விளக்கம் தெளிவாக இல்லை. தெளிந்தார் வாய்க் கேட்டுணர்க!

வழிமதுத்தார் மாறன் மணிவரைமேல் மாதர்
விழியெழுதி னாலும்இணை வெற்பெழுதி னாலும்
மொழிஎழுத லாமோ மொழி. 25

பகுதி - மடல். துறை - எழுத அரிது என்றல்.

தலைவன் தலைவியைக் கூடப் பெறாமையால் கலங்கி மடலேறத்துணியும் போது, மடலேற வேண்டுமாயின் தலைவியின் உருவம் வரையவேண்டுமே! அவள் விழி, முலை முதலியவற்றை எழுதினாலும் மொழியை எழுத இயலுமோ என்று தலைமகளின் அவயவத்து அருமை சாற்றிப் பாங்கி மடல் விலக்குவது இத்துறையாகும்.

அலங்காரம்-இதுவுமது (மாட்டேறில்லா ஏகாங்கரூபகம்) ஒரு பொருளின் உறுப்புக்கள் பலவற்றுள்ளும் ஒன்றனையே உருகவம் செய்து ஏனைய உறுப்புக்களை உருவகம் செய்யாது வாளா கூறுதல் ஏகாங்கரூபகம் எனப்படும்.

இப்பாடலில் இணைவெற்பு என்று கொங்கையுறுப்பை மட்டும் உருவகம் செய்துள்ளது காணலாம்.

இஃது ஒருவிகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா. முதலடி முற்றுமோனை.

வழிமது - மதுவழிகின்ற. மாதர் - தலைவி. இணை வெற்பு - இரண்டான மலைபோன்ற கொங்கைகள்.

(பகுதி - இதுவுமது துறை - எழுத அரிதென்றல். அலங்காரம் - இதுவுமது. (மாட்டேறில்லா ஏகாங்க ரூபகம்). இஃது ஒருவிகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.)

சோலை மலைஅழகர் தோள்மாலை காமுறுமுன்
மாலையாய் யாமமாய் வைகறையாய் அல்குஇரவுஇன்று
என்னேநீட் டித்தது எவன்? 26

திணை - பெண்பாற் கூற்றுக் கைக்கிளை. துறை - இரவு நீடுபருவரல். அலங்காரம் - கவையினுள் தன்கண் தோன்றிய வறுமைபற்றிய அழுகை.

இஃது இருவிகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

காமுறுமுன் - காதல் கொள்வதற்கு முன்பு. அல்குஇரவு-சுருங்கிக்கடந்தஇரவானது. நீட்டித்தது என்னே - நீட்டித்தது எவன்! என்று கூட்டுக.

'காதலிக்கும்முன்பு மாலை, யாமம், வைகறை என்று சுருங்கிய இரவு காதலித்த பின்பு சுருங்காமல் நீட்டித்தது ஏன்?' என்பது தலைவி கூற்று.

(திணை - பெண்பாற் கூற்றுக் கைக்கிளை. துறை - இரவு நீடுபருவரல். அலங்காரம் - கவையினுள் தன்கண் தோன்றிய வறுமை பற்றிய அழுகை. இஃது இரண்டு விகற்பத்த ன் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.)

நாணும் நிறையும் நறுநுதாஅல் மாணிழையாள்
தந்தவன் காமத் தழல்கதுவ வெந்து
தருமடல்மா ஏற்றம் தரும். 27

இது பகுதி - மடல். துறை - நாண் அழிவுரைத்தல். அலங்காரம் - ஏகதேச உருவகம்.

காமத்தைத் தழலாக உருவகம் செய்து அதற்கேற்ப நாண், நிறைகளைச் சருகாக உருவகம் செய்யாமையால் இது ஏகதேச உருவகம்.

இதுவும் மூன்றடியாய் ஒரூஉத் தொடை பெற்றுத் தனிச் சொல் இன்றிப் பலவிகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

மாணிழையாள் - தலைவி, வன்காமத் தழல் - வலிய காமமாகிய நெருப்பு. தருமடல்மா - பனைமரத்து ஓலையால் ஆகிய குதிரை. மாஏற்றம் தரும்-மடல் ஏறச் செய்யும்.

(இது பகுதி - மடல். துறை - நாணழிவுரைத்தல். அலங்காரம் - ஏகதேச வுருவகம். இதுவும் மூன்றடியாய் ஒரூஉத் தொடை பெற்றுத் தனிச் சொல் இன்றிப் பல விகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.)

நாரா யணனே நமனென் றுரைப்பவர்பால்
வாராது ஒருநாளும் வல்வினைதான்
சாரான் ஒருதலையாய்த் தண்டதரன் சாராவாம்
பேராத மாயப் பிறப்பு. 28

திணை - வாகை. துறை - சால்பு முல்லை. அலங்காரம்- கல்விபற்றிய பெருமிதம்.

இது சவலை வெண்பாட்டு. என்னை? ''தனியிரு குறளாய் நான்கடி யுடைத்தாய்த் தனி வரல் இல்லது சவலை வெண் பாட்டே'' என இக்காலத்துள்ளோர் பெயரிட்டு வழங்கும் வேறு பாடென உணர்க. அன்றியும், மூதுரையினுள்ளும்

''அட்டாலும் பால்சுவையிற் குன்றாது அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும வெண்மை தரும்''[1]

என் பதூஉம் இப் பா என உணர்க.

1. இப்பாடலை
''அட்டாலும் பால்சுவையில் குன்றாது அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்—கெட்டாலும்
மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு சுட்டாலும்
தான்மிக்க வெண்மை தரும்''
என நேரிசை வெண்பாவாகக் காட்டுவதும் உண்டு.

வல்வினைதான் வாராது. கண்டதரன் சாரான். பிறப்புச் சாராவாம் என்று கூட்டிப் பொருள் காண்க.

ஒருதலை - உறுதி. கண்டகரன் - யமன். பேராத - நீங்காத.

## வெண்பா இனம்

பெருநூல் பிறபல கற்பதின் மாறன்
ஒருநூல் கற்பது ஊதியம் உயிர்க்கே 29

(இது குறள் வெண்பாவிற்கு இனமாகிய வெண் செந்துறை. இது விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையுமாக வரல் வேண்டும் என்ற முறைப்படி வந்தவாறு கண்டு கொள்க )

இது திணை - காஞ்சி. துறை - முதுமொழிக் காஞ்சி. அலங்காரம் - கலையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.)

பிறபல பெருநூல் என்க. கற்பதின் - கற்பதைக் காட்டிலும். மாறன் - சடகோபன். ஊதியம் - பயன்.

விழுமிய பொருள் - சிறப்பான பொருள். ஒழுகிய ஓசை - ஆற்றொழுக்கான ஓசை.

அண்டர் நாயகன் அரங்கனை அடித்தளிர்
அணிமுடி மிசை அணி தூயோர்
மண்டு தெண்திரைக் கடற்புவியிடைப்பிற வாரே. 30

(திணை - பாடாண். துறை - ப[illegible]ர்ப்பணிதல். அலங்காரம் - ஏகாங்கரூபகம். இஃது ஈற்றடி குறைந்து இரண்டு அடியாய்ப் பலசீரான் வந்தமையால் குறள் தாழிசை.)

அண்டர் - தேவர். அடித்தளிர் - தளிர்போன்ற பாதம். (உருவகம்). மண்டு - நெருங்கிய. தெண்திரை - தெள்ளிய அலை. புவியிடை - பூமியில்.

நிலையி லாதன மூன்றுமே நிலையெனும்
நினைவொடு நெடியமால் அடியிணை நினையாதார்
தொலைவி லாப்பவக் கடலிடை அழுந்துபு
துயர்தலைப் படுவாரே. 31

(திணை - பொதுவியல். துறை - பெருங்காஞ்சி. அலங்காரம் - ஏகதேச உருவகம்.

இதுவும் ஈற்றடி குறைந்து இரண்டடியாய் ஒருவிகற்பத்தால் வந்தமையான் குறள்தாழிசை.)

மூன்று - மூவாசை; மண், பெண், பொன் என்பன. பவக்கடல் - பிறவிக்கடல். தலைப்படுவார் - அடைவார்கள்.

அம்புய மாதுஅன் புறுமால் மலர்ப்பதம்
தம்பம்என்று ஆய்ந்திலார் தர்மம் எய்தார். 32

(திணை - பொதுவியல். துறை - முதுமொழிக்காஞ்சி. அலங்காரம் - தொகையுவமை.

இது விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றி இரண்டடியும் தம்முள் ஒத்து வந்தமையால் செந்துறைச் சிதைவுத் தாழிசைக் குறள் எனப்படும்.)

அம்புயமாது - திருமகள். மால் - திருமால். தம்பம் - பற்றுக்கோடு.

புரவலர்நீத் தார்தமக்குப் பூமகள்கோன் திருநறையூர்
இரவலர் இக் காமம் யமன். 33

(திணை - பெண்பாற் கூற்றுப் பெருந்திணை. துறை - பொழுது கண்டிரங்கல். அலங்காரம் - முன்னவிலக்கினுள் பொருள் விலக்கு.

இது செப்பலோசையிற் சிதைந்து வேற்றுத்தளைதட்டுக் குறள் வெண்பாவிற் சிதைந்துவந்த தாழிசைக்குறள்.)

பூமகள்கோன் + திருநறையூர் - இங்குக் கலித்தளை வந்துள்ளது. இது வேற்றுத்தளை. அதனால் வெண்பாவிற் குரிய செப்பலோசை சிதைந்தது.

புரவலர் நீத்தார் - தலைவரைப் பிரிந்த பெண்கள். பூமகள்கோன் திருநறையூர் - திருமால் வாழ்கின்ற திருநறையூர் என்ற திருப்பதியிலே. இரவு அலர் - இரவிலே அரும்புகின்ற. இக் காமம் யமன் - இக் காமம் யமன் போலக் கொடுமை செய்யும்.

மூவா மறைக்கு முதல்மொழியாய் நின்றதுவும்
முகுந்தன் நாமம்
ஓவா நமன்வந்து உடக்காது ஒழிப்பதுவும்
முகுந்தன் நாமம்
தாவாத பேரின்பந் தனைவிழைவார் சாற்றுவதும்
முகுந்தன் நாமம் 34

(திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சுவையினுள் கல்விபற்றிய பெருமிதம் இது மூன்றடியால் முகுந்தன் நாமம் என்னும் தனிச்சொல் பெற்றுவந்த வெளிவிருத்தம்.)

மூவா - அழியாத. மறை - வேதம். ஓவா - ஓயாமல்; அடிக்கடி. உடக்காது - தண்டத்தைப் பிரயோகிக்காமல். தாவாத - கெடாத. விழைவார் - விரும்புபவர். மறைக்கு முதல்மொழி-ஓங்காரம்; அது திருமாலின் திருநாமம் என்பது வைணவர் கொள்கை.

நாரா யணனே நரர்பேர் புகழாது அருள்கூர்வாய்
பேரா யிரவா பிறர்தேம் நயவாது அருள்கூர்வாய்
கூரா ழியனே நமனார் குறுகாது அருள்கூர்வாய்
ஆராஅமுதஅன் றருள்வாய் பிறவாது அருள்கூர்வாய்

(திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சுவையினுள் அசைவு பற்றி வந்த அழுகை. இது நான்கடியாய் அருள் கூர்வாய் என்னும் தனிச்சொல் பெற்று வந்த வெளிவிருத்தம்.)

நரர் - மானுடர். பேராயிரவா - ஆயிரம் பேருடையவனே! பிறர்தேம் நயவாது - பிறரது இருப்பிடத்தில் வாழ விரும்பாமல். கூர் ஆழியனே - கூர்மையான சக்கரம் தரித்தவனே! ஆரா அமுது அன்று அருள்வாய் - தெவிட்டாத அமுதினை அந்நாளில் கடல் கடைந்து தேவர்க்கு அளித்தவனே!

மானிடவர் பெயரைப் பாடுவதும், அவரை அண்டி அவர்களிடத்தில் வாழ்வதும் வைணவர்க்கு ஏற்புடையன அல்ல என்பது ஆன்றோர் கருத்து.

உண்டிக் காய்மா னிடர்பேர் உரையார்
அண்டத் தப்பால் அந்தா மத்தான்
தொண்டர்க்கு ஆட்செய் பவர். 36

திணை - வாகை. துறை - சால்பு முல்லை. அலங்காரம் கல்வி பற்றிய பெருமிதம்.

(இது மூன்றடியாய் ஆசிரியத் தளையால் வந்த வெண்தாழிசை.)

உண்டிக்காய்-உணவின் பொருட்டு. அண்டத்து அப்பால்-வானுக்கு அப்பாலுள்ள. அந்தாமத்தான் - பரமபதத்தில் உள்ள திருமால்.

தொண்டர்க்கு ஆட்செய்பவர் உண்டிக்காக மானிடர் பேர் உரையார் என்று கூட்டுக.

படர்சிறைவண் டினம்துதைந்துஏ
　　ழிசைஎழுப்பு நறைவகுளப் பைந்தா மத்தான்
துடரிவரைக் கொம்பரிற்செந்
　　தேன்எனவே இனிமைதரும் சொல்லீர் சொல்லீர்
வடவரைபோல் பணைமுலைக்கீழ்
　　மதித்திடுதற் குளதாய
இடர்பெறுநுண் ணிடையினைக்கண்
　　புலம்கொளஇங் கேதென்றே. 37

(பகுதி - மதியுடன் படுதல். துறை - இடைவினாதல். அலங்காரம் - அவயவ உவமை. இது நான்கடியாய் ஈற்றடி யிரண்டும் இரண்டுசீர் குறைந்து வந்த ஒரொலி வெண்துறை.)

துதைந்து - நெருங்கி. நறைவகுளப் பைந்தாமத்தான் - தேனுடைய மகிழமலரால் ஆகிய பசியமாலை யணிந்த நம்மாழ்வார். துடரிவரை - பாண்டிநாட்டுள்ளதோர் மலை. கொம்பரின்தேன் - கொம்புத்தேன். சொல்லீர் - பெண்ணே. சொல்லீர் - சொல்வாயாக. வடவரை - மேருமலை. கட் புலம்கொள - கண்ணால் காண்பதற்கு. இங்கு ஏதுஎன்று - வழி யாது என்று. ஏதுஎன்று சொல்லீர் என்று கூட்டுக.

ஏனைக் கடவுளர்பால் எவ்வரமும்
　　பெற்றுஇடுக்கண் இழைத்த லாலே
கானத்து அடைந்துஅரக்கர்
　　கட்டழித்தான் தாள்பரவார்
மானத்தின் மாண்பிறந்த
　　மானமும்வே றில்லையே. 38

(திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சுவையினுள் பேதைமை பற்றிய நகை. இது

மூன்றடியாய் ஈற்றடி இரண்டும் இரண்டுசீர் குறைந்து வந்த ஒரொலி வெண்துறை.)

ஏனைக்கடவுளர் - சிவன், பிரமன் முதலிய தெய்வங்கள். எவ்வரமும் - எல்லா வரமும். இடுக்கண்-துன்பம். கானத்து - காட்டில். அரக்கர் கட்டழித்தான் - இராமபிரான். தாள் பரவார் - பாதம் வணங்காதவர்களது. மானத்தின் - அகங்காரத்தைக் காட்டிலும். மாண்பு இறந்த - மிகச் சிறந்த; எல்லை கடந்த. மானம் - அகங்காரம்.

தளைஅவிழ்தண் ணறவருந்திச் சுரும்புஇமிர்பூந்
தண்துளபத் தாரான் ஆறன்
விளைவளர்வண் புகழ்த்திருமால் பனிவரைமேல்
மூன்றுடைத விழுது கூர்கைம்
மலையுளதோ வந்ததென்பர் அஃதன்றி வாளியொடும்
கலையுளதோ வந்ததென்பர் கறையோடும் கண்ணின்றிக்
கொலையுளவாம் படிவேட்டை குறிக்கொள்வார் இடம்தழிய
சிலையுளதோ எனில்உடக்கும் திண்சிலையும் சினைதருபச்
சிலையுளரால் ஒளியிலரால் இவர்எண்ணம் தெளிவரிதே! 39

(பகுதி-இருவரும் உளவழி அவன் வரவுணர்தல். துறை-ஐயுறுதல். அலங்காரம் - அற்புதம். இஃது ஏழடியாய், முதலிரண்டடியும் அறுசீராய் ஒரோசையாய்ப், பின் ஐந்தடியும் வேறோர் ஓசையாய் வந்த வேற்றொலி வெண்துறை. ஐந்தடியானும், ஆறடியானும் வருவன யாப்பருங்கல விருத்தியுட் கண்டு கொள்க.)

தலைவியும் பாங்கியும் தனியே இருந்த இடத்துத் தலைவன் வந்து யானை வந்ததோ மான் வந்ததோ என வினவினான். அவன் தோற்றமோ வேட்டைக்குரியதன்று. கையில் விற்சிலை இல்லை. பச்சிலை (தழை) இருந்தது. இது கண்ட பாங்கி ஐயுற்றுக் கூறுவதாக அமைந்த பாடல் இது.

நறவருந்தி - தேன் உண்டு. கருப்பு இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற துளபத் தாரான் - துளசிமாலை அணிந்தவன். ஆறன்விளை - திருவாறன்விளை என்னும் திருப்பதி. மூன்று மத விழுது கூர் கைம்மலை - விழுதுபோல மூன்று மதங்களை ஒழுகவிடும் யானை. வாளியொடும் - தைத்த அம்போடு. கறையோடும் - இரத்தத்தோடும். வாளியொடும் கறையோடும் கலையுளதோ வந்தது என்று கூட்டுக. கண்ணின்றி - இரக்கமில்லாமல். இடம்தழிய - இடக்கையில் அணைத்த. சிலை - வில். உடக்கும் திண்சிலை - அம்பு ஏவும் திண்ணியவில். சிலைதரு - மரக்கிளைகள் தருகின்ற. பச்சிலை - தழை ஒளியிலர் -முகம் வாடியுளர்.

மதுமகிழ் அணிதரு மார்பன் கூறிய
முதுமொழி யுரைதமிழ் மறைமுழு துற்றார்
இதுபொருள் எனும்உரன் எய்துவர் எய்தார்
எதுபொருள் எதுபொருள் எனும்தொது மலர்நூ
லதுபுகல் உரைகற் றார்.

(திணை - பொதுவியல். துறை - பனுவல் வாழ்த்து. அலங்காரம் - சுவையினுள் கல்வி பற்றிய பெருமிதம். இஃது ஐந்தடித்தாய் ஈற்றடி ஒன்று ஒருசீர் குறைந்து வெண்பாவின் ஈற்றடிபோல முச்சீர்த்தாய், ஆசிரியத் தளையான் நாள் என்னும் ஓரசைச் சீரான் இற்ற ஒரொலி வெண்துறை.)

எய்துவர் எய்தார் - முரண்தொடை. மதுமகிழ்-தேனை யுடைய மகிழ்மாலை. மார்பன் - நம்மாழ்வார். முதுமொழி உரைதமிழ் மறை - வேதப்பொருள் உரைத்த திருவாய்மொழி. முழுதுற்றார் - முழுவதும் கற்றவர். இதுபொருள் எனும் உரன் எய்துவர் - இதுதான் பரம்பொருள் என்று தெளியும் உறுதி பெறுவர். எதுபொருள் எதுபொருள் எனும் தொதுமலர் நூல் அது புகழ் உரை கற்றார் - இது

தான் பரம்பொருள் என்று அறுதியிடாமல் எதுபரம் பொருள் எதுபரம்பொருள் என்று கூறுகின்ற அயலார்களின் நூல்களை (வேதங்களை)க் கற்றவர்கள். எய்தார் - இதுதான் பரம் பொருள் என்னும் உறுதியை அடைய மாட்டார்கள்.

வான்மா சறவழுக்தும் வாச மகிழ்த்தாமத்
தான்மா சறஉரைத்த தண்தமிழ்ப்பா இன்றேல்தேவு
ஆன்மாஇது என்றுஅறிவார் ஆர்.

வாதியர்வாய் வீண் அடங்க வாசவகு ளாம்புயத்தான்
ஓதியநூல் ஒன்றிலையேல், உத்தமநா ராயணனே
ஆதிமுதல் என்றுஅறிவார் ஆர்

கொந்தார் இலஞ்சியந்தார்க் கோமான் குருகூருள்
வந்துஆதரித்துரைத்த வண்தமிழ்ப்பா ஒன்றிலையேல்
அந்தாமம் என்றுஅறிவார் ஆர். 41

(இவை வெண்டளைத்தாய் வந்த சிந்தியல் வெண்பா ஒருபொருள் மேல் மூன்றடுக்கி வந்தமையால், வெள்ளொத் தாழிசை எனப்படும்.)

வான் - நித்திய சூரிகள் உலகம். வழுத்தும் - துதிக்கின்ற மகிழ்த்தாமத்தான் - நம்மாழ்வார். தண்தமிழ்ப்பா-திருவாய் மொழி. தேவு (இது) ஆன்மா இது என்று - பரம் பொருள் இது, சிவன் இது என்று. வாதியர் - புறச்சமய வாதிகள். வீண்-வெற்றுரைகள். வகுள அம புயத்தான் - நம்மாழ்வார். ஓதிய நூல் - திருவாய்மொழி. ஆதிமுதல் - பரம்பொருள். கொந்தார் - கொத்தாகப் பொருந்திய. இலஞ்சியந்தார் - மகிழமாலை. கோமான் - நம்மாழ்வார். ஆதரித்து-விரும்பி. வண்தமிழ்ப்பா - திருவாய்மொழி. அந்தாமம் என்று - பரம பதம் (உண்டு) என்று.

## ஆசிரியப்பா வகை

காமரு பல்மரம் கஞலிய பொதும்பர்
மாமரப் பனையின் மதுகரம் இமைக்த
முதிர்நறுந் தேறல் நொதுமலர் முன்னுபு
கொளத்தரு மரபின் குன்ற வாண!
வரைதலின் வரையாது ஒழுகலின் இருவிரும்
மாறுபட்டு ஒழுகிய மதியினிர் ஆதலின்
திருமகிழ் மாறன் திருவருட்கு இலக்காய்
ஒழுகா தவர்உளத்து ஒன்றா
மழுகா மதியின் மறுதவல் யானே. 42

(பகுதி - பகற்குறி. துறை - வருத்தம் கூறி வரைவு கடாதல். அலங்காரம் - உள்ளுறையுவமத்தினுள் வினை யுவமப் போலி. ஈற்றுச் சீரின் அயற்சீர் முச்சீராக வந்தமை யால் இது நேரிசையாசிரியப்பா.)

தலைவியைக் கலந்த தலைவன் திருமணம் செய்து கொள்ளத் தாமதம் செய்வது கண்டு, மணத்தை வற்புறுத்துப் பாங்கி கூறுவதாக அமைந்தது இப்பாடல்.

கஞலிய - நெருங்கிய. பொதும்பர் - சோலை. மரப் பனை - மரக்கிளை. மதுகரம் - வண்டு. தேறல் - தேன். நொதுமலர் - அயலார். முன்னுபு - நினைந்து. மரபின் - இயல்பையுடைய. குன்றவாண - தலைவனே! வரைதலின் (தலைவி) திருமணம் செய்ய வேண்டும் என்பதாலும்

வரையாது ஒழுகலின் (தலைவன் ஆகிய நீ) திருமணம் செய்யக் காலம் தாழ்த்திக் களவொழுக்கத்திலேயே ஈடுபட்டிருப்பதாலும். மாறுபட்டொழுகிய மதியினிர்- நீவிர் இருவரும் மாறுபட்ட கருத்தினைக் கொண்டுள்ளீர். திருமகிழ்மாறன் - நம்மாழ்வார். ஒழுகாதவர் - தீயவர்கள். ஒன்றா - ஒருமுகப் படாத. மழுகாமதியின் - மழுங்காத அறிவைப் போல. மறுகுவல் - நான் மனம் மறுகுகின்றேன்.

தேனீ இழைத்த தேன் அயலார் கவர்வதைப் போல், உனக்காக உள்ள தலைவியை நீ காலம் நீட்டித்தால் பிறர் கொள்வர் என்பது உள்ளுறை யுவமம்.

நீவிர் இருவிரும் இருவேறுபட்ட மனத்தினீர் ஆதலின், மாறன் திருவருட்கு இலக்காகி ஒழுகாத தீயவர் மனத்திலே, ஒருமுகப்படாத அறிவுபோல, நான் மறுகுகின்றேன் என்பது தோழி கூற்றின் சாரம்.

இறைவறம் கூரா எறிபுனல் பொய்கைத்[1]
துறைதொறும் துவன்ற தோடவிழ் பல்மலர்
மாந்துபு வயின்நிறை வெய்திய கவரி
ஏந்தெழில் மாடத்து ஈன்றகன்று உள்ளிப்
படர்வுழிப் படர்வுழிப் பணைமுலைக் குறுங்கண்
மடைதிறந்து உவளக மடுநிறைத் தொழுகும்
[2]பாற்றடி னியின் ஓர் பழிதீர் பெடையைப்
போற்றுறு களிப்பின் புணர்ந்துஅவண் மூழ்கிப்
புனிதமுற் றிருசிறை புலர்த்திய ஓதிமம்

---

மாறனலங்காரப் பாடபேதம்: 1. ஈர்ந்தண் பொய்கை.
2. பாற்றடியின் ஓர் பழிதீர்பெடையின் மாற்றருங் களிப்பின்; மகிழ்வர மூழ்கிப் பால் நிலாத் தெறு சிறை புலர்த்திய ஓதிமம்,

தணந்துஅயல் கழனிச் சாதிப் பெடைகளை
மணந்ததன் தனந்களை மள்ளர்தாம் உழுத
நாற்றடி யதன்கண் நறுந்தழை பதன்அழிந்து
ஊற்றெழும் களங்க உறுபுன லாடிப்
பண்டுதான் மரீஇய பால்நிறப் பெடையைக்
கண்டுதான் வளைக்கும்—காமரு கடல்செறு
கண்ணகன் ஞாலம் கண்டு[3]கண் களிப்பான்
விண்ணவர் [4]வியப்பவும் வேதத [5]படிமத்து
அரவணைத் [6]துயின்ற அரங்கத்து அமுதின்
உரவுநீர்க் காவிரிக் குறுவய லூர!'
புல்லலன் பொதுவுண் நின் மார்பெனச்
சொல்லேன்[8] புன்மனத் தொடர்புடை யேனே. 43

(திணை - மருதம். கைகோள் - கற்பு. பகுதி - பரத்தை யிற்பிரிதல். கிளவியில்திணை - பெண்பாற்கூற்றுப் பெருந்திணை. துறை - இல்லவை நகுதல். இதுவும் விளையுவமப் போலி.)

இதுவும் நேரிசையாசிரியப்பா. இதன் வேறுபாடும் காண்க.

இறைவறப் கூரா - சிறிதும் வறளாத. எறிபுனல்-அலை யெறிகின்ற நீர். துவன்ற - நிறைந்த. தோடு அவிழ் - இதழ் விரிந்த. மாந்துபு - தின்று. வயின் நிறைவெய்திய கவரி - வயிறு நிறையப்பெற்ற எருமை. மாடத்து - வீட்டில் உள்ள. கன்றுஉள்ளி - கன்றினை நினைத்து. படர்வுழிப் படர்வுழி - நடக்குந்தோறும். குறுங்கண் - குறுகிய துளை வழியே. உவளகமடு - பள்ளமாகியமடு. ஒழுகும் பால் தடினி - பாய்

3. கண் நயப்பான், 4. வியப்பான், 5. படிவத்து, 6. துயின்றருள். 7. புனலூர, 8. எம்மனத் தொடர் புடையானே.

இன்ற பாலாறு. ஓதிமம் - அன்னம். தணந்து - தன்பேடையைப் பிரிந்து, பெடையை மணந்ததன் நனந்தலை - பெடையைக் கூடிய இடத்திலே வளைக்கும் - அகப்படுத்துகின்ற. உரவுநீர் - நீர்உலாவுகின்ற. பொதுஉண் மார்பு - பரத்தையர் பலரும் பொதுவாக அனுபவித்த மார்பு. புன்மனத் தொடர் புடையேன் - வலிமையில்லாத மனத்தோடு உறவுடையயான். சொல்லேன் - புல்லேன் என்று சொல்ல மாட்டுகிலேன்.

வயலூர! புன்மனத் தொடர்புடையேன் பொதுஉண் நின் மார்பு புல்லேன் எனச் சொல்லேன் என்று கூட்டுக.

எருமை - தலைவன். பன்மலர் - பரத்தையர். கன்று - தலைவி. ஓதிமம் - தலைவன். சாதிப்பெடைகள் - பரத்தையர். பானிறப்பெடை - தலைவி. தலைவியைக் கூடிப் பரத்தையர்பால் பிரிந்து மீண்டு வந்த தலைவனை நோக்கி ஊரனே! பலரும் பொதுவாக அனுபவித்த நின் மார்பினைக் கூடமாட்டேன் என்று கூறமாட்டேன். ஏனெனில் வலிமையில்லாத மனம் பெற்றுள்ளேன் ஆதலால் என்பது தலைவி கூற்றின் சாரம்.

கண்டுதான் வளைக்கும் உரவுநீர்க் காவிரிக் குறுவயலூர என்றும் அரங்கத் தமுதின் உரவுநீர்க் காவிரிக் குறுவயலூர என்றும் தனித்தனிக் கூட் டிப் பொருள் காண்க.

குவளையும் நீலமும் தவளஒண் பதுமமும்
பூம்பொறி வண்டுளர் ஆம்பலும் கஞலித்
திசைதிசை யோசனைத் தேங்கமழ் திவ்விய
வசைதீர் அந்தண் மயிலை வேலிப்
பொய்கையுள் தீந்தேன் பொதிஅவிழ் நறுமென்
செய்யபொற் றாமரைத் திருமல ரதற்கும்
மாந்தினர் மதிமயர் வுறுத்தும் பாசடைக்
கரைசேர் வெள்ளிடைக் கலித்தெழு வனவாம்

கஞ்சா விணுக்கும் கஞ்சம்என் றிடுகுறிப்
பெயர்மலி பான்மைப் பெரும்புன லூரன்
தெண்திரைக் காவிரித் திருவரங் கேசன்
தொண்டர்தம் தொண்டர் தொடர்பினை ஒரீஇப்
போதம் புறந்தரப் புரைதீர் தம்முயிர்க்கு
ஏதம் கொள்ளுநர்க்கு இடர்இழைத் தகலாது
ஒல்லாப் புலன்வழி உய்க்கும்
புல்லறி விணுட்குடி புகும்புன் மையனே. 44

(இதுவும் நேரிசை யாசிரியப்பா. பயவுவமப்போலி. திணை - மருதம். பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - உழையரியற் பழித்தல்.

தலைவியின் உறவினர் தலைவனின் பரத்தைமை ஒழுக்கம் கண்டு அவனைப் பழித்துப் பேசுவது இத்துறை.

---

இச்செய்யுள் மாறன் அலங்காரத்தில் பின்வருமாறு காணப் படுகின்றது.

குவளையும் குமுதமும் தவளஒண் பதுமமும்
திசைதிசை யோசனை நெங்கமழ் திவ்விய
வசைதீர் அம்தண் மயிலை வேலிப்
பொய்கையுட் செவ்வியில் பொதிஅவிழ் புனிதச்
செய்ய தாமரைத் தேறலை அளவளாய்
உவட்டாது அருந்தியும் உருகிய கரும்பதன்
கரைசேர் வெள்ளிடைக் கலித்தநீர் முள்ளியிற்
பாடவிழ்த்து அயற்கரும்பு உளர்ந்துஉணப் பதன்அழி
பூநறா உண்டின் புறுபுன லூரன்
தெண்திரைக் காவிரித் திருவரங் கேசன்
தொண்டர்தம் தொண்டர் தொடர்பினை ஒரீஇப்
போதம் புறந்தரப் புரைதீர் இன்னுயிர்க்கு
ஏதம் கொள்ளுநர் இதயம்விட் டகலாது
ஒல்லாப் புலன்வழி உய்க்கும்
புல்லறி விணுட்குடி புகும்புன் மையனே.

தாமரைத் திருமலரதற்கும் கஞ்சாவினுக்கும் கஞ்சம் என்று இடுகுறிப் பெயருடைய புனலூரன்,புலன்வழி உய்க்கும் புல்லறிவினுட் குடி புகும் புன்மையன் என்பது ஊரார்கூறும் பழிப்புரையின் சாரம்.

தவள ஒண் பதுமம்-வெள்ளிய ஒள்ளிய தாமரை. கஞலி - நிறைந்து. யோசனை - நெடுந்தூரம். மயிலை வேலி - இருவாட்சிச் செடியை வேலியாகவுடைய. மாந்தினர் - உண்டவர். மதிமயர்வுறுத்தும்-மதியை மயங்கச் செய்யும். பாசடை-பசிய இலைகளையுடைய- புனலூரன் - தலைவன். ஒரீஇ - நீங்கி. போதம் புறந்தர - அறிவு தோற்று ஓடியமையால். புரைதீர் - குற்றமற்ற. ஏதம் கொள்ளுநர் - துன்பம் அடைவோர். இடர் - துன்பம். ஒல்லா - பொருந்தாத. உய்க்கும் - செலுத்துகின்ற.

தாமரைத் திருமலரதற்கும் கஞ்சாவினுக்கும் பொதுவாகக் கஞ்சம் என்று இடுகுறிப்பெயர் உண்டு. அத்தகைய புனலூரனாகிய தலைவன், புல்லறிவினுட் குடிபுகும் புன்மையன் என்று கூட்டுக.

தெண்டிரைக் காவிரி முதல் புலன் வழி யுய்க்கும் என்பது வரையுள்ள பகுதி புல்லறிவுக்கு அடைமொழிகள். குவளையும் என்பது முதல் செய்ய என்பதுவரை தாமரைக்கு அடைமொழி. மாந்தினர் என்பதுமுதல் கவித்தெழுவனவாம் என்பது வரை கஞ்சாவுக்கு அடைமொழி. தாமரையும் கஞ்சம். கஞ்சாவும் கஞ்சம் ஆவதுபோல் தலைவியும் பெண். பரத்தையும் பெண் என்று கருதுபவன் தலைவன். தலைவியின் அருமை அறிந்து ஒழுகுபவன் அல்லன் என்பது குறிப்பு.

இனியதெள் ளமுதாய் எறிக்கா[1] கிரணப்
பனிமதி அகடுழப் பணைநெடும் பொங்கர்ப்
பூந்துணர் தலைதுயல் பொழிலெழில் நள்ளிடை
ஈர்ந்தண் கோட்டகத்து இனமலர் முற்றிய[2]
பொன்னிதழ்த் தாமரைப் பொற்பொகுட் டாசனத்து
அரசுவீற் றிருந்த அரிதுணர் பன்மைச்
சேவல்ஓ திமம்ஒரு சிறைப்படு காவல்
குறுகுபு கொடுமுள் தாழைவெண் தோட்டினும்
வைகலும் நசைஇவை உறுபுன லூரன்
பூமகள் இலைகுலாம் பூண்முலை பொதுப்பத்
தேம்வழி[4] பசுந்துழாய்த் திருமணி மார்பன்
தென்னரங் கேசன் திருவருட் கிலக்காம்
உரனுடை யோர்கட்கு உறுதுணை[5] யெனவாழ்
இல்லறம் புரிபிறங் காகிருந்து இவ்வின்
அகனமர்ந்து ஆனா துறையுள்
தகவதும்[6] இலாத தவறோரினை.

மாறன் அலங்காரத்துக் கண்ட பாடபேதம்.

1. அமிர்தாய் எறித்தெழு. 2. இவ்வடிக்குப் பின்னும் பூமகள் இலைகுலாம் என்னும் பத்தாவது அடிக்கு முன்னும் பின்வரும் அடிகள் உள்ளன.

"பொதியவிழ் தாமரைப் பொகுட்டாசனத்து
மதிநல னுறப்புணர் மாவைபுனைப் பெடையொடும்
வீற்றிருந தன்புறு மேன்மையோ திமமொரு
பாறபடு கரைசேர் பலமரக் காவின்
குறுகுபு கொடுமுள் தாழைக் கூன்சினை
வெறுநிலத்து அடர்தர விரித்தபா சடைமேல்
தளிநறை மாந்துபு சார்பெடைக் குருகொடு
புணர்தலும் நலனுறும் புனல்வய லூரன்"

3. முகடுழத். 4. தேம்அவிழ். 5. உரனுடையோர்கள் உயிர்த்துணை. 6. தகவேதும்.

(இதுவும் - பயவுவமப் போலி. இதன் வேறுபாடும் கண்டு கொள்க. பகுதி - பரத்தையில் பிரிதல். துறை - தோழி இயற்பழித்தல். இதுவும் நேரிசை யாசிரியப்பா)

தலைவனின் பரத்தைமை ஒழுக்கம் கண்டு தோழி அவனைப் பழித்துப் பேசுவது இத்துறை.

எறித்தரு கிரணமதி - ஒளி வீசுகின்ற சந்திரன். அகடு - சந்திரனின் நடுவிடம். பணை - மரக்கிளை. பொங்கர் - சோலை. ததைஇய - நெருங்கிய. பொழில் எழில் நள்ளிடை - சோலையின் அழகிய நடுவிடத்திலே. ஈர்ந்தண் - மிக்க குளிர்ச்சியுடைய. கோட்டகத்து - குளத்தில். இனமலர் - பல வகைமலர்கள். முற்றிய - சூழ்ந்துள்ள. பொற்பொகுட்டு ஆசனம் - அழகிய தாமரைக் கொட்டையாகிய இருப்பிடம். சேவல் ஓதிமம் - ஆண்அன்னம். ஒருசிறைப் படு கா - ஒரு பக்கத்தே உள்ள சோலை. முள்தாழை வெண் தோட்டினும் - முள்ளையுடைய தாழையின் வெள்ளை மடலிலும். வைகலும் - எப்போதும். நசைஇ - விரும்பி. வைகுறு - தங்குகின்ற. பொதுப்ப - துளைத்தலால். தேம்வழி - தேன் ஒழுகுகின்ற. உரனுடையோர் - மன உறுதி கொண்ட அடியார். இல்லின் அகனமர்ந்து - இல்லறத்தில் மனம் விரும்பி. ஆனாது - நீங்காது. தகவு - தகுதி.

தாமரைப் பொற்பொகுட்டாசனத்து அரசுவீற்றிருந்த சேவல் ஓதிமம் காவின் முள்தாழை வெண்தோட்டினும் வைகுறு புனலூரன் தவறுளான் என்று கூட்டுக.

தாமரையில் அரசுவீற்ற அன்னம் கொடிய முள் தாழை மடலிலும் தங்குவது போல் தலைவன் தலைவியின் நலம் நுகர்ந்து பரத்தையர் நலமும் நுகர்ந்தான் என்பது உள்ளுறை.

நீர்நிலை முற்றலின் நிழல்மலி[1] சோலையுட்
கார்வழங் காத காலையும் கவின்பெற
வேர்முதற் பழுத்து வியன்சினைப் பலவு
வளம்கெழு நாடஎம் மணிபுரை மாண்கவின்
புறம்தரு மாயினும் புனிதமொன் றின்றால்[2]
அரவணைத் துயிலமர்ந் தருள் அரங் கேசன்
தூநீர்க் காவிரித் துறைபடிந் தல்லதை
ஒல்லேம் மலரம ளியின்உறப்
புல்லேம் பரத்தையர் பொதுஉண்நின் மார்பே.[3] 46

(என்பது மெய் யுவமப் போலி. பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - அணைந்தவழி ஊடல். இதுவும் நேரிசை யாசிரியப்பா.)

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் மலரமளியில் தலைவியை அணைந்தான். அப்போது அவள் ஊடிச் சொல்வது இந்தத் துறை.

முற்றலின் - வளைத்தலால். கார் வழங்காத காலையும் - மழை பெய்யாத காலத்திலும். கவின் - அழகு. வியன்சினை - பெரியகிளைகள். பலவு - பலாமரம். வளம்கெழு - வளம் நிறைக்கின்ற. நாட - தலைவனே! மாண்கவின் - சிறப்புற்ற உடலழகு. புறம்தருமாயினும் - எம்மை விட்டு நீங்குமாயினும். புறம்தருமாயினும் புல்லேம் என்று கூட்டுக. படிந் தல்லதை - குளித்துவந்தால் அல்லாமல். ஒல்லேம் - உன்னை அணைய ஒப்பமாட்டோம். புல்லேம் - தழுவமாட்டோம். பொதுவுண்ட - பொதுவாக அனுபவிக்கின்ற.

நின் மார்பு புல்லேம் என்று கூட்டுக.

---

பாடபேதம் 1. முற்றியநிழல்மலி. 2. நின்னின்றால்.
3. பரத்தையர்ப் புணர்ந்த நின் மார்பே.

உலைவில் நீ ரழுவத்து உறுசிறை யவையின்[1]
அலைகொழித்து அறைதொறும் அறைதொறும்[2]
மொத்துண்டு
அழுங்கஞர் எய்திய ஆக்கைய தாகியும்[3]
தன்னால் வளர்க்கத் தருசினை யதன்கண்[4]
மன்னாது அரவின் வயமீன்[5] வைத்தகண்
வாங்கா துய்த்து வளர்புன லூரற்கு
ஏவலிற் பிழையா இன்னிசைப் பாணர்
புதுவது வாய்வழி பிழைத்துஇவண் போதரும்
அதுநினைந்து அருவிருந்து அளித்தற்கு[6] அந்தோ
மதுமகிழ் மார்பினன் வழுதிநன் னாட்டவர்
குடிஞையைக் காய்திறன் குறிப்பது மின்றால்
மாதோ மாணிழை மடவரல்[7]
யாதோ கறிஇங் கினிதமைப் பதுவே. 47

(இதுவும் - மெய்யுவமப் போலி. இதன் வேறுபாடும் காண்க. பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - பாணனைப் பழித்தல். நேரிசையாசிரியப்பா.)

பரத்தையிற் பிரிந்த தலைவன், தலைவியை மீண்டும் அடையும் பொருட்டுப் பாணனைத் தூதாக அனுப்பத் தலைவி அவனைப் பழித்துக் கூறுவது இத்துறை.

உலைவில் நீர்அழுவம் - வற்றாத நீர்ப்பரப்பு, சிறைய வையின் - கரைகளிலே. அழுங்கு அஞர் - கேடுற்ற துன்பம். ஆக்கையது - உடலினது. சினை - முட்டை. மன்னாது - நிலைபெறாமல். அரவின் - அந்த முட்டைகளை உண்ண வரும் பாம்பினிடத்து. உய்த்து - (பார்வை)செலுத்தி. வளர்-

பாடபேதம் : 1. யதன்கண். 2. அலைதொறும் அலை தொறும். 3. யாக்கைய. 4. அதன்மேல். 5. வளர் மீன். 6. அளித்திடற்கு. 7. காதோடு உலவுகண் காரிகை.

வளர்க்கின்ற. புனலூரன் - மருதநிலத்தலைவன். புதுவது வாய்வழி - புதுமையான தூதுச்செயலால். பிழைத்து - பரத்லதயைத் துறந்து. இவண் - இங்கே. போதரும் அது - வருவது. மதுமகிழ் மார்பினன் வழுதி - பாண்டியன். குடிஞை - வையை. காய்திறன் - வற்றச்செய்யும் ஆற்றல். குறிப்பது - நினைப்பது. இன்று - இல்லை. மாதோ - அசை.

மீன் முட்டையிட்டு அதைத் தன் பார்வையாலேயே குஞ்சாக்கும் என்பது இலக்கிய மரபு. அவ்வாறு தன் முட்டையை நோக்கியிருக்கும்போது அலையால் மொத்துண்டாலும் பார்வையை மாற்றாது. ஆனால் பகையாகிய பாம்பு தென்பட்டால் முட்டைமேல் வைத்த பார்வையைத் தன் குஞ்சைக் காப்பதில் உள்ள அக்கறையால், பாம்பின்மேல் வைக்கும். அத்தகைய வளமுள்ள புனலூரன் எனத் தலைவன் குறிக்கப்படுகின்றான்.

இங்கு மீன் தலைவனையும், முட்டை, தலைவியையும் பாம்பு பரத்தையையும் குறிக்க வந்த உள்ளுறை உவமம். தலைவிமேல் வைக்க வேண்டிய அன்பைப் பரத்தைமேல் வைத்தான் என்பது குறிப்பு. இது உள்ளுறை உவமம்.

தலைவியின் கற்புத்திறம் "குடிஞையைக் காய்திறம் குறிப்பதும் இன்று" என்பதால் விளக்கப்படுகின்றது. வற்றாக் குலக்கொடி எனப் பாராட்டப்பட்ட வையையையும் வற்றச் செய்யும் ஆற்றல் உடையவள் தலைவி. பரத்தையைச் சினந்து வசையால் ஒழிக்கும் ஆற்றல் உடையவள் ஆயினும், தலைவனுக்கு அது துன்பம் தருமே என்ற கற்புக் கடம்பூண்டு பொறுத்தாள் என்க.

தன் ஏவலினின்றும் மாறாத இசைப் பாணனது புதுமையான சொல்வழிப்பட்டுத் தலைவியை இதுகாறும் மறந்து பரத்தையில்லில் இருந்த தலைவன், பாணனது சொல்வழியினின்றும் தப்பித் தலைவியிடம் வருவது அறிந்த தலைவி,

தலைவனுக்கு இனிய அடிசில் ஆக்கத் தொடங்கியது கண்ட தோழி போன்ற அயலார் கூறுவதாக அமைந்த பாடல் இது.

பல்மலர் கஞலிய பழுமரச் சோலையுள்
தன்நிழல் துணையாத் தளிர்த்தமௌ வலின்மலர்
விரிகதிர் தெறுதலின் வெம்மையுற்று உணங்க
முட்புறக் குடக்கனி மூடப்பல வதன்அயல்
செங்கிடை மலர்களின் சிறப்பவும் நிழற்றும்
ஒண்புனல் ஊரற்கு உறுபழி விளைக்கும்
யாமே திலமே திலமென எங்கையர்[1]
மாளிகை பயின்று மதங்கர்உற் றிலரால்.
புவிப்பா வலர்புகழ் புரவலன் மதுர
கவிப்பா வலன்புகழ் கருணையங் கடவுள்
மதுமகிழ் மார்பினன் வண்குருகூரன்
சதுமறைப் பொருளால் தருதமிழ் மறையினுள்
முதுமொழி உணரா மூடம தடைந்த
மனன்அக மலம்மிக மறுகுநர்
இனமெனல் ஒன்றாய் இகழ்பொய்ம் மையனே. 43

---

(பாடபேதம்)

1. மாமனைப் பயின்ற மாணிழை மடவரல்
மதர்அரிக் கண்ணாய்! மதங்கன்உற் றிலனால்
புவிப்பா வலர்தம் புரவலன் மதுர
கவிப்பா வலன்புகழ் கருணையங் கடல்எனும்
மதுமகிழ் மாலிகை மார்பினன் மயர்வறச்
சதுமறைப் பொருளால் தருமதமிழ் மறைத்துணி
வுரனுடை யோரின் உணர்ந்துஉயர் வறுஉயர்
நலனுடை இறைநிலை நவையறத் தெளிந்தோர்
பரிதீர் படிவம் பயின்றனர் ஆகிக்
குணவதம் இழந்த கூடா ஒழுக்கின்
மனமக மலமிக மறுகுவார்
இனம்எனல் ஒன்றாய் இகழ்பொய்ம் மையனே,

(என்பது உருவுவமப் போலி. பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - பாணனொடு வெகுளுதல். தோழிகூற்று. பா - நேரிசை யாசிரியப்பா)

கஞலிய - நெருங்க மலர்ந்த. பழுமரம் - பழுத்தமரம். மௌவல் - முல்லை. விரிகதிர் - சூரியன். தெறுதலின் - எரிப்பதால். உணங்க - வாடும்போது. முட்புறக் குடக்கனி - பலாப்பழம். முடப்பலவு - வளைந்த பலாமரம். செங்கிடை - நெட்டிப்பூண்டு. நிழற்றும் - நிழல் செய்யும். புனலூரன் - தலைவன். ஏதிலம் - உறவு இல்லோம். எங்கையர் - பரத்தையர். மதங்கர் - பாணர். புரவலன் - அரசன். மகிழ் - மகிழம்பூ. தமிழ்மறை - திருவாய்மொழி. முதுமொழி - (தத்துவம்), மெய்ப்பொருள். மூடம் - அறியாமை. மனம் அகம்-மனத்தில். மலம்-குற்றம். மிக-மிகுதலால். மறுகுனர் - வருந்துபவர். இனம் - ஒப்பு. இகழ் - இகழ்வதற்கேற்ற.

நறிய முல்லைமலர் வெயிலால் வாடும்போது, அதற்கு நிழல் தாராமல், முடப்பலாமரம் பயன்அற்ற செங்கிடை (நெட்டிப்பூண்டு)க்கு நிழல்தரும் புனலூரன் என்பது உள்ளுறை உவமம். முல்லை - தலைவி. முடப்பலா - தலைவன். செங்கிடை-பரத்தை என்று கொள்க. தலைவன் தலைவிக்கு அருள் செய்யாமல் பரத்தைக்கு அருள்கின்றான் என்பது குறிப்பு.

தலைவன் பரத்தையர் இல்லில் தங்கியிருக்கையில் அவர்கள் யாம் உனக்கு உறவு அல்லேம் அல்லேம் என்று கூறினாலும் அவர் மாளிகையிலேயே தங்கியிருப்பான். ஆதலால் அவனிடமிருந்து பாணன் தூதாகத் தன்னிடம் வந்திலன் எனக் கருதித் தலைவி பாணனைச் சினந்து கூறுவதாக அமைந்த பாடல் இது. திருவாய்மொழியின் நுட்பம் அறியாமல் மடமையடைந்த மனதில் குற்றங்கள் மிகும். அதனால் அந்த மனம் வருந்தும். அவ்வாறு வருந்துபவர்க்கு இனமாக இகழ்ப்படுகின்ற பொய்யன் என்பது பாணனைக் குறித்த தலைவியின் வசைப்பேச்சு. மதங்கர் உற்றிலர் - இகழ்ச்சிக் குறிப்பு.

ஒன்றாய்ப் பரந்த உறுவளி கறங்கலின்
மின்தாழ் பல்மீன் மிளிர்விசும்பு உழுசினை
சுமைமலிந்து ஒசிதரத் துணர்த்தமென் பூமுகை
பொறிச்சுரும்பு ஊர்தொறும் ஊர்தொறும் பொதும்பருள்
முறுக்குடைந்து இழிதரூஉம் மொய்ந்நறுந் தேறல்
பரந்துபல் முகத்தவாய்ப் பவளக் கொடியொடும்
குரூஉக்கண் டரூஉத்தாள் குடம்புரை செருத்தல்
கயவாய் மேதி கட்கழு நீர்உண்டு
உயவால் வைந்நுதித் தொடர்நெறி மருப்பின்
புறக்காழ் வயிரப் பூஞ்சழை தடிந்துஉகு
நிறக்காழ் நித்திலம் நிரந்தரம் வரன்றுஅயல்
வெள்ளிடை நியந்த மேதகு சுவலினை
உள்உயிர்ப் பேடையை உறையுளின் இருத்திப்
பாலுள்நீர் தெரித்துப் பருகும்ஒண் சேவல்
ஆலும்நீர்ச் சிறைபுக்கு ஆய்ந்துஇரைகொணர்வல்என்று
இகந்துஅற விடைப்[1]படிந்து எழும்அயர் வுயிர்ப்பான்
வாலுக வைப்பென மறுகுபு குறுகிவீழ்ந்து
அன்மையில் தவக்குற்று அச்சப் பார்வையில்
புராதனப் பொய்கையுள் புகும்புன லூர!
பொருவரு தாமரைப் புதல்வனைப் பயந்த
திருமறு மார்பினன் திருவரங் கத்துள்
பொதுநலப் பெண்டிர் பொதுஉண் நின் மார்பம்
மல்லல் நீர்படிந் தல்லது
புல்லேம் தீண்டல்எம் பொன்னடிப் போதே[2] 49

(இதுவும் - உருவுவமப்போலி. இதன் வேறுபாடும் காண்க. பகுதி - பரத்தையில் பிரிதல். துறை - அணைந்த வழி ஊடல், பா - நேரிசை ஆசிரியப்பா.)

---

பாடபேதம்: 1. அயலிடைப் 2. பொன்னடிச் சுவடே

ஒன்றாய்ப் பரந்த - ஒருமிக்க வீசிய. உறுவளி - மிக்க காற்று. சுறங்கலின் - சுழல்வதால். மின்தாழ் - ஒளி தங்குகின்ற. பல்மீன் - பல விண்மீன்கள். விசும்பு - ஆகாயம். சினை - மரக்கிளை. கமை - (மலர்ச்) சுமை. ஒசிதர - வளையும்படி. துணர்த்த - கொத்தாக மலர்ந்த. முகை - மொட்டு. சுரும்பு - வண்டு. உளர்தொறும் - கிண்டும் போதெல்லாம். பொதும்பர் - சோலை. முறுக்கு-மொக்கின் சட்டு. இழிதரும் - வழிகின்ற. தேறல் - தேன். குருஉக்கண்-ஒளியுடைய கண். பருஉத்தாள் - பருத்த அடி. குடம்புரை-குடம்போன்ற. செருத்தல் - பால்மடி. கயவாய்-பெரியவாய். மேதி - எருமை. கள் கமழ்நீர் - கள்ளையுடைய செங்குவளை மலர். உயவால் - வருத்தத்தால். வைநுதி - கூரியநுனி. தொடர்நெறி மருப்பு - தொடர்ந்து வளைந்த கொம்பு. புறக்காழ் - புறத்திலே வயிரமுடைய. கழை - மூங்கில். தடிந்து - அழித்து. உகு - சிந்துகின்ற. நிறக்காழ் - ஒளியும் உறுதியும். நித்திலம் - முத்து. நிரந்தரம் - எப்போதும். வரன்று - அள்ளி. வெள்ளிடை - வெளியிடத்தே. நிவந்த - மேலே எழுந்த. கவல் - மேடு. பேடை - அன்னப்பெடை. உறையுள் - இருப்பிடம். தெரித்து - பிரித்து. சேவல்-ஆண் அன்னம். ஆலும் - ஒலிக்கின்ற. நீர்ச்சிறை - நீர்க்கரை. புக்கு - புகுந்து. ஆய்ந்து - தேடி. இகந்து - புறப்பட்டு. அறலிடை - மணலிலே. அயர்வுயிர்ப்பான் - வருத்தம் தீரும் பொருட்டு. வாலுகம் - மணல். வைப்பு - இடம். மறுகுபு-சுழன்று. அன்மையின் - (மணல்) அல்லாமையால். தவக்குற்று - வாட்டமுற்று. புராதனம்-பழமையான. பொருவரு-ஒப்பற்ற. தாமரைப் புதல்வன் - பிரமதேவன். பயந்த - பெற்ற. பொதுஉண் - பொதுவாக அனுபவிக்கின்ற. மல்லல் நீர் - வளமான நீர். புல்லேம் - தொடமாட்டோம். தீண்டல்-தொடாதே.

காற்று சுழல்வதால் மரக்கிளைகள் வளையும்படி பூத்த பூமொட்டுக்களில் வண்டுகள் படியுந்தோறும் தேன் ஒழுகு

கின்றது. அந்தத் தேன் பரவி பலமுகப்பட்டு, பவளங்களுடன் (எருமைகள் தம் கொம்புகளால் குத்தி உதிர்க்கின்ற) முத்துக் களையும் வாரிக்கொண்டு வெற்றிடத்தே மேடாகக் குவித் துள்ளது.

ஓர் ஆண் அன்னம் தன் பேடைக்கு உணவு தேடிவரப் புறப்பட்டது. நீர்க்கரைகளில் இரைதேடி அலைந்த வருத்தம் தீரும்பொருட்டு அந்த(ப்பவளமும் முத்தும் குவிந்த) மேட்டை மணல்மேடு என்று கருதி வீழ்ந்தது. அது மணல் மேடு அல்லாமையால், வருத்தமுற்றுப், பழைய பொய்கை யிலே போய்ப் புகுந்தது. அத்தகைய நீர்வளம் உள்ள ஊரன் அந்தத் தலைவன். அவன் பரத்தையர்பால் பிரிந்து சென்று தங்கினான். அதன் பின்னர் வெறுத்துத் தலைவியைத் தேடி வந்து அவளை அணைக்கத் தொடங்கினான். அப்போது அவள் ''பொதுநலப் பெண்டிர் பலரும் பொதுவாக அனு பவித்த நின் மார்பினை நீராடி வந்தால் அல்லது தொட மாட்டோம்'' என்றாள். அவன் அவளின் ஊடலைத் தீர்க்கும் பொருட்டு அவள் அடியைப் பற்றினான். ''நீராடி வந்தல்லது எம் அடியைத் தொடாதே'' என்று அவள் ஊடி யுரைப்பதாக அமைந்த பாடல்.

ஒன்றாய் என்பது முதல் புனல் ஊரன் வரையுள்ள பகுதி உள்ளுறை உவமம்.

ஆண் அன்னம் - தலைவன் பவளமும் முத்தும் சேர்ந்த மேடு - பரத்தையர். பழைய பொய்கை - தலைவி. இவ்வாறு உள்ளுறை உவமை கொள்க.

ஆண் அன்னம் இளைப்பாறும மணல் மேடாகக் கருதிய இடம் பவளமும் முத்தும் குவிந்தமேடு. அது மணல் மேடு அல்லாமையால் அதை வெறுத்துப் பழைய பொய்கைக்கே திரும்பியது, அதைப்போல் தலைவனும் இன்பம் துய்க்கும்

இடமாகக் கருதிய பரத்தையர் இல்லம். நிரந்தரமான இடம் அல்லாமையால் தலைவியினிடத்துக்கே திரும்புகின்றான் என்று கொள்க.

ஓங்கிய குரர்புகார் உவளக வயின்வயின்
வீங்கிய திணிதோள் மிடலுடை மள்ளர்
சுதைபெய்து ஆற்றலின் சுடுமண் பல்முறை
தலைவறப் படுத்த சால்பில் தெண்ணீர்
வார்ந்துறு கவர்முழை மதகுபடர் குடுமியில்
சேர்ந்துஅசை வறுஇரு சிறகரும் ஒடுக்கி
மறைபுகு நோக்கின் மனைப்பட் டிமையால்
துறைபுகு கயலினைச் சோர்புகண் டெடுத்துக்
கூர்வாய் வெண்சிறைக் குரண்டம் மென்பெடைக்கு
ஆர்வாய் என அருத் தியின் அருத் துபுதுடித்து
அயல்வீழ் வதனை ஆங்கு அற்றம் பார்த்து
மிச்சில்என்று அறிந்தும் விழுநெறி ஓரீஇ
நச்சிஉண் புலவு நாற்றத் தோடும்
செங்கால் வெள்ளுகிர்ச் சேவல் ஓதிமம்
ஒருசிறை இருந்த ஓவாச்செவ்வி
இருசிறைப் பெடைஉறை எழில்[1]மலர் குறுகும்
தளிமலர்ப் பொய்கை நல்வய லூர!
திருநெடு மாயன் திருவரங் கத்துப்
பொருள்நசைப் பரத்தையர் பொறித்தநின் மார்பில்
தனக்குறி, யாம்நின் தழுவுபு சிதைவுறின்
மனக்கிடர் இழைப்பதும் அன்றி
நினைக்கிடர் உறுமால் நெருங்கல்எம் மிடனே!

(என்பது பிறப்புவமப்போலி. பகுதி - பரத்தையில் பிரிதல். துறை - பெண்பால் பெருந்திணை. [illegible] - பள்ளியிடத்து ஊடல். பா - நேரிசை ஆசிரியப்பா.)

குரம்பு - வரப்பு. உவளகம் - குளம். வயின்வயின் - இடந்தோறும். வீங்கிய - பருத்த. மிடல் - வலிமை. மள்ளர் - உழவர். சுதை - சுண்ணச் சாந்து. பெய்து - இட்டு. சுடுமண் - செங்கல். தகைவுற - நெருங்க. படுத்த சால்பில் - செறியச் செய்த தன்மையால். வார்ந்துஉகு - ஒழுகிவருகின்ற.

முழை - துவாரம். குடுமி - உச்சி. மறைபுகு நோக்கின் - மறைந்து புகுகின்ற எண்ணத்திலே. மனப்பட்டிமை - வஞ்சகம். கயல் - மீன். சோர்புகண்டு - சோர்கின்ற இடம்கண்டு. குரண்டம் - கொக்கு. ஆர்வாய் - உண்பாயாக. அருத்தியின் - விருப்பத்துடன். அருத்துபு - ஊட்டி. அற்றம்பார்த்து - சமயம்பார்த்து. மிச்சில் - எச்சில். ஓரீஇ - விட்டு. நச்சி - விரும்பி. ஓதிமம் - அன்னம். ஒருசிறை - ஒருபக்கம். ஓவாச் செவ்வி - தொலையாத அழகு. பெடை - பெண் அன்னம்.

பொருள்நசை - பொருளில் விருப்பத்தையுடைய. பொறித்த - முலைக்குறி எழுதிய. தழுவுபு - தழுவியதால். சிதைவுறின் - அழிந்து போனால். மனக்கு இடர் - மனத்துக்குத் துன்பம். நெருங்கல் எம்இடன் - எம்மிடம் நெருங்காதே!

பரத்தை இல்லிலிருந்து வந்த தலைவன், தலைவியை அணைய நெருங்கியபோது, தலைவி ஊடிக் கூறும் கூற்றாக உள்ளது இப்பாடல்.

ஓங்கிய என்பது முதல் வயலூர என்பதுவரை உள்ளுறை உவமம்.

ஓங்கிய என்பது முதல் கவர் முழை என்பது வரை, மதகு படர் குடுமிக்கு அடைமொழி. சேர்ந்து என்பது முதல் வெண்சிறை என்பது வரை குரண்டத்துக்கு அடைமொழி. ஆர்வாய் என்பது முதல் வெள்ளுகிர் என்பதுவரை சேவல் ஓதிமத்துக்கு அடைமொழி. மதகின் உச்சியில் சிறையொடுக்கியிருந்த ஆண் கொக்கு, கயலினை எடுத்துத் தன்பேடைக்கு ஊட்டும்போது, அந்தக் கயல் துள்ளி அயலில் விழ, அந்தச்

சமயத்துக்காகக் காத்திருந்த ஆண் அன்னம், அது எச்சில் என்று அறிந்துவைத்தும் அதை எடுத்து உண்டு விட்டுத் தன் பெடை உறைகின்ற மலரை அடைதற்கு இடமான வயலூரன் என்பது திரண்ட கருத்து.

ஆண்கொக்கு பல காமுகரையும், அது கவ்விய கயல் பரத்தையரையும், அது நெகிழ்ந்து கயல் விழக் காத்திருந்து உண்ட ஆண் அன்னம் தலைவனையும் அது தன் பெடையிடம் அடைந்தமை தலைவன் பரத்தையரைத் துய்த்து விட்டுத் தலைவியிடம் வந்தமையையும் குறிப்பது உள்ளுறை உவமம்.

'வயலூரனே! பரத்தையர் நின்மார்பில் தங்கள் முலைக் குறிபதித்து வைத்துள்ளனர். என்னை அணைந்தால், அந்தக் குறி அழிந்துவிடும். அந்தக் குறியைக் காணாவிடின் அவர்கள் வருந்துவர். அவர்கள் ஊடுவதால் அவர்கள் போகம் பெறாமல் நீயும் வருந்த நேரிடும். ஆதலால் எம்மிடம் நெருங்காதே!'' என்பது தலைவியின் பேச்சு.

விசும்பு தூர்த்துஎழு வியன்சினை யத்தின்
பசும்புறத் தீங்கனி பரீஇநுகர் கடுவன்
புரப்பவர் குறுகுபு புலம்புஉறீஇப் பொங்கர்
இரிந்துஅலம் போதரும சார்ந்தண சோலையுள்
புனிங்கறி வேட்ட புன்தொழின் மையர்க்கு[1] உறாது
பழிப்பின் றாகப் பாகுசெய்து அட்ட
கோதறும் ஆன்பால குழம்புபொற் கலத்தினுள்
பெய்திருந்து ஆறிய பெற்றி போல[2]
முடவடிப் பலவின் முட்புறக் குடக்கனி[3]

பாடபேதம். 1. தொழில் தனமையர்க்கு, 2. ஆறும் பெற்றி ஏய்ப்ப. 3. முதிர்பொற் குடக்கனி.

வேர்முதல் பழுத்து விரிந்தபொற் றீஞ்சுளை
பதன்அழி பான்மைப் பாய்வய லூர!
நூற்கடல் பழகிய நுண்ணறி வுடையோர்
ஆற்றலில் பரவுசீர் அரங்கனுக்கு அமைந்த
பாற்கடல் முற்றப் பருகுதற்கு எழுந்த
பேராப் பெரும்பசி யாளர்தம் முன்னர்
ஆரா வள்ளத்து அமுதமைப் பவர்போல்
சிறுவரை இன்பத்து உறுதுயர் இழைத்தற்கு
இரத்தல் ஈங்குஇயல்பு அன்றால்
பரத்தையில் பிரிதல்நின் பண்பா கும்மே! 51

[இஃது "உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத் தள்ளா தாகும் திணையுணர்வகையே" என்பதனால், புளிங் கறி வேட்ட புன் தொழின்மையர்க்குப் பாற்குழம்பு பொற் கலத்தினுட் பெய்திருந்து ஆறிய பெற்றிபோல என்று புலப் படக் கூறும் ஏனை உவமம், புலப்படக் கூறாத உள்ளுறை உவமத்தினைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து அதனுட் கூடி நின்றது.

"விரிகதிர் மண்டிலம் வியல்விசும்பு ஊர்தர" என்னும் மருதக்கலியுள்ளும் "நனிவிரைந்து அளித்தலின் நகுபவள் முகம்போல" என்ற வினையுவமம் தாமரை மலர் பனி வாரத் தளைவிடும் என்ற உள்ளுறை உவமத்தைத் தருகின்ற கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றது.

அன்றியும் "உடனுறை உவமம் சுட்டு நகை சிறப்பு எனக் கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே" என்ற பொருளியல் சூத்திரத்தால் சிறப்பு என்ற உள்ளுறை, இவ் ஏனை யுவமம் உள்ளுறை உவமத்திற்குச் சிறப்புக் கொடுத்து உள்ளுறை உவமம் போலத் திணை உணர்தலைத் தள்ளாது நின்றவாறு காண்க!

இது பரத்தையிற் புணர்ந்து வந்த தலைவன் வரவு கண்டு ஊடிய காமக் கிழத்தி ஊடியவாறு கண்டு, சார்ந்த தலைவனுடன் ஊடல் தீர்கின்றாள் கூறியது.

இதனுள் தலைவி, தோழி, காமக்கிழத்தி, உழையர் என்போர் கூற்று வந்தன. ஒழிந்தோர் கூற்றும் வந்த வழிக் காண்க. இவை பத்தும் நேரிசை ஆசிரியப்பா.]

விசும்பு - வானம். தூர்த்து - மறைத்து. சினை - கிளை. பசும்புறத்தீங்கனி - புறத்தே பசுமையான இனிய பழம். பரிஇ - சுமந்து. நுகர் - உண்கின்ற. கடுவன - குரங்கு. புரப்பவர் - தோட்டக்காரர். குறுதபு - குறுகியமையால். புலம்புஉரீஇ - தனிமைப்பட்டு. பொங்கர் இரிந்து - சோலையைவிட்டு நீங்கி. அலம் போதரும் - சஞ்சலம் அடைகின்ற. ஈர்ந்தண் - மிகக்குளிர்ந்த.

புளிங்கறி - புளிப்பான குழம்பு. வேட்ட - விரும்பிய. புன் தொழின்மையர் - அற்பமான தொழிலினர். உறாது - கிடைக்காமல். பாகு செய்து - பக்குவம் செய்து. அட்ட - காய்ச்சிய. ஆன்பால் குழம்பு - பசும்பாலின் குழம்பு. பெய்து - ஊற்றிய. பெற்றி - தன்மை. முடவடி - வளைந்த அடிமரம். முட்புறக் குடக்கனி - புறத்தே முள்ளைக்கொண்ட குடம் போன்ற பலாப்பழம். வேர்முதல் - வேரினிடத்தே. பொன் தீஞ்சுளை - பொன்னிறமான இனிய பலாச் சுளைகள். பதன் அழிபான்மை - உண்பாரில்லாமல் பக்குவம் கெடுகின்ற தன்மை. அமுது - அன்னம். சிறுவரை - சிறிதுநேரமே நிலைக்கக்கூடிய. உறுதுயர் - மிக்க துயர்.

கனி கவர்ந்து உண்ணத் தொடங்கியது குரங்கு. தோட்டக்காரன் வந்து விட்டான். குரங்கு கனியைப்போட்டு விட்டுச் சோலையை விட்டு ஓடிவிட்டது. அத்தகையவள முள்ளது சோலை. அங்குச் சிலர் புல்லிய தொழிலினர். அவர்கள் புளிங்கறிதான் உண்ண விரும்புவர்.

அவர்களுக்குப் பாற்குழம்பு சமைத்துப் பொன்வள்ளத்து ஊற்றித் தரினும் அவர்கள் உண்ணார். அப்பாற்குழம்பு பருகுவார் இன்றி ஆறிப்போகும், அந்தப் பால் ஆறுவதைப் போல, பலாப்பழத்தின் சுளைகள் உண்பார் இல்லாமல் பக்குவம் கெடுகின்றது. மருதநிலத்து ஊரில். அத்தகைய ஊருக்குத் தலைவன் அவன். அவன் பரத்தை இல்லைப் பிரிந்து காமக் கிழத்தியிடம் வருகின்றான். அப்போது அவன் ஊடியுரைப்பதாக அமைந்தபாடல் இது.

"பாற்கடல் முழுவதும் பருகினாலும் அமையாத பெரும் பசியாளர்க்கு முன்னே, சிறிய வள்ளத்திலே சிறிது அன்னமிட்டால் என்ன பயன்? நீயோ பெருங்காமப் பசியன். அப் பசிக்கு என்பால் நுகரும் இன்பம் மிகச் சிறியது. அதுமட்டுமா! என்னைக் கலந்து சென்றால், நின் பரத்தையர் உன்னுடன் ஊடிவிடுவர். அவர்பால் பெறும் பெரிய இன்பமும் உனக்கு இல்லாமல் போகும். ஆதலால் சிறிது நேர இன்பத்தின் பொருட்டுப் பெருந்துயர் இழைப்பது புத்திசாலித்தனமல்ல. ஆதலால் பரத்தையரிடமே செல்வது உனக்குத் தக்கது" என்பது காமக் கிழத்தியின் ஊடல் உரை.

இப் பாடலில் உள்ளுறை உவமம் வந்துள்ளது,

புல்லியதொழிலினர் என்பது தலைவனையும் புளிங்கறி என்பது பரத்தையரையும் ஆன்பாற் குழம்பு என்பது காமக் கிழத்தியையும் பெய்திருந்து ஆறுதல் அவளைத் தலைவன் நுகராமையையும் காட்டுதல் காண்க.

பால் குழம்பு ஆறுவது உள்ளுறை உவமமாகவும் பலாப் பழம் பக்குவம் கெடுவதற்கு உவமையாகவும் வந்துள்ளது. இங்குப் பலாக்கனி காமக் கிழத்தியையும், பதன் அழிவது அவளை நுகராமையையும் குறிக்கும் உள்ளுறை உவமங்களாம்.

இது காறும் வந்த உள்ளுறை உவமங்களில் இதற்குத் தனிச்சிறப்பு உண்டு. பலாக்கனி பக்குவம் கெடுகின்றது என்ற

புலப்படாத உள்ளுறை உவமத்துக்கு, பசும்பால் கலத்ினுட் பெய்து அறிய பெற்றியைப் புலப்படும் உவமையாகக் காட்டியதே அந்தச் சிறப்பு.

இதற்குரிய விளக்கம் பழைய குறிப்புரையில் விரிவாகக் காணலாம்.

உள்ளுறை உவமத்துக்கு வேறோர் உவமை தருவது. சிறப்பு உள்ளுறை எனத் தொல்காப்பியம் குறிப்பிட்டமைக்கு, இது தக்க எடுத்துக் காட்டு.

திரைகொழித்து உயிர்ப்பன திகழ்வலம் புரியே
வலம்புரி உயிர்ப்பன வாள்நித் திலமே
நித்திலம் உயிர்ப்பன நெடுவெண் ணிலவே
நிலவுற அடர்பிணி நெகிழ்வன குமுதம்
குமுதம்அங் குயிர்ப்பன குளிர்தெண் ணறையே
நறைநதி
சுழித்தெடுத் தனவாய்த் துறைதொறும் துறைதொறும்
தெழித்துயிர்ப் பனவும் குறுமணித் திரளே
மணித்திரள்
பரிதிபோன்று இரவினைப் பகல்செய் வனவால்
அருகுநின் றலர்வன அம்புய மலரு
மலரினை
அளகமர் புறவினுள் ஆன்புனல் உணயரீஇக்
குளகென மாந்துபு குழக்கன்று உள்ளலும்
உள்ளிப்
படர்வுழிப் படர்வுழிப் பணைமுலைத் துளைவழிக்
குடமடித் தீம்பால் குதித்திரு நிலத்துற
அப்பால்

ஆறுஇரண் டெனப்பகுத்து அலைத்தெழு நனந்தலை
வீறுடன் எக்கர்கூர் வெண்மணல் வெள்ளிடை
நள்ளிடை
மதி அகடு உரிஞ்சிய மழைதவழ் பொதும்பர்ப்
புதியமென் மலரினைப் பூத்த காயா
வைகலும்
சொரிதரு நாண்மலர் துவன்றுஉயர் நீளிடை
விரிவன வாகி விழுமிதின் விளங்கும்
அத்திறம்
பாலா ழியின் நடுப் பரிமள அரவணை
மேலாய் விழிதுயில் விமலனைப் பொருவருஞ்
சங்கணித்
துறைபயில் பொருநைச் சொற்றமிழ்க் குருகூர்
இறைவநின் பொன்னடி இறைஞ்சுகேன் இன்னும்
நானிலத்து ஒருபிறப்பு உனதாம் நன்னகர்
மானிடப் பிறவியில் ஆண்உரு எனலாம்
அதுமுத லியபெறற்கு அரியன எளிமையின்
பொதுவற எய்திநின் புகழ்புல வன்எனாப்
பருமணி குயிற்றிய பசும்பொற் கும்பத்து
அருள்மலி மஞ்சனம் ஆடிய காலையில்
உத்தம ஈராடையும்முறுக்கு ஒலியலும்
அத்தக வடைந்துஅவண் அலங்கரித்து எழுதிருக்
கைத்தலச் சேவையும் முத்திரைக் கரமும்
சித்திர நாபியில் செறித்தகைத் தலமும்
புத்தமு தனையசெந் தமிழ்மறைப் பொருள்புணர்
முத்தமும் திருப்பவ ளமும்குறு முரலும்

மறுத்துடைத்து ஒளிர்முழு மதிமுகச் சோதியும்
உறுப்புடைத் திருக்குழை உருவமும் புருவமும்
நயன்அமர்ந் தருள்புரி நயனமும் புயமும்
மயன்முதல் மதித்தபத் மாசனத் திருப்பும்
வளமா பரண மார்பமும் மலரியும்
முளைாது இணைவிழி முழுதுறு காட்சியின்
கூடிய உணர்வொடும் குழைந்துஎழில் நாவால்
பாடிநின் றாடியும் பன்னாள் கழிந்தபின்
பொருவில்பே ரின்பமும் புணர்வான்
ஒருவரம் திருவுளம் உவந்துஅருள் கெனவே. 52

(இது நாற்பத்து ஐந்து அடியாய் இடையிடை தனிச்சொல் பெற்று வந்த நேரிசையாசிரியப்பா. என்னை? "ஈர்கூன் ஆதல் நேரடிக்கு உரித்தே" என்பதனால் அறிக! இது திணை - பாடாண். துறை - கடவுள் வணக்கம்.)

திரை - அலை. உயிர்ப்பன - வெளிப்படுப்பன. வலம்புரி - சங்கு. வாள் - ஒளி. நித்திலம் - முத்து. அடர்பிணி - நெருங்கிய பொட்டு. தெள்நறை - தெளிந்த தேன். மணித்திரள் - மாணிக்கக்கற்கள். பரிதி - சூரியன். அப்புயம் - தாமரை. அளகு - மயிற் பேடை. புறவு - முல்லைநிலம். மரீஇ - பொருந்தி. குளகு - இரை. மாந்துபு - உண்டு. குழக்கன்று - இளங்கன்று. உள்ளல் - நினைத்தல். படர்வுழி - செல்லுந்தோறும்.

பணைமுலை - பருத்தமடி. குடமடி - குடம்போன்றமடி. ஆறுஇரண்டு - இருநதிகள். நனந்தலை - அகன்றஇடம். எக்கர் - நுண்மணல். கூர்தல் - மிகுதல். வெள்ளிடை - வெளியிடம். நள்ளிடை - நெருங்கிய இடத்தில். மதியகடு - சந்திரனின் உடல் (வயிறு). உரிஞ்சிய - உராய்ந்த. மழை - மேகம். பொதும்பர் - சோலை. காயா - ஒருவகை மலர். துவன்று -

நெருங்கி. நீளிடை - நீண்ட இடம். விழுமிது - சிறந்தது. பாலாழி - பாற்கடல். பரிமளம் - மணம். அரவு அணை - அனந்த சயனம்.

விமலன் - திருமால். பொருவு - போன்ற. சங்கணித்துறை-பொருநை நதித்துறையின் பெயர். குருகூர் இறைவன்-நம் மாழ்வார். இறைஞ்சுகேன் - வணங்குவேன். பொதுவற-சிறப்பாக. எய்தி - அடைந்து. குயிற்றிய - பதித்த. கும்பம் - குடம். மஞ்சனமாடுதல் - நீராடல். ஒலியல் - மேலாடை. கரம் -கை. சித்திரம்- அழகு. முத்தம் - பல். பவளம் - இதழ். மூரல் - சிரிப்பு. மறு - குற்றம்.

திருக்குழை - காதணி. உருவம் - அழகு. நயன்-இன்பம். நயன அம்புயம் - தாமரைமலர் போன்ற கண். மயன் முதல் மதித்த - முன்னாளில் மயன் என்னும் தேவதச்சன் தன் சங்கற்பத்தால் செய்த. வகுளாபரணம் - மகிழமலர் மாலை. மவுலி - திருமுடி. முகுளாது - இமைக்காமல். புணர்வான் - அடையும் பொருட்டு.

முதல் பதினைந்து அடிகளில் அந்தாதித் தொடை அமைந்துள்ளது. வெண்மணல் வெள்ளிடையில் கரிய காயா மலர்கள் குவிந்திருப்பது, பாற்கடலில் திருமால் பள்ளி கொண்டிருப்பதைப் போன்றுள்ளது. வெண்மணல் பாற்கடலுக்கும் காயாமலர் திருமாலுக்கும் உவமைகள். ஒருவரம் திருவுளம் உவந்து அருள் எனவே இறைஞ்சுகேன் என்று கூட்டுக.

இன்னும் ஒருபிறப்பு உன்னதாகிய நன்னகரிலே, மானிடப் பிறப்பாகவும் ஆணாகவும் பிறந்து உன் திருமஞ்சனத்தின் போது, உன் திருமேனி யழகைக் கண்டு பாடி நின்றாடியும் பொருவில் பேரின்பமும் பெறும் பொருட்டு ஒருவரம் அருள் என இறைஞ்சினேன் என்பது திரண்ட பொருள்.

கார்கதழ் பரிநெடுந் தேரின்முந் நீரதால்
காகோ தரஅணைக் கண்துயில் நெடுமால்
கார்வா னத்துஉகும் மாரியும்—வலவா!
காரிகை மையுண் கண்கலுழ் மாரியும்
காமன்ஐங் கணைமலர் பொழிநறை மாரியும்
காட்சிமுந் நீரில் கலந்துஇவண் எதிர்கொளும்
கால்உருள் கொடாது அதை அறிந்துஒரு கனவரை
காணுதி அவண்உறக் கடாவுதி! இரதம்
காவல்உன் உயிர்க்குஇனி அதுவே
காவல்இன்று எனதுஉயிர் உறுதுயர்க் கடற்கே. 53

(இதுவும் நேரிசையாசிரியப்பா, இஃது அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால், அடி மோனைத் தொடை. பகுதி - பொருள் வயின்பிரிதல். துறை - பாகனொடு கூறல்.)

கார்காலத்துக்கு முன் வருவேன் என்று கூறித் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வினைமுற்றி மீண்டு வரும்போது தேர்ப்பாகனிடம் கூறுவதாக அமைந்த பாடல் இது. (4ஆம் பாடல் காண்க.)

கார் - கார்காலம். கதழ் - விரைவு. பரி - குதிரை. தேரின் - தேரைவிட. காகோதரம் - பாம்பு. உகுதல் - சொரிதல். வலவன் - தேர்ப்பாகன். கலுழ்தல் - சொரிதல். ஐங்கணை - ஐந்துமலர் அம்புகள். நறை - தேன். முந்நீரில் - கடல்போல. கால் - தேர்ச்சக்கரம். உருள்கொடாது - உருள விடாது. கனவரை - பெரியமலை. கடாவுதி - (தேரைச்) செலுத்து. எனதுயிர் - தலைவி. காவல் இன்று - பாதுகாப்பு இல்லை.

இனி உன் உயிர்க்கு அதுவே காவல். என்னுயிர் உறு துயர்க்கடற்குக் காவல் இன்று என்று பொருள் கொள்க!

வலவா! நம் தேரைக் காட்டிலும் கார்காலம் முந்தி விட்டது. திருமால் நிறம் போன்ற மேகம் பொழியும் மாரியும் கண்ணீர் மாரியும் மன்மதன் ஏவும் மலர்களின்தேன் மாரியும் கடல் போலத் திரண்டு இங்கு எதிர்ப்பட்டது. அந்த வெள்ளம் நம் தேரை இழுத்துச் சென்று விடுமுன்பு ஒரு பெரிய மலையை நோக்கித் தேரைச் செலுத்து. அப்படிச் செய்வதுதான் உயிர்க்குக் காப்பு. ஆனால் என் உயிர் போன்ற காதலியின் துயருக்குப் பாதுகாப்பு இனி இல்லை என்பது திரண்ட கருத்து.

அணங்கனாள் உறையுள்என் பதும்தா மரையே!
சுணங்குலாம் இளமுலை துணைத்தா மரையே!
ஒளிர்முகம் அங்கண் உந் தியந்தா மரையே!
தெளிதரின் மதர்விழி செந்தா மரையே!
தொடிக்கையும் துணைத்தா மரையே!
அடிச்சுவடு அணியிழாய்!— அலர்தா மரையே! 54

(இஃது அடிதோறும் எழுத்தானும் சொல்லானும் ஒன்றி வரத் தொடுத்தலமையால் அடியியைபுத் தொடை. பகுதி - சேட்படை. துறை - அவயவம் கூறல்.)

தெய்வத்தால் தலைவியை முன்னுறவுணர்ந்து தழுவி நீங்கிய தலைவன், தோழியிடம் தலைவியை உயர்த்திப் பேசி, அவளின் அவயவங்களின் அழகினைப் புகழ்வது சேட்படையின் இலக்கணம்.

அணங்கு அன்னாள் - தெய்வப்பெண் போன்ற தலைவி. உறையுள் - இருப்பிடம். சுணங்கு உலாம் - தேமல் படர்ந்த துணைத்தாமரை - இருதாமரைமலர்கள். உந்தித்தாமரை - திருநாபிகமலம். தொடிக்கை - தொடி அணிந்த கை. அணிஇழாய் - தோழியே.

ஒளிர்முகமானது அரங்கனது உந்தித் தாமரை போலும் என்று பொருள் கொள்க.

அராவணை மிசைத்துயில் அமர்ந்தருள் அரங்கனை
கராசலம் மூலம்என்று அழைத்தருள் கண்ணனை
முராரியை இரணியன் மதுகையை முறுக்கிய
நராரியை நயந்துஇறைஞ் சுனரே
தராதலம் விரும்பும்அம் தாமம்எய் துவரே. 55

(இஃது அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையான் அடிஎதுகைத் தொடை.)

கராசலம் - யானை முராரி - முரனைக் கொன்றவன். மதுகை - வலிமை. நராரி - நரகாசுரனைக் கொன்றவன். இறைஞ்சுனர் - வணங்குபவர். அம்தாமம் - பரமபதம். எய்துவர் - அடைவார்கள்.

செந்தா மரைமகள் புணர்திரு வரங்கன்
கார்க்கடல் வண்ணன் கண்ணன்எம் பெருமான்
வாமனன் கேசவன் மாதவன் சீதரன்
நெடியோன் ஈரடி எனநிலம் அளந்தோன்
அடியிணை நறுமலர் அதுதுாய்
முடிமிசை தரிப்பவர் முத்தர் ஆகுவரே. 56

(இஃது அடிதோறும் சொல்லானும் பொருளானும் முரணத் தொடுத்தமையான் அடிமுரண்தொடை.)

செந்தாமரை - கார்க் கடல். வாமனன் (குறளன்) - நெடியோன். அடி - முடி என்பன ஒன்றுக்கொன்று முரண் பட்டு வந்தமை காண்க.

ஆஅன் நிரைகாத் தருள்அரங் கேசன்
நீஇல் நிறக்கரி நிழல்மருப்பு ஒடித்தோன்
பூஉ மகள்புணர் புயல்அடித் துணையில்
தேஎ மலர்இடு பவர்வினை
போஒம் ஒருநொடி யினிற்புறக் கொடுத்தே. 57

(இஃது அடியளபெடைத் தொடை.)

அடிதோறும் முதலெழுத்து அளபெடுத்தமை நோக்குக.

ஆன் - பசுக்கள். நிரை - கூட்டம். நீல்நிறம் - கருநிறம். நிழல்மருப்பு - ஒளியுள்ள தந்தம். புயல் - மேகம் போன்ற திருமால். அடித்துணை - இருபாதங்கள். புறக்கொடுத்தல்- புறமிடுதல்; (தோற்றல்)

ஆஅ, நீஇ, பூஉ, தேஎ, போஒ என்பன மூன்று மாத்திரை யளவு நீண்டு ஒலிக்கும் அளபெடைகள்.

''நற்றாஅள்'' என்ற குறட்சீரை நோக்குக.

நாவே விழுமிய நலனுடை [1] முதற்பொருள்
பொருளுரை ஆய்தரின் புகலமற் றுளதே
உளதே வண்டுஇமிர் உறுமலர் ஓடை
ஓடை மால்வரை மூலம்என்று உரைசெய
ஓடை மால்வரை மூலம்என்று உரைசெய
உரைவிசைத் தடங்கா ஒல்லையிற் குறுகுபு
புனிற்றா எனஅருள் புரிந்திடர் செகுத்த
அறைபுனல் அரங்கத்து அமுதினை அன்றியும்
மதித்தொரு முதலினை [2] மகிழ்ந்து
துதிப்பதும் உளதோ சுரர்பெரு நாவே! 58

---

பாடபேதம் : 1. உரனுறு நலமிகு. 2. முதலையே.

(இதனுள் நான்கு அந்தாதித் தொடையும் வந்தமையான் அந்தாதித் தொடை.)

''அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியின்
அந்தாதித் தொடைஎன்று அறிதல் வேண்டும்''

என்ற நூற்பாவின்படி இப் பாடலின் முதலடியின் முடிவு பொருள். அது இரண்டாமடியின் முதலாக வந்தது. இது அசைக்கு எடுத்துக்காட்டு. இரண்டாம் அடியின் முடிவு உளதே. அது மூன்றாம் அடியின் முதலாக வந்தது. இது சீர்க்கு எடுத்துக்காட்டு. மூன்றாம் அடியின் முடிவு ஓடை. இது நான்காம் அடியின் முதலாக வந்தது. இதுவும் சீர்க்கு எடுத்துக்காட்டு.

நான்காம்அடி முழுவதும் ஐந்தாம் அடியாக வந்துள்ளது. இது அடிக்கு எடுத்துக்காட்டு. ஐந்தாம் அடியின் முடிவு உரை (செய). இது ஆறாம் அடியின் முதலாக வந்தது. இதுவும் அசைக்கு எடுத்துக்காட்டு. ஆறாம் அடியின் முடிவு (குறுகு)பு. இஃது ஏழாம் அடியின் முதலாக வந்தது. இஃது எழுத்துக்கு எடுத்துக் காட்டு. இவ்வாறே எழுத்து, அசை, சீர், அடிகள் அந்தாதியாக வந்தமை காண்க.

விழுமிய - சிறந்த. முதற்பொருள் - முதன்மையான பொருள். மெய்ப்பொருள் - மெய்ப்பொருள். மற்றுளதே - வேறுஉண்டோ. ஆமிர்தல் - இசைத்தல். ஓடை - நீர்நிலை. ஓடை - யானையின் நெற்றிப் பட்டம். மால்வரை - யானை. உரைவிசைத்து - மிக விசையாக. ஒல்லை - விரைந்து. குறுகுபு - அணுகி. புனிற்றா - அண்மையில் ஈன்ற பசு. செகுத்த - தொலைத்த. அரங்கத்து அமுது - நம்பெருமான். முதல் - பரம்பொருள். சுரர் - தேவர்கள்.

''சுரர் நாவு, திருவரங்கத் தமுதினை யன்றி வேறு ஒரு முதலினைத் துதிப்பதும் உள்ளதோ?''

என்று கூட்டிப் பொருள் காண்க.

திருமாலையன்றி வேறு தெய்வத்தைத் தேவர்கள் துதிக்கமாட்டார் என்பது திரண்ட கருத்து.

திடனே திடனே திடனே திடனே
இறைதிரு அரங்கன் என்பது
மறைமுதல் அரினை வாழ்த்தியது உறினே. 59

(இஃது ஓரடி முழுதும் ஒரு சொல்லேயாய்த் தொடுத்தமையால் இரட்டைத் தொடை.)

ஒருசீர் அடிமுழுதும் வருவது இரட்டை என்பது இலக்கணம். அதன்படி முதலடியில் திடனே என்ற ஒரு சீரே அந்த அடி முழுவதும் மடக்கி வந்தமையால் இஃது இரட்டைத்தொடை.

இறை - பரம்பொருள். மறை - வேதம். உறின் - நினைப்பின். திடன் - உறுதி.

மாறனை ஏத்தார் விழுதீ நரகில்
சுடுநெறி இனியார் செல்வர்
விடலைநீ கங்குல் ஆறிஏ குதியே. 60

(இது மோனை முதலாய முழுதும் ஒவ்வாது வந்த செந்தொடை. நேரிசையாசிரியப்பா.)

''செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்'' என்பது இலக்கணம்.

இதில் எதுகை மோனை முதலிய எத்தொடையும் இல்லாமையால், இது செந்தொடையானது.

நரகில் - நரகைக் காட்டிலும். சுடுநெறி - சுடுகின்ற பாலைவழி. யார் செல்வர் - யாரும் செல்லார். விடலை - தலைவன். கங்குல் ஆறி ஏகுதி - பகலில் தங்கி இரவில் செல்வாயாக.

இரவினில் இருள்கடி முழுமதி வதனம்.
இருசிறு பிறைநுதல். இகல்முரி புருவவில்.
இனமணி நிரைஎன அணிநகை இலகியது.
இணைவிழி இருகயல் இணைபணி மொழிநறை.
இளமுலை மரைமுகை. இடுகுஇடை இலை. ஆல்
இலைவயிறு, இமிழ்வளை களம்எனும் இருநிலம்
இமையவர் இறைவனொடு இரதிமன் இருடிகள்
மனமருள் தகைமட வரல்எனும் அமுதினொடு
அளிமுரல் மதுமகிழ் அலரிவர முனிவரை
அளவிய நலன்இவண் அமைதலும்
அவண்எனை எதிர்உரை யினன்அநு பமனே. 61

(இதனுள் இணைமோனை முதலிய விகற்பம் ஏழும் வந்தமை காண்க.)

முதலடி இணைமோனை
இரண்டாமடி பொழிப்பு
மூன்றாமடி ஒரூஉ
நான்காமடி கூழை
ஐந்தாமடி மேற்கதுவாய்
ஆறாமடி கீழ்க்கதுவாய்
ஏழாமடி முற்று

அடிதோறும் மோனை வந்தமை, அடிமோனை.

இருள்கடி-இருளைக் கடிகின்ற. வதனம் - முகம். நுதல்- நெற்றி மணிநிரை-முத்துவரிசை. நகை-பற்கள். இணைவிழி- இருகண். கயலிணை - இருகயல் மீன்கள். பணிமொழி - பணியச் செய்யும் மொழி. நறை - தேன். மரைமுகை - தாமரை மொட்டு. இடுகுஇடை - சுருங்கிய இடை. வளை - சங்கு.

களம் - கழுத்து. இமையவர் இறைவன் - இந்திரன் இரதிமன் - மன்மதன். இருடிகள் - முனிவர்கள். மனம் மருள்தகை - மனமானது மருளும் தகைமையுடைய. மடவரல் - பெண். அளி - வண்டு. முரலுதல் - இசைத்தல். மகிழ் - மகிழமலர். அனுபமன் - உவமையில்லாதவன். வரமுனிவர் - நம்மாழ்வார். அளவிய - கலந்த; (சேர்ந்த)

அறமுதல் அரிஎனும் அவனே பரனே
அணுவினுள் அவனே செகம்உணர் பரனே
மனனே கரிசொல வருபுயல் பரனே
அமுதரு ளினனே அவனே பரனே
நிலனே வானே நிறைமுதல் பரனே
வலனே தரிதிகி ரியனே பரனே
அயனே சிவனே பயனே[1] பரனே
இன்னணம் அமைதரல் இறைஅரங் கேசனைப்
பொன்னடி பணிபவர் புகுபதி
பன்னருஞ் சிறப்பிற் பரந்தா மமதே. 62

(இதனுள் இணை இயைபு முதலாயின எழுவிகற்பமும் வந்தமை காண்க.)

ஒன்றுமுதல் ஏழடிகாறும் முறையே இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று, இயைபுகள் வந்துள்ளன. அடிதோறும் இயைபு வந்தமையால் அடியியைபும் காண்க.

மனனே - மனமே. கரி - யானை. புயல் - மேகம் போன்றவன். வலனே - வலப்பக்கம். திகிரி - சக்கரம். பயம் - பால். பயன் - பாற்கடலினன்; பயன் தருபவன் என்றும் கொள்ளலாம். பதி - இடம். பரந்தாமம் - ஸ்ரீவைகுந்தம்.

1. யயனே.

முற்குணன் உற்பவ மாதலின் முழுமுதல்
பொற்கமலத்திரு முற்ற முயங்கிய
அற்புதன் நாரணன் ஆமென உற்றபின்
அற்றது பற்றெனில் உற்றது வீடுஉயிர்
செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே
பற்றிலன் முற்றில் அடங்கென நற்றமிழ்
கற்றவன் மற்றிரு பற்றறு கொற்றவன்
உத்தம ஞானமுத திரைக்கையும் முகமும்
பத்திமை யால்தெரி சிப்பவர்
நித்தர்வந் தெதிர்கொள முத்தர் ஆகுவரே! 63

(இஃது இணை எதுகை முதலாய விகற்பம் ஏழும் வந்த நேரிசை ஆசிரியப்பா.)

முற்குணம் - சத்துவம். உற்பவம் - உலககாரணன். கமலம் - தாமரை. திரு - திருமகள். முற்ற - முழுவதும். பற்றுஇலன் - அன்பினையே இல்லமாகக் கொண்டவன். மற்றுஇருபற்று - அகப்பற்று புறப்பற்று. கொற்றவன் - நம்மாழ்வார்.

"அற்றது பற்றுஎனில் உற்றது வீடுஉயிர்
செற்றது மன்னுறில அற்றிறை பற்றே"
"பற்றிலன்... ... ... ... ... முற்றில் அடங்கே"

என்பன திருவாய்மொழிப் பகுதிகள்.

அறிவிலர் உணர்வுளர் எனுமவர் அளவினில்
அருவமொடு ஒளிதிரு வுருவம துடையனை
எளியனை அடியவர்க்கு ஏனையோர்க்கு அரியனைக்
கனவினும் நனவினும் அறிதுயிற் கண்ணும்
வெண்சங் காழி செம்மணிப பொன்முடி

காலையும் மாலையும் கண்டுநன் பகலும்
இன்புறத் துன்பமற்று, இம்பரோடு உம்பருள்[1]
நறவார் மலர்மகள் நாதனை
மறவா தவர்பதம் வாழ்த்தும்[2] என் நாவே. 64

(இஃது இணைமுரண் முதலாகிய ஏழு விகற்பமும் முறையே வந்தமையான் முரண்விகற்பத் தொடை.)

உம்பர் - தேவர். இம்பர் - இவ்வுலகினர். நறவு - தேன்.

நாஅல் வாஅய் மூலம்என்று அழைப்பச்
சாஅல்பு உணர்ந்து தாஅன் விரைதலின்
காஅல் எனநிமிர் கலுழனில் போஒய்
ஆஅழ் நீஇர் வாஅழ் முதலையின்
ஆஅ ருயிர்உண் கோஒ மாஅன்
தாஅ தாஅர் பூமகள் சேஎர்
மோஒ கூஉர் மாஅ மாஅல்
எனஒரு கால்உரை நாவே
நமைஒரு காலமும் நண்ணான் நமனே. 65

(இஃது இணை அளபெடை முதலாகிய ஏழு விகற்பமும் முறையானே வந்தமையான், அளபெடை விகற்பத்தொடை. ஆகத் தொடை விகற்பம் முப்பத்தைந்தும் வந்த இவையும் ஓர்பதின் மூன்றும் நேரிசையாசிரியப்பா).

நால்வாய் - யானை. சால்பு - சான்றாண்மை. கால் - காற்று. கலுழன் - கருடன். தாது - மகரந்தம். ஆர்தல் - நிறைதல்.

தொடை விகற்பம் முப்பத்தைந்தும் 61 முதல் 65 ஆம் பாடல் வரை வந்தமை காண்க. அத்துடன் 53 முதல் 57

---

பாடபேதம் : 1. உம்பர். 2. வழுத்தும்.

வரையுள்ள பாடல்களில் முறையே அடி மோனை, அடி யெதுகை, அடிமிசைபு, அடியளபெடை, அடிமுரண் ஆக ஐந்தும் வந்தன. 58, 59, 60 ஆம் பாடல்களில் முறையே அந்தாதித் தொடை, இரட்டைத் தொடை, செந் தொடை ஆகிய மூன்றும் வந்தன. ஆக, தொடை நாற்பத்து மூன்றும் கண்டு கொள்க.

கடுவே கடல்எனக் கருநெடுங்[1] கண்ணிணை.
காமனும் காமுறும் காட்சிய காண்முகம்.
கிள்ளையின் கிளவியும்[2] கிளைத்தகைக் கிளையுடைக்
கீரமும் கீர்த்திக் கீரமும் கீரே.
குவடுடைக் குளிர்பொற் குன்றே குவி முலை.
கூர்புதற் கூன்சிலை கூற்றுயிர் கூட்டுணும்
கெடலருங் கெழுதகை கெழுமுபு கெழீஇய
கேகயம் கேளொடும் கேடுறும் கேழ்இயல்
கைபுனை கைக்கிளை கைக்கிணை கைத்துணை
கொண்டல்உட் கொண்டுஅன கொண்டையும் கொடியிடை
கோடாக் கோவலர் கோற்றொடி கோமான்
கௌரவ கௌசிகன் கௌசிகம் கௌத்துவம்
அணிஎனக் கொண்டுமுன் மனவீடு அளித்தோன்.
கண்ணகன் குறுங்குடிக் கனவரை
மண்ணகத்து உறையுளாய் நிலவளர் மகட்கே. 66

[இது ககரவருக்க முற்றுமோனைத் தொடை. இதுவும் நேரிசை ஆசிரியப்பா.]

அடிதோறும் க முதல் கௌவரை உள்ள ககர வருக்கஇன எழுத்துக்கள் நாற்சீரிலும மோனையாக வந்துள்ளமை அதிசயம்.

கடு - விஷம். கிள்ளை - கிளி. கிளவி - சொல். கைக் கிளை - ஏழு இசையுள் ஒன்று. கீரம் - இசை. கீர்த்திக் கீரம் - புகழுடைய பால். கீர் - சொல். குவடு - சிகரம். புதல் - புருவம். கூன்சிலை - வளைந்தவில். கூற்று - எமன். கெழுதகை - உரிமை. கெழுமுபு - பொருந்தி. கேகயம் - மயில். கேள் - உறவு. கேழ் - ஒளி. இயல் - சாயல். கைபுனை - ஒப்பனை புரிந்த. கைக்கு இசை - அபிநயத்துக்கு இசைந்த. கைக்கிணை - சிறிய இசைக்கருவி. கைத்துணை - இருகைகள். கொண்டல் - மேகம். உட்கொண்டன - உள்ளே இழுத்துக் கொண்டன. கொண்டை - கூந்தல். கோடா - மாறுபடாத. கோவலர் - ஆயர். கோற்றொடி - பெண். கோமான் - கணவன். கௌரவம் - மேன்மை. கௌசிகன் - ஒருமுனிவன். கௌசிகம் - பட்டாடை. கொண்டு - ஏற்றுக் கொண்டு. மனவீடு - மனத்தையே வீடாக. மன்ன வீடு என்று கொண்டு நிலைபெறும்படி முத்தியை என்றும் கொள்ளலாம். கண் அகன் - இடம் அகன்ற. கனவரை - பெரியமலை. நிலமகள் - பூமியிற் பிறந்த பெண்.

சொல் தவறாத ஆயர் மகள் நப்பின்னையின் தலைவன். பெருமை வாய்ந்த கோசிக முனிவன் தந்த பட்டாடையும் கௌத்துவ மணியும் அணிகலனாக ஏற்றுக் கொண்டு தன் மனமாகிய வீட்டை அளித்தவன்.

அவனுக்கு உரியதாகிய குறுங்குடியிலுள்ள பெரிய மலையைச் சார்ந்த நிலப் பகுதியை இருப்பிடமாகக் கொண்ட நிலமகளுக்கு (இந்தப் பெண்ணுக்கு) விஷமும் கடலும் போன்ற கரிய நெடிய கண்ணிணை.

காமனும் விரும்பும் அழகிய முகம். கிளி மொழியும் எழுப்புகின்ற ஏழிசைகளுள் ஒன்றான கீரம் என்ற இசையும் பாலும் அவள் மொழியாகும். சிகரத்தோடு பொருந்திய பொற்குன்றே குவிந்தமுலையாகும்.

சிறந்த புருவமாகிய வளைந்த விற்கள் எமனுடைய உயிரைக் கொள்ளையிட்டு உண்ணும்.

அழிவற்ற அழகை உரிமையாகக் கொண்ட மயில், தன் இனத்தொடும் தோற்கும் ஒளியுடைய சாயல்.

அலங்கரித்த அபிநயத்துக்கு ஏற்ற சிற்றிசைக் கருவியாகிய யாழ் போன்ற கைகள்.

மேகத்தை உள்வாங்கியது போன்ற கொண்டை. கொடி போன்ற இடை.

தனியிடத்துத் தலைவியைக் கூடி வந்த தலைவன் பால், மாற்றம் கண்ட பாங்கன் வினாவியதற்குத் தலைவன் அத்தலைவியின் அழகையும் அவள் இடத்தையும் வெளியிடுவதாக அமைந்த பாடல். இவ்விடத்து இவ்வியற்று எனல் என்பது இத்துறை. இயல்பிடம் கூறல் எனவும்படும்.

தேமகிழ் மாறன் துடரிஅஞ் சிலம்பில்
தாமரை மலரும்
காமரு குவளையும்
கோஒங் கரும்பும் பிணையும்
பூஉங் கரும்பும் பிணையும்
தாம்மலிிப்பூங்கொடி தரும்மனக் களியே. 67

(இஃது ஆறடித்தாய் முதலடியும் ஈற்றடியும் அளவடித் தாய் இடையில் குறளடி இரண்டும் சிந்தடியிரண்டுமாக வந்த இணைக்குறள் ஆசிரியப்பா. துறை - காட்சி. அலங்காரம் - உருவக வாய்பாட்டான் வந்த உடனிலைச் சிலேடை.)

குறளடி - இருசீர் உள்ளது. சிந்தடி - மூன்று சீர் பெற்றது.

தேமகிழ் - தேனையுடைய மகிழமலர். மாறன் - நம்மாழ்வார். துடரி அம்சிலம்பு - துடரி என்னும் பெயரை

யுடைய அழகிய மலை. காமரு - அழகிய. கோங்கு அரும்பு இணை - கோங்கின் இரண்டு அரும்புகள். பூங் கரும்பு இணை - அழகிய இரண்டு கரும்புகள்.

பூங் கரும் பிணை - அழகிய கரிய மான். தாம் மலி - தன்னிடத்தே பெற்றுள்ள பூங்கொடி - தலைவி.

தாமரை முகத்துக்கும், குவளை கண்ணுக்கும், கோங்கு அரும்புகள் முலைக்கும், பூங் கரும்பு இணை தோளுக்கும், பூங் கரும் பிணை உருவத்துக்கும், பூங்கொடி தலைவிக்கும் உருவகங்களாக வந்துள்ளன.

இதில் பூங் கரும்பிணை என்ற தொடர் பூங் கரும்பு இணை என்றும் பூங் கரும் பிணை என்றும் இருவகையாகப் பிரிந்து இரு பொருள் படுவதால் சிலேடை.

படுதிரைப் பௌவமும் பானல்அம் போதும்
விடுசுடர்க் கதிர்வர விரிமரை மலரும்
கடுவும் கணையும்
வடுவும் பிணையும்
அடுபோர்க் கூற்றின் கணிச்சியும்
கொடுவேல் இணையும் குறிக்கொளும்
தடுமாறு உண்கண் தாழ்குழல் ஆயத்
தொடுவாழ் வெய்துஇடம் உபநிட தப் பொருள்
நடுவமைத் தமிழ்மறை நவின்றருள் மாறன்
நெடுமால் வரைச்சந் தனத்தண் ணிழலே. 68

(இதுவும் பத்தடித்தாய் முதலிரண்டு அடியும் அளவடித் தாகியும் ஈற்றினில் நாலடியும் அளவடித்தாகியும் இடையில் குறளடி இரண்டாகியும் சிந்தடி இரண்டாகியும் வந்த இணைக்குறள் ஆசிரியப்பா. அலங்காரம் - பலபொருள் உவமை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடம் கூறல்.)

படுதிரை - அலைபிறக்கின்ற. பௌவம் - கடல். பானல் - கருங்குவளை. போது - மலர். கதிர் - சூரியன். மரைமலர் - தாமரைமலர். கடு - விஷம். கணை - அம்பு. வடு - மாவடு. பிணை - மான். கூற்று - எமன். கணிச்சி - மழுவாயுதம். வேல் இணை - இரண்டு வேல்கள். குறிக் கொள்ளுதல் - உவமையாகி மேன்மைப் படுத்துதல். தாழ் குழல் - தலைவி. ஆயம் - தோழியர் கூட்டம். வாழ்வு எய்து இடம் - இருக்கும் இடம். தமிழ்மறை - திருவாய் மொழி. மாறன் - நம்மாழ்வார். நெடுமால்வரை - நீண்ட பெரியமலை. சந்தனம் - சந்தனமரம்.

பௌவமும் போதும் மரைமலரும் கடுவும் கணையும் வடுவும் பிணையும் கணிச்சியும் வேல் இணையும் குறிக் கொள்ளும் கண் (ணையுடைய) தாழ்குழல் வாழ்வு எய்து இடம், மாறன் வரைச் சந்தனத் தண்நிழல் என்று பொருள் முடிவு காண்க.

[1]வெண்திரைப் புனற்கா விரிஅயல் விரிந்த
வண்டுஇமிர் பாசடைக் குவளைமென் பனிமலர்
முள்தாள் தாமரை முறுக்குடை நாள்மலர்
அரக்கெறி வள்ளிதழ் ஆம்பற் போதுடன்
மேய்'தரு கயவாய் மேதிகன்று உள்ளுபு
பணைமுலை சுரந்து பனிற்றுபால் தடினி
நெட்டிலை அரம்பையின் நீடுபொற் கூன்கனி
முடவடிப் பலவின் முட்புறக் குடக்கனி
நெடுவெண் திங்கள் நடுமறுத் துடைத்திடும்
செந்தளிர்ப் பொங்கர் மாவின் தீங்கனி
சுழித்தெழு திரைக்கையில் தூமலர் பலகொடு
பாற்கடல் பொன்னியுட் படிதிரு வுருவம்

காண்பதில் முன்னிய காமர் காட்சியில்
துறைதொறும் துறைதொறும் துழனியின் வளைக்கும்
திருவரங் கேசனைத் திருமறு மார்பனை
வாழ்த்தியும் வணங்கியும் மனத்துற நினைக்குநர்
எக்குலத்து எவரே ஆயினும்
அக்குலத் தவர்க்குஅடி யேன்அடி யேனே. 69

(இது நிலைமண்டில ஆசிரியம்[1]. இதனுள் அடைசினை முதல் என முறை மூன்றும் மயங்காமை வந்த வண்ணச் சினைச் சொல். அலங்காரம் - தற்குறிப்பேற்ற உவமை. திணை - பாடாண். துறை - நகர் வாழ்த்து.)

நதிபோல் பெருகிய பால் காவிரியுட் புகுவதை, பாற் கடல் வந்து காவிரியில் புகுவதாகக் கற்பனை செய்வதால், இது தற்குறிப்பேற்ற உவமையாயிற்று.

அடை சினை முதல் என முறை மூன்றும் மயங்காமல் (மாறுபடாமல்) வந்த வண்ணச் சினைச்சொல் கீழே காண்க!

| அடை | சினை | முதல் |
|---|---|---|
| வெண்மை | திரைப்புனல் | காவிரி |
| பசுமை | அடைக் | குவளை |
| முன் | தாள் | தாமரை |
| வண்மை | இதழ் | ஆம்பல் |
| கய | வாய் | மேதி |
| நெடுமை | இலை | அரம்பை |
| பொன் | சூன் | கனி |
| முட | அடிப் | பலவு |
| செம்மை | தளிர்ப் | பொங்கர் |

1. நிலைமண்டில ஆசிரியம் என்பது தவறு. இது நேரிசை ஆசிரியம்.

திருவரங்க நகரின் வளம் கூறுவதால் இது நகர வாழ்த் தாயிற்று.

பாசடை - பச்சைஇலை. முன்தாள் - முள்ளையுடைய தண்டு. அரக்குஎறி - செந்நிறம் வீசுகின்ற. வள்இதழ் - வளவிய இதழ்கள். ஆம்பல்போது - அல்லிமலர். கயவாய் மேதி - பெரியவாயையுடைய எருமை. கன்றுஉள்ளுபு - கன்றை நினைந்து. பணைமுலை - பருத்த பால்மடி. பனிற்றுதல் - தூவுதல்; சொரிதல். பால்தடினி - பாலின் நதி. அரம்பை - வாழை மரம். கூன்கனி - வளைவான பழம். முடஅடி - வளைந்த அடிமரம். குடக்கனி - குடம் போன்ற பலாப்பழம். திங்கள் நடுமறு - சந்திரனிடத்துள்ள களங்கம். பொங்கர் - மரக்கிளை. திரைக்கை - அலையாகிய கை. பொன்னி - காவிரி. காண்பதில் முன்னிய - காண் பதனை நினைவுறுத்துகின்ற. காமர்-அழகிய. துழனி - ஓசை.

குவளை தாமரை ஆம்பல் மலர்களை மேய்ந்த எருமை, கன்றை நினைந்து சொரிந்த பாலின் நதியானது, வாழை பலா, மாங்கனிகளைச் சுழித்தெறிந்து, திரைக்கையால் பல மலர்களை வாரிக் கொண்டு காவிரியுட் புகும். அந்தக் காட்சியானது பாற்கடல் வந்து காவிரியுட் புகுவது போன்றிருக்கும். அத்தகைய வளமான நதி சூழ்ந்தது திருவரங்கம். அங்கு எழுந்தருளிய திருமறுமார்பனை நினைப்பவர் எக்குலத்தவர் ஆயினும் அவர்க்கு யான் அடிமையாவேன் என்பது திரண்ட பொருள்.

---

1. இந்த பாடல் மாறன் அலங்காரத்துச் சிறிது வேறு பட்டு உள்ளது.

"வெண்திரைப் புனல்அறா வியல்அயல் வயல்விரி
வண்டுஇமிர் பாசடைக் குவளைமென் பனிமலர்
புறக்கொடை மதிதரப் பொதியவிழ்ந் ததுபோய்ச்
சிறக்கணித் தனவாய் சேயிதழ்க் குமுதம்
முன்தாள் தாமரை முறுக்குடை நாள்மலர்

வான்திகழ் உதய மதிமறை முகிற்கீழ்
மீன்திரி தமர வெண்திரை வைப்பினுள்
அருவிஅம் சுவண அருவரை ஞாங்கர்
வாழ்திறம் எனலாய் வதனமும் ஓதியும்
காழ்புனை திதலைமென் கதிர்முலைச் சுவடும்
உறுப்பமைந்து ஓவியம் உயிர்படைத்து இயங்குதல்
அறியாது ஆங்கண் அணிவரைச் சாரலில்
செறியா உடைந்ததுஎன் திண்ணிய நிறையே.

(இது நிலைமண்டில ஆசிரியப்பா. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - உற்றதுரைத்தல். அலங்காரம் - நிரல்

---

கள்கா மருகடை வாய்வழிந்து இழிதர
மேய்தரு கயவாய் மேதிகன்று உள்ளுபு
பணைமுலை சுரந்து பனித்தபால் தடினி
நெடுவெண் திங்கள் நிறைமறுத் துடைத்துஒளிர்
செந்தளிர்ப் பூஞ்சினைத் தேமாத்து உகுகனி
முடப்பரி யரைப்பலா முட்புறக் குடக்கனி
புறக்காழ் மரகதப் பூக மிடற்றின்
நிறக்காழ் திரண்டு நீண்டுஉதிர் பழுக்காய்
நெட்டிலை அரம்பையின் நீடுபொற் கூன்கனி
புதையிருள் துரீஇக்கதிர் பொழிநவ மணிக்குலை
சுழித்தெடுத்து இரைத்தவாய்த் தூமலர் பலகொடு
பாற்கடல் பொன்னியுள் படிதிரு வுருவம்
காண்பதின் முன்னிய காட்சிஒன்று எனலாய்த்
துறைதொறும் துறைதொறும் துழனியின் வளைக்கும்
திருவரங் கேசனைத் திருமறு மார்பனை
மனத்துற நினைந்தும் வாழ்த்தியும் வணங்குநர்
எக்குலத்து எவரே ஆயினும்
அக்குலத் தவர்க்குஅடி யேன்அடி யேனே''

நிறை உவமை). மதி, மழைமுகில், கவணம், அருவரை என்பன முறையே முகம், கூந்தல், தேமல், முலைகளுக்கு உவமையாக வந்தமையால், நிரல்நிறை உவமையானமை காண்க. மதி - சந்திரன். முகில் - மேகம். வெண்திரை வைப்பு - நெய்தல் நிலம். அருவிஅம் கவண அருவரை - அருவி ஒழுகுகின்ற அழகிய பொன்மலை. ஞாங்கர் - அருகு. உறுப்பு - அவயவங்கள். ஓவியம் - சித்திரம். நிறை - மன உறுதி. செறியா - அடைந்து.

தெய்வத்தான் தலைவன் தலைவியை எதிர்ப்பட்டுக் கலந்து மீண்டான். அவனிடத்து மாற்றம் கண்ட பாங்கன், யாது நேர்ந்தது? என வினவினான். தலைவியைக் கண்டமையால் என் திண்ணிய நிறை உடைந்தது என்கின்றான் தலைவன். இது தான் உற்றது உரைத்தல் என்னும் துறை.

மீன்கள் திரிகின்ற ஓசையையுடைய வெள்ளிய அலைகளையுடைய இடத்திலே வானிலுள்ள உதயமதி ஒன்று மழைமுகிலின் கீழே அருவியுடைய பொன்மலையருகிலே வாழ்வது ஒப்ப முகமும் கூந்தலும் முத்துமாலை அணிந்த தேமலையுடைய முலைச் சுவடும் ஆகிய அவயவங்களைக் கொண்டு, ஓர் ஓவியம் உயிர் கொண்டு உலாவுவதை அறியாமல், அங்கே மலைச் சாரலில் சென்றதனால் என் மனஉறுதி உடைந்தது என்பது தலைவன் பேச்சு. உதயமதி முகத்துக்கும் முகில் கூந்தலுக்கும் அருவி முத்துமாலைக்கும் பொன்மலை முலைச்சுவட்டுக்கும் உயிர் படைத்து இயங்கும் ஓவியம் தலைவிக்குமான உருவகங்கள்.

மன்நேர் நின்றனன் வடமலை மிசையே
முன்னே சிலர்தொழ முயல்வது கண்டே
பொன்னே அலஇடு வதும்ஒரு பூவே
என்னே சிலர்எவன் நரகுஎய் துவதே! 71

(இஃது அடிமறி மண்டில ஆசிரியப்பா. திணை பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சுவையினுள் இழிவு பற்றிய அழுகை.)

யாதானும் ஓர் அடியை முதல் அடியாகவோ இடை அடியாகவோ ஈற்று அடியாகவோ மாற்றிக் கூறினும் ஓசையும் பொருளும் சிதையாமல் வருவது அடிமறி மண்டில ஆசிரியப்பா.

மூன்றடி முதலா முடிந்தெலா அடியும்
இடைகடைமுத லாய்எடுத் தாலும்
ஓசையும் பொருளும் உலவாது வருவன
அடிமறி மண்டில அகவல்ஆ கும்மே

என்பது இலக்கணம்.

மன் - இறைவன். வடமலை - திருவேங்கடமலை. என்னே - அந்தோ!

இறைவன் வேங்கட மலையில் நின்ற திருக்கோலத்தில் உள்ளான். அவனுக்குப் பூசைக்குப் பொன் இடல் வேண்டா. ஒரு பூவையிட்டாலும் போதும். அவ்வளவு எளியனாக அவன் இருக்கையில், அவன் அருளைப் பெறாமல், அந்தோ சிலர் நரகெய்துமது ஏன்? என்பது திரண்ட பொருள். அதனால் இது இழிவு பற்றிய அழுகை என்ற அலங்காரமானது.

பதிகளின் அதிபதி திருமகள் பதியே
துதிகளின் அதிபதி தமிழ்மறைத் துதியே
மதிகளின் அதிபதி மாறன் நுண் மதியே
நதிகளின் அதிபதி வரசுர நதியே. 72

(இதுவும் அடிமறி மண்டில ஆசிரியப்பா. திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சாரம்.)

பதிகள் - தலைவர். அதிபதி-பெருந்தலைவன்; தலைமை யானது. மதி - அறிவு. மாறன் - நம்மாழ்வார். சுரநதி - கங்கை.

தண்ணறுங் கடப்பந் தார்ச்செவ் வேள்எனும்
ஒண்மையும் காந்தியும் உயர்குடிப் பிறப்பும்
வாய்மையும் குறையிரந் தொழுகலும் வண்மையும்
தூய்மையும் வைகலும் தொடர்பிடை விடாமையும் அல்லால்
கன்னலின் வளமலி கழனிநன் னாடும்
பொன்னெடுங் குன்றமும் புரவல புரப்பினும்
கலைபயில் மாறன் காரிதந் தருள்கார்
மலைவளர் மயில்அனை யாட்கு
முலைவிலை ஆம்என மொழிதல்ஒல் லாவே! 73

(இது நேரிசை ஆசிரியப்பா. இதனுள் "தூய்மையும் வைகலும் தொடர்பிடை விடாமையும் அல்லால்" என நான்காம் அடி ஐஞ்சீரடியாய் வந்தது. இதன் வேறுபாடும் கண்டு கொள்க. இஃது அலங்காரம் - விரியுவமை. பகுதி - வரை பொருட் பிரிதல். துறை - அருவிலை செப்பல்.)

செவ்வேள் எனும் - கந்தனைப் போன்ற. ஒண்மை - அறிவு- குறையிரந்தொழுகல் - குறைநீக்கி ஒழுகுதல். வைகலும் தொடர்பு இடைவிடாமை - எப்போதும் நட்பு விடாமை. கன்னல் - கரும்பு. காரி - நம்மாழ்வாரின் திருத் தந்தையார்.

தலைமகளை மணப்பதற்குப் பொருள்தேடப் புறப் பட்ட தலைவனை நோக்கி, "புரவலனே! நீ கழனி நன்னாடும் பொன்னெடுங் குன்றமும் பெற்றிருப்பினும் அவை இத் தலைவியின் முலைவிலைக்குப் போதா. அத்தகைய பெருமைக்கு உரியவள் இவள் என்று" தலைவியின் பெருமை யைத் தோழி கூறுவதாக அமைந்தது இது.

கண்ணன் வானோர் பெம்மான் கார்போல்
வண்ணன் மோகூர் வைகும் மாயோன்
தண்ணந் தாமம் தாரான்
விண்ணின் திங்கட்கு என்செய் வேனே! 74

(இது நேர் ஒன்று ஆசிரியத் தளையான் வந்த நேரிசை ஆசிரியப்பா. திணை - பெண்பாற் கூற்றுக் கைக்கிளை. துறை - கையறல். அலங்காரம் - அவயவி உவமை.)

கார் - மேகம். தாமம் - மாலை. திங்கள் - சந்திரன். கையறல் - துன்பத்தால் செயலற்றுப் போதல்.

கண்ணன்மேல் காதல் கொண்ட தலைவி காதலை மேலும் வளர்ப்பதாகிய நிலவினால் வாடிச் செயலிழந்தாள். "அவன் வருவான் என்பதற்கு அடையாளமாக அவன் மாலை யாவது தரமாட்டுகிலன். இந்த நிலவால் நான் அழிந்து போவது உறுதி" என்று கூறுவதாக அமைந்த பாடல் இது.

கார்போல் வண்ணமுடைய மேனி என்று அவயவத் துக்குக் கூற வேண்டிய உவமை கார்போல் வண்ணன் என்று அவ்வண்ணத் திருமேனியை யுடையவனைக் குறித்து வந்த மையால், இது அவயவி உவமை ஆனது. அவயவி-அவயவம் உடையவன்.

மறைநவில் மறைமொழி வகைமயர் வறவுறு
முறைதரு தமிழ்மறை மொழிமகிழ் முனிவனை
இறைஎன உணர்பவர் எவர்அவர்
உறைபதி மலர்மகள் உறைபரன் உலகே. 75

(இது, நிரை ஒன்று ஆசிரியத் தளையான் வந்த நேரிசை ஆசிரியப்பா. திணை - பொதுவியல். துறை - பொருள் மொழிக் காஞ்சி. அலங்காரம் - சுவையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.)

மகிழ் முனிவன் - நம்மாழ்வார். இறை - தெய்வம். உறைபதி - இருப்பிடம். பரன் உலகு - வைகுந்தம்.

வடமொழி வேதங்கள் கூறுகின்ற மறைமொழி வகைகளை மயக்கமில்லாமல் உற்ற முறைமை தருகின்ற தமிழ் வேதத்தை யருளிய நம்மாழ்வாரையே இறைவன் என்று உணர்பவர் யாரோ அவர்கள் வாழுமிடமாவது திருமகள் வாழ்கின்ற திருமாலின் வைகுந்தமே என்பது பொழிப்புரை.

("இதன்பின், இனி கோயிற் கலம்பகத்துள் 'கரை பொருது ஒழுகும் காவிரி ஆறே' என்னும் அகவல் போல இடையிடை தனிச்சொற் பெற்று முதலே அடி 5 அந்தாதிப் பதாக ஓர் அகவல் பாட வேண்டும். இரண்டாவது இவ் விரண்டடியாய் ஏழும் எட்டுத் தானமாகி ஒன்பதாம் தானம் ஆறடியாய் நேரிசை யாசிரியப்பாவாய்ப் பாடவேண்டும். ஆசிரியப்பா முற்றும்") என்று இங்கு ஏட்டுப் பிரதியில் எழுதப்பட்டுள்ளது.

கஞ்சத் திருமால் கழல்பரவு மாறனார்
செஞ்சொல் திருவாய் மொழிஉணர்ந்த சீலத்தார்
வஞ்சப் பிறவி வலைப்பட்டு உழலாரே.
ஆயத் திருமால் அடிபரவு மாறனார்
நேயத் திருவாய் மொழிஉணர்ந்த ஞானத்தார்
மாயப் பிறவி வலைப்பட்டு உழலாரே.
திந்திக்கு அருள்மால்பொற் றாள்பரவும் மாற்றார்
சிந்தித் துரைத்ததிரு வாய்மொழிதேர் சிற்குணத்தார்
வந்துஇப் பிறவி வலைப்பட்டு உழலாரே. 76

[இது மூன்று அடியாய்த் தம்முள் அளவொத்து ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வந்தமையான், ஆசிரியத் தாழிசை. திணை - பொதுவியல். துறை - பொருள் மொழிக் காஞ்சி. அலங்காரம் - சுவையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.]

கஞ்சம் - தாமரை. திருமால் திருமகளோடு கூடிய இறைவன். கழல் - பாதம். பரவுதல் - வழிபடுதல். மாறன்- நம்மாழ்வார். ஆய - ஆராய. தந்தி - யானை. சிற்குணம்- ஞானமாகிய குணம்.

இருநிலம் மூவடி எனவளர்ந் தோங்கிய
திருமறு மார்பனைச் சிந்தையுள் வைப்பவர்
ஒருபொழு தினும்இடர் உறுவதுஒன் றிலரே. 77

(இது தனியே வந்த ஆசிரியத் தாழிசை. திணை-பொது வியல். துறை - பொருள் மொழிக்காஞ்சி. அலங்காரம் சுவையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.)

அலைபயில்பாற் கடல்கடைந்துஅன் றமுதளித்த
திருவரங்கத்து அமுதை ஏத்தும்
கலைபயில்வண் தமிழ்க்குருகூர் மகிழ்மாறன்
வரையனையீர்! கட்ப டாம்தீர்
முலைஎனும்மால் மதக்களிற்றின் முன்நிறுத்தி வினையேனைக்
கொலைபயில்வேல் விழிபுதைத்தது அறநிலையோ
அறநிலையோ கூறுவீரே. 78

(இது நான்கடியாய் ஈற்று அயலடி குறைந்து, அல்லாத அடி ஒத்துவந்த ஆசிரியத்துறை. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - நாணிக்கண் புதைக்கு வருந்தல். அலங்காரம் - சங்கிரணம்.)

காய், காய், காய், காய், மா, தேமா என்ற வாய் பாட்டின்படி 1, 2, 4 அடிகள்வர, மூன்றாவது அடி முதல் நான்கு வாய்பாட்டுச் சீர்மட்டும் பெற்று வந்தமையால், இது ஆசிரியத்துறை எனப்படும். நான்கு அடியும் ஒத்து வந்திருப்பின் இது ஆசிரிய விருத்தமாகும்.

மாறன் வரையனையீர் - பெண்ணே! கட்படாம்இடீர் - கண்ணுக்கு படாம் (மறைப்பு) இடாத. அறநிலை - தருமம்.

கண்படாம் இடாத முலையாகிய கொலையயில் மத யானையை முன்னே நிறுத்தி, வேலாகிய விழியை மூடியது அறமோ? என்கின்றான் தலைவன். கொலையானையை அடக்க வேலைப் பயன்படுத்தாமல் அதை மறைப்பது கூடாது என்பது மேலெழுந்த பொருள்.

முலையை மறைத்திருந்த கையால் கண்ணை மூடிக் கொண்டீரே! கண்ணைக் கண்டு காதல் கூர்ந்த யான் இப்போது நும் முலை கண்டால், பொறுப்பேனோ என்பது உட்பொருள்.

திருவரங்கனை அமுது என்றும் முலையைக் களிறு என்றும் கூறியது உருவக அணிகள். விழிக்கு வேலை உவமை யாக்கியது உவமை அணி. ஆக இரண்டும் சேர்ந்து வந்தமை யால் இது சங்கிரண (கலவை) அணியானது.

திரைத்திருப்பால் கடல்கடைந்து தெள்ளமுதுடம்
பருக்குஅளித்த திருமால் செய்கை
உரைத்திருப்பா ரிடத்துஇழைத்த ஊழ்வினைசென்று
அணுகாதென்று உரைப்ப தொன்றோ
உரைத்திருப்பா ரிடத்துஇழைத்த ஊழ்வினைசென்று
அணுகாமை
வரைத்திருப்பா ரிடத்துஇழைத்த வல்வினையும்
வரைத்தவர்பால் மருவாது அன்றே. 79

(இஃது ஈற்று அயலடி குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறை. திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - கல்வி பற்றிய பெருமிதம்.)

இதுவும் முன்னைய பாடல் போலவே மூன்றாவது அடி குறைந்து ஆசிரியத் துறையானது. இரண்டாவது அடியே

மூன்றாவது அடியாக வந்தமையால் அதாவது இடையிலுள்ள 2, 3 அடிகள் ஒன்றாகவே அமைவதால் இது இடைமடக்கு ஆனது.

திரை - அலை. உம்பர் - தேவர். செய்கை - வரலாறு. இழைத்த - செய்த. உரைப்பதொன்றோ - உரைப்பது மட்டுமா! வரைத்திருப்பாரிடம் - மலைகள் சூழ்ந்த அழகிய பூமி. வரைத்து - நீங்கி.

திருமாலின் திவ்ய வரலாறு கூறுபவரிடத்து ஊழ்வினையாகிய பழவினை சென்று அணுகாதது மட்டுமல்ல, உலகிலே செய்கின்ற ஆகாமிய வினையும் அணுகாது என்பது திரண்ட பொருள்.

வண்ண மகிழ்மாறன் மால்வரைமான்
    ஆனைத்துட்
கண்என்று இகல்புரி,வன் கூற்றினைஏன்
    வைத்தான்எண் கண்ணு ளானும்!
கண்என்று இகல்புரிவன் கூற்றினைவைத்
    தால்அயலார்
உள்நின்று உயிர்கவர்வது உள்ளாதுஎன
    வெளியிட்டார் உரன்உள் ளாரே. 80

(இது நாலடியாய் இடையிடை குறைந்து இடை மடக்காய் வந்த ஆசிரியத்துறை. பகுதி - இயற்கை. துறை - தகையணங்குறுத்தல். அலங்காரம் - அவயவியுருவகம்.)

மேற்கண்ட பாடல்கள் போன்றே காய் காய் காய் காய் மா தேமா என்ற வாய்பாட்டின்படி 2, 4 அடிகள் வர 1, 3 அடிகள் இறுதிச் சீர் இரண்டும் குறைந்து வந்தமையால், ஆசிரியத்துறையானது. 2, 3 அடிகள் ஒன்றாகவே வந்தமையால் இதுவும் இடைமடக்கு ஆனது.

வரைமான் - தலைவி. ஆனனம் - முகம். இகல்-போர். கூற்று - இயமன். எண் கண்ணுளான் - பிரமன். உள்ளாது - நிலையாது.

''இவள் முகத்தில் கண் என்று எமனை ஏன் பிரமன் வைத்தான்? என்று வினா எழுப்பி, இவள் கண்ணாகக் கூற்றினை வைத்தால், இக்கண்ணே உயிரைக் கொலலும். ஆகையால் பழய கூற்று அயலார் உயிர்கவர எண்ணாது (ஆதலால் பல உயிர்கள் பிழைத்துப் போம்) என்று அறிஞர் கள் கருத்துரைத்தார்கள்'' என்பது திரண்ட பொருள்.

இதில் தலைவியின் (கண்) அழகைச் சிறப்பித்துக் கூறுவ தால், இது தகை அணங் குறுத்தல துறையாயது.

நேடுவான் கலைவயிரத்து இழைத்தபருப்
பதக்குடுமி நீல நாளுற
ஓடுவான் மதிஅகட்டின் உறுபிணைமையைப்
பிணையெனக்கொண்டு உயர்வால
கோடுவார்ந் திழிதருதேன் அமுதஅரு
வியிற்குழுமிக் கொடியனாரே
ஆடுவார் மைந்தருமுண்டு உண்பதும்அத்
தெள்ளமுத அவர்கள் நாளும். 81

(இஃது அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம். திணை - பாடாண். துறை - நாடுவாழ்த்து. அலங்காரம் - திரிவதிசயம்.)

காய் காய் காய் காய் மா தேமா என்ற வாய்பாட்டின் படி நான்கு அடிகளும் ஒத்து வந்தமையால் இது ஆசிரிய விருத்தம் ஆனது. ஐந்து அடிக்குமேல் சீர் பெற்று வருவன அனைத்தும் கழிநெடிலடி எனப்படும்.

நேடுதல் - தேடுதல். வான்கலை - பெரிய ஆண் மான். வயிரத்து இழைத்த - வயிரத்தால் செய்த. பருப்பதக் குடுமி -

மலைச் சிகரம். ஓடு - ஓடுகின்ற. வான் - வானத்திலுள்ள. மதிஅகடு - சந்திரனின் நடுவிடம். பிணை - சந்திரனிலுள்ள (மான்) கறை. பிணை என - தன் பெண்மான் என்று. உம்பர் - மேலே. வாவ - தாவ. கோடு - மரக்கிளை. கோடு வார்ந்து - மரக் கிளையால் குத்தப்பட்டு. குழுமி - கூடி. கொடியனார் - மகளிர். ஆடுவார் - நீராடுவார். கொடியன்னாரே! - மகளிர் மட்டுமோ.

ஆண் மானானது தன் துணை என்று களங்கமாகிய மானைக் கருதி அதைத் தழுவுவதற்காகத் தாவும். அப்போது மரக்கிளைகள் வழியாக அந்தச் சந்திரனிலிருந்து அமுதம் அருவியாக இறங்கும். அந்த அமுத நீரிலே பெண்கள் மட்டுமா கூடி நீராடுவர்? ஆடவரும் நீராடுவர். அவர்கள் உண்பதும் அந்த அமுத நீரேயாகும். அத்தகைய வளமுடையது அந்த நாடு.

மனப்படும் ஒருபொருள் வனப்புவந் துரைப்புழி
உலகுவரம்பு இறவா நிலைமைத் தாகி
ஆன்றோர் வியப்பத் தோன்றுவது அதிசயம்

என்பது அதிசய அணியின் இலக்கணம்.

கவி தான் கருதிய பொருளினது வனப்பை உவந்து சொல்லுங்கால் உலகநடை கடவாத தன்மையுடையதாக உயர்ந்தோர் வியப்புறச் சொல்வது அதிசய அணி என்பது பொருள். மானானது சந்திரனிலுள்ள பிணையைத் தன் பிணை எனக் கருதியதால், இது திரிபு அதிசய அணியானது. ஒன்றை மற்றொன்றாகக் கருதுவது திரிவு எனப்படும்.

இந்தப் பாடல் குருகை மான்மியம் என்ற காவியத்துள் நாடு வாழ்த்துச் சருக்கம் 25ஆம் பாடலாக உள்ளது. 'பிணைதற்பிணை எனக் கொண்டு' என்பது பாடபேதம்.

அமுத அருவியில் குழுமியாடுவார் கொடியன்னார் மட்டுமா? ஆடவரும் ஆடுவர். அவர்கள் நாளும உண்பது அத்தெள்ளமுதே என்று முடிக்க,

"வயிர மணிகளால் இழைக்கப்பட்டாற் போன்றுள்ளது மலையுச்சி. அந்தச் சிகரம் நாடோறும் வானில் ஓடுகின்ற சந்திரனது நடுவிடத்தைத் தடவுகின்றது. அப்படித் தடவுவதால் ஒரு களங்கம் உண்டாகின்றது. அக்களங்கம் ஒரு மான்போல் தோன்றுகின்றது. அந்த மலையுச்சியில் இருந்த ஆண் மானானது அந்த நிலவின் மானைக்கண்டு, தன் துணையாகிய பெண்மான் எனக் கருதித் தாவுகின்றது. அப்போது அதன் கொம்பு பாய்வதால், சந்திரனிலிருந்து அருவிபோல் அமுதம் ஒழுகுகின்றது. அந்த அமுத அருவியில், கொடி போன்ற மகளிர் கூடி நீராடுவர். அவ்வாறு நீராடுபவர் அரிவையர் மட்டுமா! ஆடவரும் உண்டு. அந்த அரிவையரும் ஆடவரும் பருகுவதும் அந்தத் தெள்ளிய அமுதே யாகும்" என்பது இப்பாடலின் திரண்ட பொருள்.

படியின்மேல் படிந்தகதிர்ப் படைமீது
கிளர்களையாம் பனிவண்டு ஆடக்
கடியுண் நீழ்நறுமென் காலமுஞ் சாய்ந்து
உடல்கிடந்த காட்சி கூறின்
அடியுமா கமுந்தழுவக் கொழுநரொடும்
கலவியினில் அழுந்தியோர்தம்
முடியும்போ தகவுடைநன் முகத்துறவைத்து
உடல்துய்க்கும் முறைநிய பொலும். 82

(இதுவும் அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம். துறை - நாடு வாழ்த்து. அலங்காரம் - ஒருவயிற் போலி.)

ஒரு தொடர்மொழியில் பல உவமை வந்தால், உவமை தோறும் உவமச் சொல் வாராமல், ஓரிடத்துமட்டும் 'போல' என்னும் உவம உருபு வருவது ஒருவயிற் போலி அணியாகும்.

இப்பாடலில் கதிர்ப்படை அடிக்கும் ஆகத்துக்கும் களை பனிக்கும் வண்டு மகளிர்க்கும் நீலம் முடிக்கும் கமலம் முகத்துக்கும் பனி ஆடுதல் கலவியில் அழுந்துதலுக்கும் உவமைகளாக வந்துள்ளன உவமை வந்த இடந்தோறும் உவம உருபு பெறாமல் இறுதியில் மட்டும் (போலும்) வந்தமை காண்க.

படி - பூமி. கதிர்ப்படை - கலப்பை. ஆடி - நீராடி. கடிஉண் - மணம் பொருந்திய. நீலம் - கருங்குவளை. கமலம் - தாமரை. ஆகம் - உடல். கொழுநர் - கணவர். அழுந்தியோர் - மகளிர்.

தரையில் கிடந்த கலப்பைமேல் களை (புல்) மூடியிருந்தது. புல்லில் பனி படிந்திருந்தது. அந்தப் பனியில் நீராடிய வண்டுகள் அருகில் சாய்ந்து கிடந்த கருங்குவளை தாமரை மலர்களுடன் கிடந்த காட்சியானது, மகளிர் தம் கொழுநரின் அடியும் உடலும் தழுவிக் கொண்டு கலவியில் அழுந்தி, தங்கள் முடியை அவர்கள் முகத்தொடு சேர்த்து உடன் துயில்வது போன்றிருந்தது என்பது பாடலின் கருத்து.

இந்தப் பாடலும் குருகை மான்மியத்து நாடு வாழ்த்துச் சருக்கத்தின் 75ஆம் பாடலாகப் பாட வேறுபாட்டுடன் உள்ளது. பாட வேறுபாடுடைய பாடல் வருமாறு :

படியின்மேல் படிந்தகதிர்த் தலையினில்தேங்
கமலம்எதிர் பயின்று பைந்தேன்
கடியுண்மாண் கமலமினக் கதிர்த்தலைமே
லுடன்கிடந்த காட்சி மாதர்
அடியும்ஆ கமும்தழுவக் கொழுநரொடும்
கலந்துஅணைமேல் அணைந்தர் ஆய
முடிவின்வேர் அரும்புமுகம் முகத்துறவைத்து
உடன்துயிலும் முறையேபோலும்.

தரையிற் படிந்த நெற்பயிர்களுடன் தாமரையும் கிடந்து தோன்றும் காட்சி, கலவி நிளைத்த மகளிர் தம் கொழுநருடன் அமளியில் துயிலுதல் போலும் என்பது அதற்குப் பொருள்.

இப்பாட்டு பாப்பாவினத்தில் காணப்படுமாறு பாடம் கொள்ளின் பொருள் தெளிவுடையதாகும் என்பது அங்கே காணப்படும் குறிப்பு.

நிறம்தழைவான் கதிர்உணங்க அங்குரித்துஅங்[1]
குடன்வளர்ந்த நீர்மைத் தாகும்
திறம்தழைசெங் கமலமும்இந் தீவரமும்
உடன்உணங்கும் செயலும் தீந்தேன்
வறந்துஅறவண்[2] டினம்துறந்த செய்கையும்நீ
ரவர்உறவின்[3] மாண்பும் கள்உண்டு[4]
அறம்தவறித் திரிகளியர்[5]உறவின் இழி
வையும் உணர்த்தும் அமைதித் தாமே.[6] 83

(பாவினம் - அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம். துறை - நாடு வாழ்த்து. அலங்காரம் - நிதரிசனம்.)

ஒரு வகையால் நிகழ்வது ஒன்றனுக்குப் பொருந்தியதொரு பயனைப் பிறிது ஒன்றனுக்கு நன்மையோ தீமையோ புலப்பட நிகழ்வதெனச் சொல்வது நிதரிசன அணியாகும்.

நிறம்-ஒளி. வான்கதிர்-சூரியன்;வெயில். உணங்க-வாட. அங்குரித்து - முளைத்து. நீர்மைத்து - இயல்புடையது.

---

பாடபேதம் : 1. அங்குரித்து ஆங்கு. 2. வறந்தர.
3. உறவும். 4. வாழ்வில் காலத்து.
5. புறந்தருநர். 6. தெருட்டும் அளவைத் தாம்.

இந்தீவரம்-சருங்குவளை. வறந்துஅற-வற்றிஒழிய. நீரவர்-அறிவுடையார். திரிசளியர் - திரிகின்ற கட்குடியர். அமைதித்து-இயல்பையுடையது.

ஒன்றாகத் தோன்றி ஒன்றாக வளர்ந்த தன்மை யுடையனவான செங்கமலமும் கருங்குவளையும் வெயில் வாட்டுவதால் ஒன்றாகவே வாடிப்போகும் செயலும், அம் மலர்களில் தேன் வற்றியவுடன் அவற்றை வண்டுகள் நீங்கிப் போகும் செயலும் முறையே உயர்ந்தவர் உயர்வையும், கட்குடியரின் இழிவையும் உணர்த்துவனவாகும் என்பது கருத்து.

இப்பாடலும் குருகை மான்மியத்தின் 77ஆம் பாடலாக உள்ளது.

காழ்அகிற் பொழிலும் சந்தனப் பொழிலும்
　　கமழ்நறுஞ் சண்பகப் பொழிலும்
கோழரைக் கமுகு நாரிகே ரமும்பொற்
　　கோங்கும்வேங் கையும்மலர்க் குருந்தும்
மாழைஅம் சுளைமுட் புறக்கனிப் பலவும்
　　மாவும்நா கமும்பணை மருதும்
தாழையும் மகிழும் வாழையும் கரும்பும்
　　தனித்தனி தழைத்த[1] எம் மருங்கும். 84

(இஃது எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம். துறை - நாடு வாழ்த்து. அலங்காரம் - இடத்தன்மை.)

விளம் மா விளம் மா விளம் விளம் மா என்னும் வாய்பாட்டின்படி வந்த எழுசீர் விருத்தம்.

ஒரு பொருளை எவ்வித அணியும் இன்றி உள்ளது உள்ள படி கூறுவது தன்மையணியாம். இடத்தைப்பற்றி வரும் தன்மை அணி இடத்தன்மையாகும்.

---

பாடபேதம்: 1. தழைத்தது.

சாலம்-மராமரம். சோமரை-அடிமரவகையுள் ஒன்று. கமுகு-பாக்குமரம். நாரிகேளம்-தென்னை. மாழை-பொன் (போன்ற). முட்புறக்கனி - முள்ளைப் புறத்தே கொண்ட (பலாக்)கனி. தாழை-தாழம்பூச் செடி. எம்மருங்கும்-எல்லாப் பக்கமும்.

இப்பாடலும் குருகை மான்மியம் திருவாராதனச் சருக்கத்தின் 75ஆம் பாடலாக உள்ளது.

மரவமும் கடம்பும் பனசமும் பிடவும்[1]
வடமும்மா தவியுமா தளமும்
குரவமும் இலவுந் திலகமும் விளவும்
கொன்றையுஞ் செருந்தியும் குமிழும்
அரசும்நா வலும்தான் றியும்பா திரியும்
ஆமல கமுந்நாரந் தமும்ஆம்
பிரமும்ஏ லமும்ஆர் மரமும்வே ழமும்சம்
பீரமும் துன்றுசா லினவே.[2]

(இஃதும் எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம். முன்னைய செய்யுளைப் போன்ற வாய்பாட்டான் வந்தது. துறை - நாடு வாழ்த்து, அலங்காரம் - இடத்தன்மை)

பனசம்-சரப்பலா. வடம்-ஆலமரம். திலகம்-மஞ்சாடிமரம். ஆமலகம் - நெல்லி. ஆம்பிரம் - மாமரம். ஆர்மரம்-ஆத்தி மரம். வேழம் - மூங்கில். சம்பீரம் - எலுமிச்சை. சாலின-சிறப்பையுடையன.

இப்பாடலும் குருகை மான்மியம் திருவாராதனச் சருக்கத்தின் 76ஆம் பாடலாக உள்ளது.

---

பாடபேதம் : 1. மருதும். 2. பிரமமுமே லமும்சண பகமும் வேழமும் சம்பீரமும் தழைந்துள ஒருசார்.

வள்ளையங் கொடியும் முல்லையும் விரைமென்
　　மயிலையும் இருபுடை மயங்கிக்
கொள்ளைவண் டினம்பாண் முரன்று அறு பதத்தால்
　　குடைந்துதேமதுமடை திறக்கும்
முள்ளுடைக் கொழுந்தாட் கமலமும் விரவி
　　முறுக்கவிழ் குவளையும் இரவில்[1]
விள்ளிதழ்க் குமுதத் தொகுதியும் பகுதி
　　விளைக்கும்வா விகள்பல பலவே.　　86

(இதுவும் எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்-துறை - நாடுவாழ்த்து. அலங்காரம் - இடத்தன்மை,)

மயிலை - இருவாட்சி. கொள்ளை வண்டினம் - மிகுதியான வண்டுக் கூட்டம். பாண் முரன்று - இசைபாடி. அறுபதம் - ஆறு கால்கள். குடைந்து - கிண்டி. தேமது - இனியதேன். தாள - தண்டு. முறுக்கு - மொட்டு. பகுதி - பகுப்பு.

இப்பாடலும் குருகை மான்மியத்தில் திருவாராதனச் சருக்கத்தில் 77ஆம் பாடலாக உள்ளது.

தாழிதடங் கடல்அகடாய் ஒலிக்கும்[2] தண்ணந்
　　தனிகருதிம் பால்தயிராய்த் தலைப்பெய் தோங்கும்[3]
பாழிநெடுங் கிரிஎனும்மந் தரம்மத் தாகப்
　　படநாகம் வடமாகப் பரந்த தேவர்

---

பாடபேதம்: 1. குவளையும் மெள்ள.
　2. உறைய. 3. கோவாப்.
　　கோவா என்பது கோலாம் என்று இருப்பிற் பொருந்துவதாம் என்பர் முன்னைய பதிப்பாசிரியர்.

வாழி இருந் தெள்ளமுதம் கடைநாள் ஆழ்ந்த
வயிரவரை யினைக்கமட வடிவாய் ஏந்தும்
ஆழிபுனைந் தெழுதடக்கைப் பெம்மான் தொண்டர்க்கு
அடியவராம் நிலைமையர்என் அடிகள் ஆவார்.87

(இஃது எண் சீர்க் கழிநெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - வினைத்தன்மை).

காய் காய் மா தேமா காய் காய் மா தேமா என்ற வாய் பாட்டான் வந்த எண்சீர் விருத்தம். 1,5,7 சீர்களில் மோனை வந்துள்ளது.

தாழி - பானை. அகடு - வயிறு. தளி - துளி. தலைப் பெய்து - கூடி. பாழி - வலிமை. மந்தரம் - மந்தரமலை. படநாகம் - வாசுகி எனும் பாம்பு. வடம் - கடைகயிறு. கடைநாள் - கடைந்த நாளிலே. வயிரவரை - வலிய மந்தர மலை. கமடவடிவு - ஆமை வடிவம். ஆழி - சக்கரம். அடிகள் - தலைவர்.

இப்பாடல் குருகைமான்மியம் புறநகர் வாழ்த்துச் சருக்கம் 50 ஆம் பாடலாக உள்ளது.

கடலின் நடுவிடம் பானையாகவும் ஒலிக்கின்ற நீர்த்துளி பால் தயிராகவும் கொண்டு, வலிய மந்தரமலை மத்தாகவும் பாம்பு கயிறாகவும் தேவர் அமுதம் கடைந்த காலத்து மந்தர மலையை ஆமை வடிவாக ஏந்துகின்ற சக்கராயுதம் தரித்த கையுடைய பெருமான் அடியவர்க்கு அடியவர் ஆகும் நிலைமையர் எனக்கு ஆசாரியர் ஆவர் என்பது திரண்ட பொருள்.

வெற்றூண்ஒன் றிசையாது சாவா மூவா
விழுமருந்துண்டு ஒண்துறக்கம்[1] மேய்வா னோரைச்
செற்றூணென்று இசைகனகன் இங்குள் ளானோ
சிறுவஎன மதுகைநர சிங்கம் ஆகிப்
பொற்றூண்நெட் டகடுகிழித்து அவன்தன் ஆகம்
போழ்ந்துஉகிரால் அளைந்துகுடர்ப் புண்ணீர் மாலை
கற்றூணம் பொருவுதிரள் திண்தோள் வேய்ந்த
கருணைவரைக்கு அடிமைசெயும் காட்சி யாரே. 88

(இதுவும் எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - அவயவ உவமை முந்தைய பாட்டின் வாய்பாடே இதற்கும் கொள்க.

வெற்றூண் - வெறுவிய உணவு. இசையாது - உண்ணாமல். சாவா மூவா விழுமருந்து - தேவாமுதம். துறக்கம் - சுவர்க்கம். செற்று - கொன்று. ஊண் என்று - உணவாக. கனகன் - இரணியன். மதுகை - வலிமை. பொற்றூண் - பொன்னாலாகிய தூண். நெட்டகடு - நீண்ட நடுவிடம். ஆகம் - மார்பு. போழ்ந்து - பிளந்து. உகிர் - நகம். அளைந்து - கலக்கி. குடர் - குடல். புண்ணீர் - இரத்தம். கற்றூணம் (கல்தூணம்) - கல்லால் ஆகிய தூண். பொருவு - போன்ற. தோள் வேய்ந்த - தோளிலே தரித்துக்கொண்ட. கருணை வரை - திருமால்.

அடிமை செய்யும் காட்சியார் என்பது அடுத்த பாடலில் வரும் தெய்வம் ஆவார் என்பதுடன் இயையும்.

"வேறு உண்டி எல்லாம் வெறுவிய உண்டி என்று அதை உண்ணாமல், தேவாமுதமே உண்டியாக உண்டு சுவர்க்கத்தில் சென்று தேவர்களைக் கொன்று அவர்

1. விழுமருந் தொண்டுறக்கம் என இருப்பின் பொருந்தும எனபது முன்னைய பதிப்பாசிரியர் கருத்து.

களையே உணவாகக் கொண்ட இரணியனானவன், "நீ சொல்லும் திருமால் இங்கே உள்ளானோ?" என்று கூறுகையில், நரசிங்கமாகி, பொன்னாலாகிய தூணின் வயிறு கிழித்து வெளிப்பட்டு, அந்த இரணியன் உடலைப் பிளந்து தன் நகங்களால் கலக்கி இரத்தத்தோடு கூடிய குடல் மாலையை, தன் கல்தூண் போன்று வலிய தோளிலே புனைந்த கருணைமலையாகிய திருமாலுக்கு அடிமைசெய்யும் ஞானிகள் தெய்வமாவார் என்பது இப்பாடலின் திரண்ட பொருள்.

இப்பாடலும் குருகைமான்மியம் புறநகர் வாழ்த்து 52ஆம் பாடலாக உள்ளது.

தேன் இலங்கும் பைந்தாம மாலை மார்பின்
    தசரதன் நல் மகவாகித் திண்கான் மேவி
வான் நிலம்கொள் ஏழுமரா மரமும் வாலி
    மார்பகமும் இலங்கேசன் மவுலி பத்தும்
நானிலத்து அன்று இழிதர ஓர் வாளி தூவி
    நன்னுதலா ளுடன்கூடி இளவல் என்போன்
தான் இலங்கா புரம் புரப்பக்[1] களித்த[2] வென்றித்
    தனுராமன் தனக்கடிமை தழைந்துள் ளாரே. 89

(இதுவும் எண்சீர்க் கழி நெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - வீரம் பற்றிய பெருமிதம்).

திண்கான் - வலியகானகம். மவுலி - கிரீடம். இழிதர - விழும்படி. வாளி - அம்பு. நன்னுதலாள் - சீதை. இளவல் - வீடணன். தனுராமன் - வில்இராமன்.

---

1. புரிபுரக்க. 2. அளித்த

இப்பாடலின் இறுதியிலுள்ள தழைந்துள்ளார் என்பதும் பின்னே வரும் தெய்வமாவார் என்பதுடன் இயையும்.

"தசரதன் மகனாகி வனம்ஏகி ஏழுமராமரமும் வாலி மார்பும் இராவணனின் பத்து முடிகளும் அழியும்படி ஓர் அம்பு ஏவி, தம்பி விடணன் இலங்கையை ஆளும்படி செய்து மகிழ்ந்த இராமனுக்கு அடிமை தழைந்துள்ளார் தெய்வம் ஆவார்" என்பது பாடலின் திரண்டபொருள்.

இப்பாடலும் குருகாமான்மியம் புறநகர் வாழ்த்து 55ஆம் பாடலாக உள்ளது.

உடைமணியும் கிண்கிணியும் கறங்கா வண்ணம்
ஒதுங்கிமழ வொன்றுடன்ஆள் அற்றம் நோக்கி
இடைமகளிர் மனையிடைபுக்கு அதன்பொற்றோள்மீது
ஏறிதிமிர்ந்து இடக்கைஉறி பிடியா மற்றைப்
புடையலர்க்கை கொடுவெண்ணெய் தொடுஉண்டு அந்த
புதல்வனுக்கும் பகுந்தருத்திச்[1] சிங்க நோக்கிற்
கடைநயனம் மணிவாயில் பறற[2] நின்ற
காட்சிநினைந் தாடுவார் பாடு வாரே. 90

(இதுவும் எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம். துறை - கடவுள் வாழ்த்து, அலங்காரம் - வினைத்தன்மை.)

கண்ணன் ஒரு சிறுவனை அழைத்துக் கொண்டு சென்று வெண்ணெய் திருடி உண்ட காட்சியைச் சொல்லோவிய மாக்கித் தருகின்றது இப்பாடல்.

உடைமணி - மேகலை. கறங்காவண்ணம் - ஒலிக்காத படி. மழவு ஒன்று - ஒரு சிறுவன். ஆள் - அற்றம் - ஆள் இல்லாத நேரம். புக்கு - புகுந்து. அதன் - அந்தச் சிறுவனின். பிடியா - பிடித்து. மற்றைப் புடை

---

1. பாத்தருத்தி. 2. பற்றி.

மலர்க்கை - மறுபுறத்துக் கை (வலக்கை). தொடுஉண்டு - எடுத்துஉண்டு. பருந்து அருத்தி - பங்கிட்டு ஊட்டி. சிங்க நோக்கு - ஒரேகாலத்தில் முன்னும் பின்னும் நோக்கும் நோக்கு.

ஆடுவார் பாடுவார் என்பது பின்னால் வரும் தெய்வம் ஆவார் என்பதனுடன் இயையும்.

இப்பாடலும் குருகை மான்மியம் புறநகர் வாழ்த்து, 58ஆம் பாடலாக உள்ளது.

இடையிலணிந்த மேகலையும் காலிலணிந்த கிண்கிணி யும் ஒலிக்காதபடி அடக்கிக்கொண்டு ஒருசிறுவனைத் துணை யாக அழைத்துக்கொண்டு, ஆளில்லாத நேரம் பார்த்து இடைச்சியர் வீட்டில் புகுந்து, அந்தச் சிறுவன் தோள்மீது ஏறி, இடக்கையால் உறியைப் பிடித்துக் கொண்டு மறு கையால் வெண்ணெய் திருடி உண்டு அந்தச் சிறுவனுக்கும் பங்கிட்டு ஊட்டி, முன்னும் பின்னும் நோக்குகின்ற சிங்க நோக்கினையுடைய கடைக்கண் பார்வை வாயிலிலே பொருந் தும்படி நின்ற அந்தத் திருக்காட்சியை நினைந்து ஆடிப் பாடுபவர்கள் தெய்வம் ஆவார் என்பது இப் பாடலின் சாரம்.

ஏட்டுப் பிரதியில் இதனையடுத்து, 'பொலந்தளிர்' என்ற முதற்குறிப்புடைய செய்யுளும் அது பற்றிய குறிப்பும் எழுதப் பட்டு 16 என்று எண் கொடுக்கப்பட்டுள்ளதாயினும் (15) என்பதன்பின் ஆசிரியப்பாவினம் முற்றும் என்று வரிபிளந்து எழுதப்பட்டுள்ளது.

# கலிப்பா வகை

பொலந்தளிர் மிளிர்தரப் பாலுறயுயிர்த் தும்பவா(நல்)
நலம்தழைமேலோங் கருப்புஅரும்பி நறைததும்பு
நறுநெய்தல்
மலர்ந்துளபொற் புடைக்கமலம் மலர்ந்தெதிர்நேதார்
மயமர்நோய்
புலந்தனவாம் செழுங்காந்தள் பொருவில்செழுங்
குமிழினொடும்
அலர்ந்துஅளிதாய் மணம்மல்கி அமைந்தபொனங்
கொடிமன்னோ
(இஃது ஐந்தடித் தரவு)

நான்முகத்தோன் தனக்குஅமைத்த நவையறுபொற்
பினஆகும்
வான்முகத்தும் வளர்பொழிற்கண் வளர்வதுதான்
உளதுஎன்றுஓர்
நூல்முகத்தும் வியப்புறவே நுவல்வதும்ஒன் றிலதாயும்

வெண்திரைப்பால் கடல்பயந்த விழுமியதெள்
ளமுது அருந்தும்
அண்டர்தம னியப்புவனத்து அமைந்துளஐந்
தருவகத்தும்
கண்டனன்என்று ஒருபனுவல் கழறியதுஒன்
றிலதாயும்

தத்துதிரைக் கடல்வளைத்த தரணியின்நள்
ளிடையாக
வைத்தஇரு சுடர்வலம்செய் வடவரையின் மாநங்காய
உத்தரதிக் கினும்பனுவல் உரைத்துளதொன்
றிலதாயும்
(இவை மூன்றும் மூன்றடித் தாழிசைகள்)

எம்கோன்

(இது தனிச்சொல்)

அருட்புயல் மாறன் அருவியந் துடரிப்
பொருப்பினும் கண்டஅற் புதத்தான்
மருட்கையின் வயத்ததாய் மகிழும்என் மனனே. 91

(இது மூன்றடியான் வந்த நேரிசையாசிரியப் பாவால் இற்ற சுரிதகம். இஃது அக நிலை யொத்தாழிசைக் கலிப்பா. பகுதி - இயற்கை. துறை - காட்சி. அலங்காரம் - உருவக வாய்பாட்டால் வந்த உடனிலைச் சிலேடை.)

ஒரு சோலையில் தலைவன் தலைவியைத் தனியே காண் கின்றான், கண்டு அவள் அழகை வியந்து கூறுவதாக அமைந்த பாடல் இது. ''தெய்வம் புணர்ப்பச் சிந்தை வேறு ஆகி எய்தும் கிழத்தியை இறையோன் என்ப'' என்பது இலக்கணம். ''அணங்குகொல்'' எனத் தொடங்கும் குறட் பாவை நோக்குக!

பொலந்தளிர் - பொன்போன்ற தளிர். பொறை உயிர்த்து - இளைப்பாறி. உலவா - உலவி. கோங் கரும்பு - முலைக்கு உருவகம். நறை - தேன். நெய்தல் - ஒருமலர்; கண்ணுக்கு உருவகம். கமலம் - தாமரை; முகத்துக்கு உருவகம். மம்மர் நோய் - மயக்கமாகிய நோய். காந்தள் - கைக்குஉருவகம். குமிழ் - குமிழமலர்; மூக்குக்கு உருவகம். அளிதாய் - வண்டுகள் தாவி. பொலங்கொடி - பொன்னா லாகிய கொடி.

நான்முகத்தோன் - பிரமன். நவை - குற்றம். பொற்பின- அழகுடையன. வான்முகத்து - பொன்னுலகத்தில். பொழிற் கண் - கற்பகச் சோலையில். நூல்முகத்து - நூல்களிடத்தில். நுவல்வது - சொல்வது.

பயந்த - கொடுத்த. விழுமிய - சிறந்த. தமனியப் புவனம் - பொன்னுலகம். ஐந்தரு - சந்தானம், தேவதாரு, கற்பகம், மந்தாரம், பாரிசாதம் என்பன. பனுவல் - நூல்.

நள்ளிடை - நடுவிடத்து. இருசுடர் - சூரியசந்திரர். வடவரை - மகாமேரு. மருங்கு - பக்கம். உத்தர திக்கு - வடதிசை.

புயல் - மேகம் போன்ற. துடரி - ஒருமலை. பொருப்பு - மலை. மருட்கை - வியப்பு. வயத்தது - வசப்பட்டது.

பொன்போன்ற தளிர் விளங்க ஓய்வெடுத்துக் கொண்டு உலாவி, கோங்கு அரும்புகள் அரும்பி, நெய்தல் மலர் மலர்ந்துள்ள அழகிய தாமரை மலர் ஒன்று மலர்ந்து கண்டாரை மயக்கும் காந்தள் மலரொடும் குமிழ்மலரொடும் விரிந்து வண்டுகள் தாவும்படி மணம் மிக்கு அமைந்த பொன்னங் கொடியானது,

பொன்னுலகத்திலேனும் உண்டென்று எந்த நூலும் சொன்னதில்லையே!

அமுதருந்தும் தேவர்களின் உலகத்துக் கற்பகச்சோலையிடத்து உண்டென்று ஒருநூலும் சொன்னதில்லையே!

சூரியர் சந்திரர் வலம் செய்யும் மகாமேருவுள்ள வடதிசையில் உண்டென்று நூல்கள் கூறவில்லையே!

எந்நூலிலும் சொல்லப்படாத அந்தப் பொன்னங் கொடியை நம்மாழ்வாருக்குரிய துடரிமலையில் கண்டேன். அந்த அற்புதக் காட்சியில் வியப்பால் என்மனம் மகிழ்கின்றது என்பது இப்பாடலின் சாரம்.

இதில் தலைவி ஒரு பொன்னங் கொடியாக உருவகம் செய்யப் பட்டுள்ளமையால் இது உருவக அணியானது.

நீலாலம் குளிறுதிரை கெழுகடல்முற்று அகன்ஞாலத்து
ஆலாலம் மிசைபவளத்து அருவரையும் கருவரையும்
தமளைஆங் கமைத்ததொழில் தன்மையுடன்
ஒருதலையாய்[1]
எமதெமதென்று எதிருநரின் உயிர்செகுத்தூஉந்து
இருநோக்கின்
கடைசிவந்து வரிபரந்து[2] கவின்பெறுவார்
குழைபோழ்ந்த
வடிபுரைமாண் மதர்மழைக்கண்[3] மதிபுரைவாள்
நறுநுதாஅல்!

[இஃது ஆறடித் தரவு]

இடம்தழுவும் குனிசிலைக்கை இகல்மறவர்
தொடுகணையோடு
உடன்றுஎழில்என்[4] சுடர்வடிவேற்கு உணாவாதல்
ஒருதலையால்
தொடர்ந்தெழுநின் தமரேல்செண் பகமாறன்
துணையடிசேர்
திடம்தழுவும் ததியர்எனத் தெருளுறநன்கு[5]
அருளுவனே.

வாள்தானைத் துறுமறவர் வயிரஅழற் பிழம்பெறிகண்[6]
கோட்டானை யுடன்வழில்என் கூரிலைவேல்
அவர்மார்பில்

---

பாடபேதம் :

1. தமிதமி என்னது எனலாய்தவ லருமாண் தொழில் தன்மை.
2. கருமையவாய்க். 3. மதர் மழைக் கண்.
4. கொடுங்கணையோடு உடன்று எழில் என்.
5. தழுவு ததியர்எனத் தெறலரு
6. பிழம்புஉகுகண். 7. உடங்கு எழில் என்

தீட்டாறை விணை அளிப்பன் நுமரேல்திவ் வியதுளபத்
தோட்டானைத் தொழுமாறன் தொண்டரின் நன்கு
அருளுவனே.

குளிர்மதிவான் அகடுஉரிஞ்சும் கொடித்தேரின்
குழுவினொடும்
ஒளிதிகழ்வன் படைமறவர் உடன்றுஎழில்என்[7]
நுதிவேலால்
களிபயில்வெந் தொழில்புரிவன். நுமரேல்வண்
கருணேசன்
அளிபயில்நல் மகிழ்மாறன்[8] அடியரின் நன்கு
அருளுவனே.

(இவை மூன்றும் நான்கடியாய் ஒரு பொருள் மேல் அடுக்கி வந்த தாழிசைகள்)

எனவாங்கு

(இது தனிச்சொல்)

காணுதி காணுதி கனலிதெறுத்து எழினும்
தாணுவின் நிலைதவ றினும்தவ றாஉரை,
குன்று[9]சூழ் கூர்ம்பரல் கொடுநெறி
ஒன்றும்நீ[9] அழுங்குஅஞர் உறல்ஏ குதியே. 92

(இது நான்கடியாய் நேரிசையாசிரியப்பாவினால் இற்ற சுரிதகம்)

(இது தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம் என்னும் நான்கு உறுப்பும் இழுக்கு இன்றாய் வந்த ஒத்தாழிசைக் கலிப்பா. என்னை?

---

8. அளிதிகழ்தே மகிழ்மாறன்
9. கொடுநெறிக்கு ஒன்றும்நீ

"ஒத்தா ழிசைக்கலி கலிவெண்பாட்டே, கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே", "அவற்றுள் ஒத்தாழிசைக் கலி இருவகைத்து ஆகும்?", "இடைநிலைப் பாட்டே தரவு போக்கு அடைஎனப் புடைபயின்று ஒழுகும் ஒன்றென மொழிப" (தொல். செய் 130-132) என்பவற்றான் உணர்க.

இதனை யாப்பருங்கலக் காரிகையார் நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா என்ப.

அலங்காரம் - சுவையினுட் பெருமிதம். என்னை? "கல்வி தறுகண் இசைமை கொடை எனச் சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே" (தொல். மெய். 9.) என்றார் ஆகலின். பகுதி - உடன்போக்கு. துறை - அடல் எடுத்துரைத்தல்.)

தலைவன் தலைவியை உடனழைத்துப் பாலைவழியே செல்கின்றபோது, நற்றாயின் முறையீடு கேட்ட மறவர் தலைவனைப் பின் தொடர்ந்தனர். அவர்கள் பின் தொடர் தலைக் கண்ட தலைவி அஞ்சி, தலைவனுக்கு உணர்த் தினாள். மறவரைக் கண்டு அஞ்சிய தலைவியைத் தலைவன் தேற்றுவதற்காகத் தன் மேம்பாடு கூறி, அவளை அப்பால் விடுத்ததாக அமைந்த பாடல் இது.

"ஈன்றாள் அறத்தொடு நிற்றலின் தமர்பின் சேறலைத்
தலைவிகண்டு தலைவற்கு உணர்த்தலும்
தலைமகள் தன்னைத் தலைமகன் விடுத்தலும்"

என்பது இந்தத் துறையின் இலக்கணம்

கீலாலம் - நீர். முற்றுதல் - சூழ்தல். ஆலாலம் மிசை பவளத்து அருவரை - சிவன். கருவரை - திருமால். தமஎன - தம்முடையன என்று. தொழில் - சிவன்தொழில் அழிப்பு, திருமால் தொழில் காத்தல். எதிருநர் - எதிர்ப் பட்டவர். உயிர்செகுத்து-கொன்று. ஈத்து - உயிர் கொடுத்து. இருநோக்கு - இருவகைப் பார்வை;

"இருநோக்கு இவள்உண்கண் உள்ளது, ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து'' என்ற குறள் காண்க.

கடைசிவத்தலும் வரிபரத்தலும் கண்ணுக்கு அழகு. வார்குழை - நீண்டதோடு. வார்குழை போழ்ந்த - காதணி வரை நீண்டு சென்ற. வடி - மாவடு. புரை - போன்ற. மதிபுரை - பிறைச் சந்திரன் போன்ற. நறுநுதல் - நல்ல நெற்றியுடைய தலைவி. நறுநுதாஅல் - தலைவியே!

மறவர் - கொலை செய்யக் கருதிவரும் மறவர். உடன்று எழில்என் - சினந்து வந்தால் என்ன? என்னை ஒன்றும் செய்ய இயலாது. வேற்கு உணவாதல் - இறந்து படுவது. ஒருதலை - உறுதி. தமரேல் - வருபவர் உறவினராயின். சண்பகமாறன் - நம்மாழ்வார். துணையடி - இருபாதங்கள் ததியர் - அடியவர். தெருள் - அறிவு. அருளுவன் - உதவி செய்வேன்.

தானை - படை. துறுதல் - நெருங்குதல். வயிரம்-வலிமை. அழல் பிழம்பு எறிகண் - நெருப்புச் சுவாலை வீசுகின்ற கண்கள். கோட்டு ஆனை - தந்தமுடைய ஆனை. தீட்டா - தீட்டி. தைவினை - துன்பத்தை. நுமரேல் - உன் உறவினர் ஆயின். துளபத் தோட்டான் - துளபமாலை யணிந்த திருமால். தொண்டரின் - தொண்டர்களைப் போல.

வான்அகடு - வானத்தின் நடுவிடம். உரிஞ்சுதல்-தடவுதல். வெந்தொழில் புரிவன் - கொலை செய்வேன். கருணேசன் - திருமால். மாறன் - நம்மாழ்வார். அடியரின், அடியவரைப் போல.

கனலி - சூரியன். தாணு - மலை. பரல் - பரற்கல். தவறாஉரை - என் சொல் தவறாது. அழுங்கு அஞர்-துன்பம், உறல் - உறாதே. ஏகுதி - அப்பால் செல்வாயாக.

நறுநுதாஅல்! நம்மைத் தொடர்பவர் பகைவராயின் கொல்வேன். உறவினராயின் அருள் செய்வேன். சூரியன் தெற்கே உதித்தாலும் மலை நிலை தவறினாலும் என் சொல் தவறாது. துயரம் உறாமல் கொடுநெறியில் ஏகுதி என்பது பாடலின் திரண்ட பொருள்.

அண்டரண்ட பகிரண்ட முழுவதும்ஈன்று
அகத்தடக்கிக்
கொண்டபெரும் பாழினுக்கு ஞாங்கரதாய்க் குளிறுதிரை
மண்டுபெரும் புனல்விரசைக்கு அப்புறத்தாய்
மதிநலம்நோய்
தொண்டரினம் பேரின்பத் துறைபயிலந் தாமத்துள்
அருணஇளங் கதிர்உதயம் அலகிறந்துஒன்
றியதுஒன்றாத்
திருமணமண் டபத்திறுள்இந் திரையுடன்வீற்
றிருந்துளாய்!

(இஃது ஆறடித் தாவு)

இலகியவான் சுடர்விளக்கின் எழுதருபல் பந்தமெனா
உலகொருநான் கினும்அதன் கண் ஒருநால்வர்
எனும்படித்தாய்
நிலவலயத்து அடைவுஅடைவே நிரைத்துளதீவு
இருமூன்றும்
சுலவியபாற் கடல்அரவில் துயில்உவந்த ஒருமுதலாய்

மீனாவ தாரம்முதல் மேதினிமேல் வருகற்கி
தானாகி உனக்கும்ஒரு தந்தைதாய் உளரெனலாய்
ஊனார்மெய்க் குரம்பையினோடு உகந்தோறும்
உகந்தோறும்
ஆனாதுஇவ் வகைபருவத்து அங்கும்அமை பவன்ஆகி

ஏழ்வகைத்தாய் நால்வகைத்தோற் றத்துஇசைந்தும் இழைத்துளதம்
ஊழ்வகைத்தாய் அலம்போதும் உயிர்கள்தொறும் பிரியாது
வாழ்வகைத்தாய்ப் புனல்சொரிந்து மலர்தூவி வழிபடுதற்கு
ஆழ்கடற்பா ரடியவர்பால் அங்கங்கங்கு அமர்ந்துளாய்!

(இவை மூன்றும் நான்கடியாய் ஒருவிகற்பத்தான் வந்த தாழிசைகள்)

பேதைமையார் இறந்துபிறந்து உழல்வன்எனப் பேதுறா
மூதறிவார் அழியாத முதல்வன்எனத் தெளிந்துளாய்!
சாபத்தால் இழுக்கமுறாத் தலைமையாய்! சாபமடைந்து
ஆபத்துஆ யினர்சரண் என்று அடைதருமாங்கு அருள்தரிவாய்!

(இவையிரண்டும் ஈரடி அம்போதரங்கம். இவை பேரெண்.)

வேதனும்முற் றுணர்வல்எனில் அறிவரிய மேன்மையாய்!
ஆதரவுற் றிடும்எளியர்க்கு அறிவெளிய பான்மையாய்!
நினைபவர்தாம் நினைவுறும்அவ் உருவமதாய் வெளிநிற்பாய்!
அனைவரும்கண் டால்வியப்புற்று ஆசிபகர்ந்து எழுபொற்பாய்!

(இவை நான்கும் நாற்சீர் ஓரடி நாலம்போதரங்கம். இவை அளவெண்.)

திகிரியை உயர்வலம் தரித்துளாய்
திகழ்வரி வலஎாஇடம் பரித்துளாய்!
புகர்முக மதமலை சொலச்செல்வாய்!
பொருமுத லையின்உயிர் செலக்கொல்வாய்!
இரணியன் மார்பது பிளந்துளாய்!
இருநில மூவடி யளந்துளாய்!
அரண்இயல் ஆர்கலி அடைத்துளாய்!
அதனிடை ஏழ்மதிள் புடைத்துளாய்!

(இவை எட்டும் முச்சீர் ஓரடி இடையெண்.)

தேன்இமிர் துளபத்தாய்!
சென்னமது உளபத்தாய்!
ஈனரது இடம்எய்தாய்
எழும்எழு மரம்எய்தாய்
அலகையின் உயிர்கொன்றாய்!
அறன்அலது அருகுஒன்றாய்!
உலகமது உறுதுப்பாய்!
உரலிடை அடர்துப்பாய்
மறைமொழி யினும்எட்டாய்
வரைபொருள் உரைஎட்டாய்
உறைதயி ரதுகட்டாய்
உரைபுகழ் பலகட்டாய்!
அகல்மலை கவிகையுளாய்
அழல்பெருகு அவிகையுளாய்!
சகடமது உதைமைந்தாய்!
தகவின ருள்அமைந்தாய்!
(இவை பதினாறும் இருசீர் ஓரடி. சிற்றெண்.)

என ஆங்கு

(இது தனிச்சொல்)

பரத்துவ முதலாப் பரந்துள ஐந்தாய்
வரத்துடன் மூவுரு வாகிய வரத
திருக்குரு கூரநின் திருவடி வழுத்துதும்
எம்கோன் திருமகிழ் மார்பினன் இயற்றமிழ்
ஊழிதொ றூழிஎவ் வுலகினும்
வாழிய தாக வளர்க்கநீ எனவே! 93

(இஃது ஆறடித்தாய் நேரிசை யாசிரியப்பாவினால் இற்ற சுரிதகம்

இது தரவு தாழிசை எண் தனிச்சொல் சுரிதகம் எனும் ஐந்துறுப்பினால் வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா. என்னை?

"ஏனை ஒன்றே தேவர் பராஅ முன்னிலைக் கண்ணே",

"அதுவே வண்ணக ஒருபோகு என இரு வகைத்தே"

"வண்ணகந் தானே,
தரவே தாழிசை எண்ணே வாரம்என்று
அந்நால் வகையின் தோன்றும் என்ப"

"தரவே தானும் நான்கும் ஆறும் எட்டும் என்ற
நேரடி பற்றிய நிலைமைத் தாகும்"

"ஒத்துமூன்று ஆகும் ஒத்தா ழிசையே"

தொல். செய்யுள். 138-142.

(ஒத்த தாழிசையை ஒத்தாழிசை என்றது வினைத் தொகை)

"அடக்கியல் வாரம் தரவோடு ஒக்கும்
முதல்தொடை சுருங்கும்மன் எண்ணே"

"எண்ணிடை ஒழிதல் ஏதம் இன்றே
சின்னம் இ ப க் காலை ஆய"
தொல். செய். 144, 146.

என்பவற்றான் உணர்க.

இவ்வாறு வரும் வண்ணக ஒத்தாழிசையினுள் இருசீர் ஓரடிச் சின்னம் பதினாறும் ஒரு சீர் ஓரடியாய் வருவனவும் உள. அவை,

"உறைபதியி னுடன்அயனை உந்திப்பால்
படைத்தோயும்
அறைகடல்சூழ் நிலம்முதலாய் அனைத்துலகும்
புரப்போயும்"
— தொல். செய். 146 ஆம் சூத்திர உரை மேற்கோள்.

என்னும் வண்ணக ஒத்தாழிசையிலும் மூன்றடித்தாழிசை மூன்றும்

"வானும்நீ; நிலனும்நீ; மதியும்நீ; விதியும்நீ;
தேனும்நீ; அமிர்தும்நீ; திருவும்நீ; உருவும்நீ;
அன்பும்நீ; அருளும்நீ; ஆதிநீ; அந்தம்நீ;
இன்பம்நீ; துன்பம்நீ; இன்மைநீ; உண்மைநீ.
—தொல். செய். 146 சூத்திரஉரை மேற்கோள்.

என ஒரு சீர்ச் சின்னம் பதினாறுமாக வந்தவாறு காண்க.

"கெடலரு மாமுனிவர்"
—தொல். செய். 146 ஆம் சூத்திர உரைமேற்கோள்.

என்னும் கலியுள் முச்சீர் ஓரடி இடை எண்ணினையும் இரு சீர் ஓரடிச் சிற்றெண்ணினையும் ஒரு சார் ஆசிரியர் இரு சீர் ஓரடியாகவும் ஒரு சீராகவும் அளபெடாமல் அமைத்த வாறும் காண்க! இவ்வாறு வரும் வண்ணக ஒத்தாழிசை யினை ஒரு சார் ஆசிரியர் அம்போதரங்க ஒத்தாழிசை என்று கூறுமாறும் உணர்க!

இனி வண்ணகம் என்பது அராகம் என உரைத்து, அவ்உறுப்புடையன வண்ணக ஒத்தாழிசை எனவும் சொல்வர், வண்ணித்துப் புகழ்தலால் வண்ணகம் ஆயிற்று என்பது உணராதே. அன்றியும், எல்லா ஆசிரியரும் செய்த வழிநூற்குத் தொல்காப்பியம் முதல்நூல் ஆதலின், அவரொடு மாறுகொளக் கூறலாம் அது. ஆதலால் அது தொல்காப்பியர் நோக்கம் அன்று என உணர்க( அதற்கும் செய்யுள் வருமாறு )

திணை - பாடாண். துறை - கடவுள் வணக்கம்! பனுவல் வாழ்த்து எனினும் ஆம். அலங்காரம் - வாழ்த்து.

அண்டரண்டம் - தேவருலகம். பகிரண்டம் - பேரண்டம். ஈன்று - படைத்து. பெரும் பாழ் - மூலப்பிரகிருதி; காரண நிலை. ஞாங்கர் - இடம். குளிறுதல் - ஒலித்தல். விரசை - பரமபதத்திலுள்ள புனிதநதி. அப்புறத்தாய் - அப்பால் உள்ளதாய். அந்தாமம் - பரமபதம். அருணன் - சூரியன். அலகிறந்து ஒன்றியது- அநேகம் ஒன்று கூடினாலும். ஒன்றா - ஒப்பு ஆகாத. இந்திரை - திருமகள்.

பந்தம் - தீப்பந்தம். ஒரு நால்வர் - சங்கர்ஷணன், பிரத்தியும்னன், வாசுதேவன், அநிருத்தன் என்னும் வியூக மூர்த்திகள். நிரைத்துள - வரிசைப்படுத்திய.

தீவுஏழு - நாவல், இறலி, கிரவுஞ்சம், குசை, இலவம், தெங்கு, புட்கரம் என்பன. இவற்றுள் புட்கரம் என்பது பாற்கடல். பிறதீவுகள் ஆறும் பாற்கடலைச் சூழ உள்ளன என்பது தீவு இருமூன்றும் சுலவியபாற்கடல் என்பதால் அறியலாம். சுலவிய - சூழ்ந்த. அரவு - சேடனாகிய படுக்கை. ஒருமுதல் - பரத்துவநிலை,

குரம்பை - உடம்பு. ஆனாது - தவறாமல். அமை பருவம் - நன்மை அருகித் தீமை பெருகுகின்ற காலம். அங்கும் அமைபவன் - அவ்வீடத்தே அவதாரம் செய்பவன்.

ஏழ்வகை - தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. நால்வகைத் தோற்றம் - அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பன. அவை முட்டை, வியர்வை, விதை, கருப்பை எனப்படும். இழைத்துள - முன் செய்த. அலம் போதும் - சுழன்று சுழன்று பிறக்கும் துன்பம் அடைந்த. அங்கங்கு - இடம் தோறும்.

பேதைமையார் - அறிவில்லார். மூதறிவார் - அறிஞர்கள். சாபம் - சான்றோர் சினந்து கூறும் மொழி. சாபம் - வில். அடைதரும் ஆங்கு - அடைந்த காலத்தில்.

அறிவரிய - அறிய இயலாத அறிவெளிய - அறிய எளிதான. வெளிநிற்பாய் - எதிரே தோன்றுவாய். வியப்புற்று ஆசிபகர்தல் - பல்லாண்டு பாடுதல். பொற்பாய் - அழகுடையவனே.

திகிரி - சக்கரம். வலம் - வலப்புறம். வளை - சங்கம். இடம் - இடப்பக்கம். பரித்துளாய் - தாங்கியுள்ளனை. புகர்முகம் - புள்ளியுடைய முகம். மதமலை - யானை. சொலச்செல்வாய் - ஆதிமூலமே என்று சொன்னபோது செல்லுவாய். செல - அழியும்படி. அரண் இயல் - அரண் போலச் சுற்றியமைந்த. ஆர்கலி - கடல். அதனிடை ஏழ் மதின் - இலங்கை. புடைத்தல் - அழித்தல்.

தேன் இமிர் - வண்டுபாடுகின்ற. உளபத்தாய் - பத்து உள்ளவனே! எய்தாய் - அடைய மாட்டாய். எழுமரம் - மராமரம். எய்தாய் - (அம்பு) ஏவினாய். அலகை - பூதனைப்பேய். அறன் அலது - தீமை. அருகு ஒன்றாய் - அருகில் சேரமாட்டாய். துப்பாய் - பவளம் போன்ற உதடுகள் உடையவனே. துப்பு - பவளம். அடர்தல் - செறிதல்; கட்டுதல். துப்பாய் - வலிமையுடையவனே. துப்பு - வலிமை. எட்டாய் - எட்டமாட்டாய். பொரு

ளுரை - திருமந்திரம்; எட்டெழுத்து. எட்டாய் - எட்டு உடையவனே. கட்டாய் - திருடினாய். கட்டாய் - கட்ட முடியாதவனே. கட்டுதல் - பிணைத்தல். கவிகையுளாய் - குடையாக உள்ளவனே. அழல் பெருகு - வேள்வியில் பெருகுகின்ற. அவி - ஆகுதி. கையுள்ளாய் - கையில் உள்ளவனே. மைந்தாய் - வலியுடையவனே. மைந்து வலிமை. தகவினர் - அடியவர். உள் அமைந்தாய் - மனத்தில் பொருந்தினாய்.

பரத்துவ முதலாம் ஐந்து - பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை. மூவுரு - பிரமன், திருமால், சிவன். குருகூரன் - ஆதிநாதப் பெருமாள். மகிழ் மார்பினன் - நம்மாழ்வார்.

இயல்தமிழ் ஊழிதோறுஊழி வாழியதாக நீவளர்க்க எனவே நின் திருவடி வழுத்துதும் என்று கூட்டுக!

உலகங்கள் படைத்து அவற்றைத் தன்னுள் அடக்கிக் கொண்டு மூலப் பிரகிருதிக்கு அருகில் விரசைக்கு அப்புறத்ததாய் உள்ள பரமபதத்தில் இந்திரையுடன் பரமாக வீற்றிருப்பவனே.

ஒரு நால்வர் என்று கூறும்படி ஏழுதீவினுள் ஒரு தீவாகிய புட்கரம் என்னும் திருப்பாற்கடலில் வியூக வடிவாகத் துயில் உவந்த ஒருமுதலாக,

மீன் முதல் பத்து அவதாரம் செய்து, உனக்கும் ஒரு தந்தை தாயர் உளர் என்று கூறும்படி. உடல் தரித்து யுகந்தோறும் விபவமாக அவதாரம் செய்பவனாக,

தாம் முன்பு செய்த வினைப்பயனால் துயர் உறும் உயிர்கள்தோறும் அந்தர்யாமியாக,

நீர்சொரிந்து மலர்தூவி வழிபடுவதற்கு, இடங்கள் தோறும் அர்ச்சையாக இருந்து அருள்பவனே!

பிறவுயிர்களைப்போல் நீயும் பிறந்து இறந்து உழல் பவன் என்று அன்பர்கள் கூறினாலும் முதறிஞர் நீயே அழியாத முதல்வன் என்று தெளியும்படி உள்ளாய்! சான்றோர்கள் சினந்து இடும் சாப மொழியால் இழுக்கம் உறாதவனே! சாபம் எனும் வில்லைத் தரித்து துன்புற்றோர் அடைக்கலம் என்று அடையுங் காலத்து அவர்க்கு அருள் பவனே!

வேதனும் உணர்வதற்கரிய மேன்மையும் அன்புடையார் அறிதற்கு எளிய செளலப்யமும் உள்ளவனே. அடியார் எவ்வுருவாய் நினைப்பினும் அந்த உருவுடன் எதிர் நிற்பவனே! யார் கண்டாலும் தம் நிலை மறந்து அதிசயித்து மங்களாசாசனம் செய்வதற்கு இடமான அழகுடையவனே

கிரீடி தரித்தல் முதல் நகவிளர் உள் அமைதல் வரை யுள்ள பெருமைகளை உடையவனே!

இவ்வாறு பரத்துவமுதல் ஐந்துநிலைகளும் மூத்தேவரும் ஆகியவரதனே! நம்மாழ்வாரின் திருவாய்மொழி வழி தோறும் வாழியதாக நீ வளர்க்க வேண்டும் என்று உன் திருவடி வழுத்துகின்றோம் என்பது இப்பாடலின் பொருட் சுருக்கம்.

இப்பாடல் தரவில் பரத்துவமும் தாழிசைகளில் முறையே வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் அர்ச்சை நிலைகளும் குறிப்பாகக் கூறியதை ஞாபகமாகக் கரிதகத்தில் 'பரத்துவம் முதலாய் பரந்துள ஐந்தாய்'' என்று வெளிப் படையாக விளக்கியுள்ளமை காண்க. குறிப்பாக முதலில் எங்கோ கூறிய ஒன்றைப் பின்னர் நினைவு கொண்டு விளக்கம் தருவது ஞாபகம் எனப்படும் உத்தி என்பர்.

இருசீர் ஓரடிச் சிற்றெண்ணில் மடக்கு (யமகம்) அணி வந்துள்ளது.

பூமாது நிழல்மணிப்பூண் பொதியவிழ்பொன்
இகழ்ப்புனிதத்
தேமாலை நறுங்களபம் செறிமார்பத் திடைமுயங்க
அளப்பரிதாம் பகிரண்டத்து அப்புறமும் அகத்தடக்கி
உளப்பில்இளங் கதிர்உதயத்து ஒளிகிளர்பே ருருவாயும்
நன்னர்அங்கத்து அணுக்கள்தொறும் நயந்துஅணுவா
கியும்எழில்கூர்
தென்அரங்கத்து அரவணைமேல் தெளிந்திருகண்[1]
வளர்ந்துளாய்

(இஃது ஆறடித் தரவு)

ஒருசுடராம் சொருபமுடன் உருபம்அமைந்து
ஒருசுடரோடு
இருசுடராய்க் குணம்ஒருமூன்று எனலாகி
முறைமுறையே
படைப்பதையும் அழிப்பதையும் புறம்போக்கிப்
பழிபிறங்காது
இடைப்படுகா வலைநினைதென்று[2] எடுத்ததுவென்
அருளுதியே.

நின்றனவாய் இயங்கினவாய் நீடியபல்
உருவளித்தோன்[3]
பொன்றியநாள் எழுந்தபெரும் புனல்படிந்த
உயிர்களைநீ
எம்மானே! திருவுதரத்து இருத்தியகா வற்குஅவற்றால்
கைம்மாறுஅங் கெவனோமுன்[4] கைக்கொண்டது
அருளுதியே.

---

பாடபேதம் : 1. சிறந்திருகண். 2. எனதென்று.
3. இயங்குனவாய் நீடியபல் உருவமைத்
தோன்
மா — 4. நீ.

புறம்பயின்ற வினைவழிசார் போக்குவர
வினும்பிரியாது
அறப்பயின்றது அணுவுளம்தல் அதற்கு அவற்றை
எடுத்தனையாய்!
உள்நீர்மை அற்றனமாய்ந்து உறுநரகில் புகுவது உறீஇக்
கண்ணீர்கொண்டு அகன்று அகலாக் காவல்எவன்
அருளுதியே.

(இவை மூன்றும் ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி நான்கடித்தாய் இரண்டு விகற்பத்தான் வந்த தாழிசைகள்.)

தரணியுள் எவரொடும் புரணிய பெருவிறல்
இரணியன் வரன் எனும் அரண் அற இகலினை

ஒருபது சிரமுடன் இருபது கரமுள
நிருதனது உயிர்மிசை பொருகலனை சிதறினை

மறையவர் இறையவர் உரைவயின் வடுவுரை
பறைபவன் உயிர்புகும் அறைகழ வினையினை

முதலையின் இடர்உறு மதமலை மடுவினுள்
உதவுக எனும்உரை பதனொடும் உதவினை

(இவை நான்கும் அராகம். என்னை?
''உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்''
(தொல். செய். 233)
என்பதனால் குறிலிணைந்து உருட்டி வந்தது உணர்க.)

வஞ்சனை ஓர் வடிவெடுத்து மாதுலனா மறைபயின்ற
கஞ்சனைக்கொன்று உரகேசன் கடும்பொறையைத்
தவிர்த்தனையே

1. அறம்புரிவது அணுவுளபெ.

குருகுலத்தார் நூற்றுவரைக் கூற்றுவன்நாட்
டினில்இருத்தித்
தருமன்முத லவர்க்குஅவனி தனியாளக்
கொடுத்தனையே

(இவை நாற்சீர் ஈரடி இரண்டு அம்போதரங்கம். இவை பேரெண்.)

கழிபெருங்கற் பினள்ஆடை கழியாமல் நயந்தனையே
வழிபடும்தூ தனும்ஆகி மடக்கோலை சுமந்தனையே

ததிபாண்டன் தனக்குஅழியாத் தமனியநாடு
அளித்தனையே
விதிகாண்டற்கு உலப்பில்பல வேடம்அவை
கொண்டனையே

(இவை நான்கும் நாற்சீர் ஓரடி நால் அம்போதரங்கம். அளவெண். அற்றேல், நாற்சீர் ஈரடி அம்போதரங்கத் தொடும் இவற்றிடை வேற்றுமை யாதோஎனின், எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடிய நாட்டல் வேற்றுமை. என்னை?

''எழுத்து முதலா ஈண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்புஎன மொழிப யாப்புஅறி புலவர்''

தொல். செய். 78

என்பதனான் உணர்க. இந்நோக்கம் மேல்வரும் இடை எண், சிற்றெண்ணிற்கும் ஒக்கும்.)

தாடகை உடல்உயிர் போக்கினை
தாபதன் மனதிடர் நீக்கினை
நீடுஅக லிகைபழி தீர்த்தனை

நேசமுன் னவனொடு சேர்த்தனை
வில்லினை மிதிலையில் வளைத்தனை
மெல்லியல் இளமுலை திளைத்தனை
வல்லரவு உடல்கெட நடித்தனை
மருதினை முதலொடு முடித்தனை[1]

(இவை எட்டும் முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம். இவை இடைஎண்.)

உறித்தயிர்கட் டுண்டனையே
உரலிடைகட் டுண்டனையே
மறித்துநிரை காத்தனையே
வழங்கினைஐங் காத்தனையே

குடநடம்முன் பாடினையே
குழலினில்பண் பாடினையே
படர்சகடம் பொடித்தனையே
பகட்டுமருப் பொடித்தனையே

நாவலன்பின் நடந்தனையே
நடித்தனைமன்[2] நடந்தனையே
கோவலர்இல் இறுத்தனையே
கோள்விடைஏழ் இறுத்தனையே

புள்ளினைவாய் இடந்தனையே
புரந்தனைபா ரிடந்தனையே
தெள்ளமுதம் கடைந்தனையே
தேவருள்அங் கடைந்தனையே

1. ஒடித்தனை. 2. மென்.

(இவை பதினாறும் இருசீர் ஓரடிச் சிற்றெண். அம்போ தரங்கம் எனினும் எண் எனினும் ஒக்கும். இதனுள் பேரெண் இரண்டும் அளவெண் நான்கும் இடையெண் எட்டும் சிற்றெண் பதினாறும் அடைவே குறைவின்றி வந்தன.)

எனவாங்கு

(இது தனிச்சொல்)

இனையதன் மையவாம் எண்ணருங் குணத்தின்
நினைவருங் காவல் நிகழ்த்தினை அதனால்
நின்னது கருணையும் நீயும்
மன்னிய திருவுடன் வாழிவா ழியவே. 94

(இது நான்கடியாய் நேரிசையாசிரியப் பாவினாலிற்ற சுரிதகம்.

இதனுள் ஆறுஉறுப்பும் குறைவின்றி வந்தமை கண்டு கொள்க. இது யாப்பருங்கலக் காரிகை நோக்கம். என்னை?

"அவற்றொடு முடுகியல் அடியுடை அராகம்
அடுப்பது வண்ணக ஒத்தா ழிசையே"

என்பதனானும்

"அசையடி முன்னர் அராகம்வந் தெல்லா
உறுப்பும் உண்டேல் வசையறு வண்ணக
ஒத்தாழிசைக்கலி"

(யாப். காரிகை. செய். 11.)

என்பதனானும் உணர்க.

திணை - படாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - வாழ்த்து.)

நிழல் - ஒளி. பொதி - மொட்டு. பகிரண்டம் - பேரண்டம். உளப்புஇல் - அசைவு இல்லாத. நன்னர்-நன்கு. அங்கத்து - உடலில்.

சுடராம் சொரூபம் - ஒளிவடிவம். ஒருசுடர் - சூரியன். இருசுடர் - சந்திரன், அக்கினி. குணம் மூன்று - சத்துவம், இராசதம், தாமசம். புறம்போக்கி-சிவனுக்கும் அயனுக்கும் தந்துவிட்டு. இடைப்படு - படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய வற்றில் நடுவேயுள்ள. காவலை - காப்புத் தொழிலை.

நின்றன - அசரம். இயங்கின - சரம். உருவளித்தோன் - பிரமன். (பிரமன்) பொன்றிய நாள் - ஊழியிறுதியில். பெரும்புனல் - பிரளய நீர். படிந்த - மூழ்கிய. உதரம் - வயிறு. காவல் - காவல் தொழில். போக்கு வரவு-இறப்பு பிறப்பு. அணு - அணுவளவு. உள்நீர்மை - மனப்பண்பு. அற்றன - இல்லாத உயிர்கள்.

முரணிய - பகைத்த. விறல் - வலி. வரன் - வரம். அரண்-காவல். இகலினை-பகைத்தாய். நிருதன்-இராவணன். கணை - அம்பு. இறையவர் - அரசர். உறைவயின்-இருக்கும் இடத்தில். வடுவுரை - பழிப்புச் சொல். பறைபவன் - சொன்னவன்; சிசுபாலன். கழலிணை - இருபாதம்.

மதமலை - யானை. மடு - பொய்கை.

மாதுலன் - மாமன். மறைபயின்ற - மறைந்து வாழ்ந்த. உரகேசன் - பாம்பரசன்: ஆதிசேடன். பொறை - பாரம். கூற்றுவர் நாடு - யமலோகம். அவனி - பூமி.

சற்பினள் - திரௌபதை. மடக்கோலை - தூது ஓலை. தமனிய நாடு - பொன்னுலகம்; முக்தி. விதிகாண்டற்கு - சாத்திர மரியாதை காப்பதற்காக.

தாபதன் - கோசிகன். நேசமுள்ளவன் - கௌதமன். மெல்லியல் - சீதை. அரவு - காளியன். மருது - ஒருவகை மரம். கட்டு உண்டனை - திருடிஉண்டாய். கட்டுண்டாய் - கட்டப் பட்டாய். மறித்து-தடுத்து. நிரை - பசுக்கூட்டம். இங்கா - கற்பகச் சோலை. குடநடம - குடக்கூத்து. குழல் - புல்லாங் குழல். சகடம்-சகடாசுரன். பொடித்தல்-அழித்தல்.

பகடு - யானை. மருப்பு-தந்தம். நாவலன் - திருமழிசை யாழ்வார். மன்நடம் - நிலையானகூத்து. இறுத்தனை - தங்கினாய். விடை - எருது. இறுத்தனை - அடக்கினாய். புள் - பகாசுரன். இடந்தனை - பிளந்தாய். புரந்தனை - காத்தாய். பாரிடம் - பூமி. தேவர்உள் -தேவர் மனத்தில்.

காவல் - காப்புத் தொழில்.

பூமாது மார்பில் முயங்க அண்டத்து அப்புறமும் அகத்து அடக்கிப் பேருருவாகவும் அணுவாகவும் தென்னரங்கத்துக் கண்வளர்வோனே!

ஒளியுருவாகிய அருவமும் உருவமும் கொண்டு முச்சுடராய் முக்குணங்கள் என்று கூறும்படி அமைந்த முத்தொழிலில் படைப்பு, அழிப்பு ஆகியவற்றைப் பிரமனுக்கும் சிவனுக்கும் அளித்துவிட்டு, நடுவாகிய காப்புத் தொழிலைக் கொண்டமை ஏன்?

சர அசரங்களைப் படைத்த பிரமன் அழிந்த ஊழியிறுதியிலே, பிரளயத்தில் அழுந்திய உயிர்களைத் திருவயிற்று அடக்கிக் காத்தமைக்கு அவ்வுயிர்களால் உனக்கு என்ன கைம்மாறு கிடைத்தது?

வினையின்வழி வருகின்ற இறப்பு பிறப்புக்களிலும் உயிர்களைப் பிரியாமல், அவை அணுவளவு நல்வினை செய்திருப்பினும் அதற்காக அவற்றை எடுத்துக்கொண்டு, அவை நரகில் புகும்போதும் அவை அகன்றாலும் அவற்றை அகலாமல் காவல் செய்வது ஏன்?

இரணியன், இராவணன், சிசுபாலன், முதலை முதலியவரை அழித்தவனே!

கஞ்சனைக் கொன்று நூற்றுவரைக் கொன்று தருமன் முதலியோர்க்கு உலகினைக் கொடுத்தவனே!

திரௌபதிக்கு ஆடை தந்தாய்! தூதனாகி ஓலை சுமந்தாய்! ததிபாண்டனுக்கு முத்தி கொடுத்தாய்! பல அவதாரங்கள் செய்தாய்!

தாடகையைக்கொன்று கோசிகன் மனத்துயர் தீர்த்தாய்!
அகலிகை பழிதுடைத்துக் கௌதமனிடம் சேர்த்தாய்!
மிதிலையில் வில்வளைத்துச் சீதையை மணந்தாய்!
காளியன் கெட நடித்தாய்! மருதமரங்களை முறித்தாய்!

தயிர் திருடிஉண்டு உரலில் கட்டுப் பட்டாய்! பசுமேய்த்தாய்! கற்பகச் சோலையைச் சத்தியபாமைக்கு அளித்தாய்! குடக்கூத்து ஆடினாய்! வேய்ங்குழல் இசைத்தாய்! சகடம் பொடித்தாய்! யானைத்தந்தம் ஒடித்தாய்! திருமழிசை மன்னன் பின் நடந்தாய்! நடனம் ஆடினாய்! ஆயர்மனை தங்கினாய்! ஏழு எருது அடக்கினாய்! பகாசுரனைக் கொன்றாய்! உலகினைக் காத்தாய்! அமுதம் கடைந்தாய்! தேவர்கள் மனத்தில் உள்ளாய்!

அளவற்ற கல்யாண குணங்களுடன் காக்கும் தொழிலைச் செய்தாய்! ஆதலால் நின் திருவருளும் நீயும் திருமகளுடன் கூடி வாழ்க! வாழ்க!

என்பது பொருட்சுருக்கம்.

தரவில் பரத்துவமும் தாழிசைகளில் காரணம் பற்றாத கருணையும் பின்னுள்ள பகுதிகளில் செயற்கருஞ் செயல்களும் குறிப்பிடப் பட்டுள்ளன.

ஆளாய் மதுரகவி ஆதரித்த பூங்கமலத்
தாளான் மகிழ்மாறன் தந்த தமிழ்மறைப்பாக்
கேளா தவரே இருசெவியும் கெட்டாரே.

மாதா முலைப்பால் அருந்தா வரோதயனாம்
தாதார் மகிழ்மாறன் தந்த தமிழ்மறைப்பா
ஓதா தவரே உரைஅறியா ஊமர்களே.

புள்ளிப் பொறிவண்டு இமிர்பூம் பொழிற்குருகூர்
வள்ளல் மகிழ்மாறன் வடித்த தமிழ்மறைப்பா
உள்ளத்து உணரா தவரே உணர்விலரே.
புலவீர்!

பழுதற மாறன் பகர்தமிழ் கையால்
எழுதிய ஏட்டின் இனமலர் சூட்டித்
தொழுது அதன் வாசம் துற்றிஅவ் ஏட்டைச்
செறிப்பதே சென்னி மற்றைய
பொறித்தலை என்னப் புனைபொய்த் தலையே. 95

(இது தரவு இன்றாகித் தாழிசை பெற்ற ஒருபோகு என்னை?

"ஒருபோகு இயற்கையும் இருவகைத் தாகும்".
யாப். செய். 11

"கொச்சக ஒருபோகு அம்போ தரங்கம் என்று
ஒப்ப நாடி உணர்தல் வேண்டும்"

"தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னம் குன்றியும்
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக ஒருபோகு ஆகும் என்ப".
தொல். செய். 147, 148.

என்பவற்றான் உணர்க. இது தனிச் சொல்லும் சுரிதகமும் இன்றித் தாழிசை தாமேயும் வரும.)

ஆளாய் - அடிமைப் பட்டு. தாள் - திருவடி. தாது - மகரந்தம். உரை அறியா - சொல் அறியாத. துற்றுதல் -

நிறைதல். செறிப்பது - பொருத்துவது. சென்னி - தலை. பொறித்தலை - இயந்திரத்தால் இயங்கும் தலை.

திருவாய் மொழியைக் கேளாதவர் செவிடர். ஓதாதவர் ஊமர். நினையாதவர் உணர்வில்லாதவர். தொழாதவர் தலை, இயந்திரத் தலை என்னும்படி அலங்கரிக்கப்பட்ட பொய்யான தலை என்பது பாடலின் திரண்ட கருத்து.

புண்டரிக மடல்அவிழ்பொற் பொகுட்டினில்வாழ்
திருமகளும்
தெண்திரைசூழ் புவிமகளும் திருத்தகவாழ்ந்து
எழில்பெருகும்
வண்டுஇமிழும் புனற்பொன்னி மதிள்அரங்கன்
திருவடிஉட்
கொண்டவர்கள் இனிப்பிறவிக் கருக்குழியுட்
குறுகாரே. 96

(இது தனிச் சொல்லும் சுரிதகமும் இன்றித் தன்தளை யான் வந்த தாழிசையின்றித் தரவுடைத்தாய கொச்சக ஒருபோகு. திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - வாழ்த்து. இதற்கு யாப்பருங்கலக் காரிகையார் தரவு கொச்சகம் என்று பெயர் கூறுப.)

ஒவ்வோரடியிலும் கலித்தளையே வந்தமையால் தன் தளையான் வந்தது எனப்பட்டது.

புண்டரிகம் - தாமரை. மடல் - இதழ். பொகுட்டு - நடுவிடம். பொன்னி - காவிரி. உட்கொண்டவர் - நினைத்தவர்.

அரங்கன் திருவடி நினைத்தவர் கருக்குழியுட் குறுகார் என்பது திரண்ட பொருள்.

மாந்தளிர் பொன்மேனி மையுண் கருங்கயற்கண்
பாந்தளின் மேதக்க பைபோன்று அகல்அல்குல்
வாய்ந்த அணை மென்தோள் மடவரல் நல்லாய்!
அழுங்கல்நும் சீறூர் அகன்மலைக்கு எம்மூர்ச்
செழும்பசும் பொன்கோடு செய்துயர் குன்றம்
திணிதாய்ப் புடைத்தெழும்நின் தெள்நித் திலக்காழ்
அணிபூண் முலைபோன்று அணித்து.

தேமகிழ் மாலிகைச் செம்மலின் சென்னியும்
பூமகள் காதலன் பொற்றாள் கமலமும்
போன்றுஅணித் தன்றியும் பொய்தீர் வசிட்டனும்
வான்தனில் வைகும் வடமீன் எனலாம்
திருந்திய கற்புடைச் சேயிழை என்னும்
அருந்ததி யும்போன்று அணித்து. 97

(இது, தாழிசை யின்றித் தாழிசையொடுபட்ட தரவிலக்கணத்தின் திரிந்து வந்த தரவிணைக் கொச்சக ஒருபோகு. என்னை?

"எழுசீர் இறுதி ஆசிரியங் கலியே"
"வெண்பா இயலினும் பண்புற முடியும்"
(தொல். செய். 76, 77)

என்னும் சூத்திரங்களுடன் மாறுபடாது எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடிய நாட்டும் தரவு தரவிணை வந்து அதன் பின்னர், ஈற்றயலடி முச்சீராய் எழுசீராய் இறும் நேரிசையாசிரியச் சுரிதக மாதல், ஈற்றடி முச்சீராய் ஈற்றயலடி நாற்சீராய் மேல் நின்றும் எழுசீரான் இறும் வெள்ளைச் சுரிதகம் ஆதல் இன்றி, வெண்டளை தட்டு வெள்ளோசை தழீஇ வெண்பா இயலால் தரவு இரண்டும் ஈறடிக்கண் முச்சீரான் இற்றமையான் என்று உணர்க.

இதற்கு இங்ஙனம் தரவிரட்டிப்பதே பெரும்பான்மை என்று உணர்க. தரவு இரட்டியாது வருவதும் வந்தவழிக் கொள்க. ''செவ்விய திவ்விய'' என்னும் பாலைக்கலியும் இது என்று அறிக

பகுதி - இயற்கை. துறை - இடமணித்துக் கூறல். அலங் காரம் - ஒரு பொருட்குப் பலபொருள் உவமை.)

தெய்வம் புணர்த்தமையால் தலைவியை எய்திய தலைவன், ''ஊங்கு சோலையினூடே ஒளித்து நின்று வருவேன்'' என்று கூறிப் பிரிந்துபோக எண்ணுகின்றான். தன் பிரிவால் தலைவி கலங்குவாளே எனக் கருதிய அவன், தன் இருப்பிடம் வெகு தொலைவில் இல்லை. அண்மையி லேயே உள்ளது என்று தேற்றுவதாக அமைந்த துறை இடமணித்துக் கூறல் என்பது.

மலைகளுக்கு நம்மாழ்வார் இறைவன் ஆகியோரின் முடியும் அடியும் வசிட்டனும் அருந்ததியும் உவமையாக வந்தமையால் இது பலபொருள் உவமையானது.

இந்தத் தரவு இணை என்னும் இரு பாடல்களும் வெண்டளை பிழையாமல் வந்துள்ளன. இவ்வாறு இணை யாமல் தனித்தனியாக நிற்பின், பஃறொடை வெண்பா எனப் பெயர் பெறும்.

பாந்தள் - பாம்பு. பை - படம். அழுங்கல் - வருந் தாதே. நித்திலக்காழ் - முத்துவடம். கோடு - சிகரம். திணிதாய் - வலியதாய். அணித்து - அருகிலுள்ளது.

மகிழ் மாலிகைச் செம்மல் - நம்மாழ்வார். சென்னி - தலை. தாள்கமலம் - தாமரை மலர் போன்ற திருவடி. வைகும் - வாழும்.

நும் சீறூர் மலைக்கு எங்கள் ஊர் மலை அருகில் உள்ளது' உன் முலைகள். நெருங்கி இருபபது போலவும், நம்மாழ் வாரின் முடியும் இறைவன் திருவடியும் இணைந்தே இருப்பது

போலவும், வசிட்டரும் அருந்ததியும் இணைந்தே இருப்பது போலவும் இருமலைகளும் இணைந்து உள்ளன. ஆதலால் என் ஊர் மிக அருகில் உள்ளது என்பது திரண்ட பொருள்.

கற்பனைமேற் கொண்டொழுகும் கடைப்பிடியார் வயின்திருநாண்
பொற்புறும்ஆற் றலில்பொறித்த பொருவருசெவ் வணிநோக்கித்
தற்பொதிவாள் துறந்தெழு தகைத்தாய புனலூரன்
இற்புகலால் வெஞ்சினநஞ்சு எனக்கூர்த்த மருள்நோக்கம்
உற்பலம்தெள் அமிர்துயிர்த்தற்று ஒளிகிளர்[1] சீர் பயின்றனளே

அஃதன்றால்

அறகன்இங் கெமை ஆண் டருள்மகிழ் மாறன்
புனல்வறம் கூராப் பொருலைநயுட் புத்தேள்[2]
தினகரோ தயத்தில் செவ்விபெற்று அலர்ந்த
தண்மலர் மரைபுரை தகைத்தாம்[3]
ஒண்ணுதல் அரிவை ஒளிர்திரு முகமே.[4] 98

(இது தன் தளைத்தாய்த் தரவு, தனிச்சொல், சுரிதகம் என்னும் மூன்று உறுப்பால் வந்தது. இதனை யாப்பருங் கலக் காரிகையார் தரவு கொச்சகக் கலிப்பா என்ப. இதனது வேறுபாடும் காண்க.

பகுதி - பரத்தையில் பிரிதல். துறை - முகமலர்ச்சி கூறல். அலங்காரம் - அற்புத உவமை. ஆற்று-உவம உருபு.)

---

1. ஒளிதிகழ். 2. புரைதீர். 3. தண்மலர் புரைதகைத் தாகும். 4. உவகைவாள் முகமே.

தலைவன் பரத்தையிற் பிரிந்துறையும் போது, தலைவி செவ்வாடையும் செம்மலரும் சூட்டித் தோழியை யனுப்பினாள். தலைவியின் குறிப்பறிந்து தலைமகன் தலைவியின் பால் மீண்டான். அவன் வருகை கண்டு தலைவி மகிழ்ந்ததாக அமைந்தமையால், இது முகமலர்ச்சி கூறல் என்னும் துறையாயிற்று.

உற்பலம் அமுது உயிர்த்தலும் பொருநையில் தாமரை மலர்தலும் அற்புதங்கள் ஆகும். அந்த அற்புதங்களைத் தலைவியின் கண்ணுக்கும் முகத்துக்கும் உவமையாக்கியதால் இஃது அற்புத உவமை ஆனது.

கடைப்பிடியார் - சேடிமார். வயின் - இடத்தில். திருநாண் பொறித்த செவ்வணி - அழகிய நாணால் கட்டப்பட்ட செவ்வாடை முதலியன. தற்பொதிவாள் - பரத்தை. புனலூரன் - தலைவன். இல்புகலால் - தலைவியிடம் வந்தமையால். நோக்கம் - கண். உற்பலம் - கருநெய்தல் மலர். உயிர்த்தல் - சொரிதல். அற்று - போன்று. புத்தேள் - தெய்விகமான. தினகரோதயம் - சூரிய உதயம். மரை - தாமரை.

தலைவி விடுத்த சேடியின் செவ்வணி கண்டு, தலைவனானவன் பரத்தை இல் துறந்து தலைவியிடத்து வந்தான். அது கண்ட தலைவியின் கண்கள் இன்பக் கண்ணீர் சொரிந்தன. கருநெய்தல் மலர் அமுது சொரிந்தது போல் அக்காட்சி இருந்தது. அவள் முகம் பொருநை நதியிலே சூரிய உதயத்து மலர்ந்த தாமரை மலர் போல் விளங்கியது என்பது இப்பாடலின் பொருட் சுருக்கம்.

இமிழ்திரை சூர் கலி அழுவத்து இரும்புனல்மீ
மிசைபொடிக்கும்
குமிழ்புரைபுன் ஸிலைப்புல்வுக் குரம்பையின்வீ
வினைஓர்ந்தும்

கடிகைதாம் கழிதோறும் கழிபெருங்கா மருசெவ்வி
ஒடிகையாய் உயங்கிழைமூப்பு உடன்உறல்நூல்
முகத்துஉணர்ந்தும்

அமிழ்தினும்வான் சுவைபயப்ப அருள்மாறன்
மயர்வறக்கூர்
தமிழ்மறையின் துறைமூழ்கித் தத்துவந்தான்
தலைப்பெற்றே
ஒருதலைபற்ப றினர்க்குஇகல்செய் குனர்உணர்வின்
நிலைநீத்த
பொருள்வேட்ட கெழுதகைமைப் புரவலநின்
போக்குறீஇ
மருள்வேட்டாள் திறந்துயான் வடிப்பனபற் பலஅம்ம

தாளாண்மை அகத்துறீஇத் தகவிலர்க்கும் தக்கார்க்கும்
வேளாண்மை செய்ததற்பின் வெள்வளைதாம்
இறைதுறப்பத்
தொய்யில்தான் அணைமென்தோள் துணைதுறப்பப்
புதுமதிபோல்
மையில்வாள் முகம்மாழ்கி மணிமாமை யதுதுறப்பக்

கறைகெழுவேல் எனமிளிர்ந்து கள்ளுயிர்க்கும் கழுநீரின்
உறைமலிநோய் உழந்துஇருகண் ஒருங்குதுயில்
வினைதுறப்ப
நன்னுதலார்க்கு அணியாய நலம்புரிநாண்
உளம்துறப்ப
இன்னுயிர்தன் நிலைதுறக்கும் இவைமன்ற
இன்னும்கேள்!

அஃதன்றால்

புகழும் வாய்மையும் பொச்சாப்பு இன்மையும்
நிகழும் தோற்றமும் நின்னிலை துறப்பக்
கற்கடம் கடந்து சேறற்கு
உற்றனொன் றால்உறு வனஉலப் பிலவே. 99

(இது தன்தளைத்தாகித் தரவு இரட்டித்துத் தரவு தனிச் சொல் சுரிதகம் என்னும் மூன்று உறுப்பால் வந்தது. இதனை யாப்பருங்கலக்காரிகையார் தரவிணைக் கொச்சகக் கலிப்பா என்பர். இதனது வேறுபாடும் காண்க. பகுதி - பொருள் வயிற் பிரிதல். துறை - செலவு அழுங்குவித்தல். அலங் காரம் - இதனுள் பலவயினும் உவமை வந்ததாயினும் முன்ன விலக்கினுள் தலைமை விலக்கு.)

ஒரு பொருளைக் குறிப்பினால் விலக்கின் அது முன்ன விலக்கு அணி என்பது இலக்கணம். தலைமை விலக்கு என்பது தன்பால் தலைமை தோன்றக் கூறி விலக்குவது.

தலைமகன் பொருள் தேடும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணுகையில், அவன் பிரிவால் தலைவி இன்னுயிர் துறக்க நேரும் என்று கூறி அவன் செலவைத் தாமதப்படுத்துவதாக அமைந்த பாடல் இது. அழுங்கு வித்தல் - தாமதமுறச் செய்தல்.

ஆர்கலி - கடல். மீமிசை - மேலே. பொடித்தல் - எழுதல். குமிழ் - நீர்க்குமிழி. புலவு - புலைநாற்றம். குரம்பை - உடம்பு. விவினை - அழிவை. ஓர்ந்து - எண்ணிப் பார்த்து. கடிகை - நாழிகை. செவ்வி - இளமை. ஒடிகை - அழிதல். மூப்பு உடன் உறல் - உடனே மூப்பு வருதல். நால் முகம் - ஆகமங்கள். மாறன் - நம்மாழ்வார். தலைப் பெற்று - அடைந்து. ஒருதலை - உறுதியாக. இகல்செய் குனர் - பகைப்பவர். உணர்வின் - உணர்வினைப்போல். நிலைநீத்த - நிலை நில்லாத. போக்குறீஇ - செலவை அறிந்து. வடிப்பன - சொல்லுவன. மருன்வேட்டான் திறத்து - தலைவியைப் பற்றி.

தாளாண்மை - முயற்சி. அகத்து உறீஇ - மனத்தில் கொண்டு. வளை - வளையல். இறை - முன்கை. தொய்யில் - சாந்தினால் உடலில் எழுதும் கோலம். தோள்துணை - இரு தோள்கள். மாமை - நிறம். கழுநீரின் - ஆம்பல்மலர் போல. உறை - துளி. துயில்வினை - துயிலும் செயல். உயிர் நிலை துறத்தல் - உயிர்நீங்குதல். பொச்சாப்பு - மறதி. கற்கடம் - கல்லாலாகிய வழி. உறுவன - வரும் துன்பம். உலப்பில - அநேகமாகும்.

''நீரில் எழும் குமிழிபோல் ஆக்கை அழியும் என்பதை உணர்ந்தும், நாழிகை ஒவ்வொன்றும் கழியுந்தோறும் இளமைநீங்கி மூப்பு வரும் என்பதை நூல்களால் உணர்ந்தும், நம்மாழ்வாரின் திருவாய்மொழியைக் கற்று நுட்பங்கள் தேர்ந்து உறுதியாகப் பற்றினவர்க்குப் பகை செய்வார் உணர்வுபோல் நிலை நில்லாத பொருள் விரும்பிய தலைவனே! நின் பிரிவால் வருந்தும் தலைவியைப் பற்றி யான் கூறுவன பல உண்டு.

''வெள்வளை முன்கையைத் துறப்பவும் தோள் தொய்யிலைத் துறப்பவும் முகம் நிறம் துறப்பவும் கண்கள் துயில் துறப்பவும் உளம் நாணம் துறப்பவும் உயிரானது தன்னிலை துறக்கும். அது மட்டுமன்று. உன்தோற்றமும் நிலை துறப்ப நீ சுரவழியிலே செல்லத் தொடங்கிய செலவு ஒன்றினால் விளையும் துன்பங்கள் கணக்கில்லாதனவாகும்'' என்பது பொருட் சுருக்கம்.

தாதிவர் தண்துழாய்
 தளைஅவிழ் வகுளமதாய்
மேதகு புயம்நான்கும்
 விழுமியதோர் இரண்டாகி

மாதவன்என்று அருமறையும்
வாழ்த்தும் திருநாமம்
பூதலத்தோர் மாறன்எனப்
புகழ்க்குருகூர் அமர்ந்துளாய்!

(இது நான்கடித் தரவு)

ஈசன்என்றும் நீஎன்றும்
எண்ணுதற்கோர் பாவினையான்
நீசன்நிறை ஒன்றுமிலேன்
என்றென்று நீநிகழ்த்தும்
மோசமதிங் கென்என்று
அறியேன் மொழிந்தருளே!

மத்துறுவெண் ணெய்க்காக
மாதவன்நீ கட்டுண்டது
எத்திறம்என்று ஆறுதிங்கள்
எம்பிரான் சோகமுறும்
அத்திறமும் ஏதுஎன்று
அறியேன் அருளுதியே!

தன்னைத்தான் பாடிச்
சடகோபன் ஆக்கியநீ
என்னைப்பாடு என்னைப்பாடு
என்றுஇறைவர் நிற்பஅவண்
பின்னைத்தான் நீயிருந்து
பாடியதுஎன் பேசுகவே!

(இவை மூன்றும் மூன்றடித் தாழிசைகள்)

அஃதான்று

(தனிச் சொல்)

நற்றாய் முலைப்பால் நயவா விரதம்
கற்றாய் அதனால் கடவுள்அன்று உயிர்என
நின்னிலை நினைவரிது எமக்கால்
உன்னிலை நீயே உணர்வது கடனே.

(இது நான்கடி நேரிசையாசிரியச் சுரிதகம்)

(இது நான்கு உறுப்பாய் வந்ததாயினும் தேவபாணியாய் வருதலின் முதனிலை ஒத்தாழிசை ஆகாது,

"ஏனைஒன்றே தேவர்ப்பரா அ முன்னிலைக்கண்ணே"
(தொல். செய். 138)

என்பதனால் தேவர்ப் பரசயிற்றேனும் எண்ணிடையிட்டுச் சின்னம் குன்றலின் வண்ணகமும் ஆகாது. ஆதலான் இது எண்ணிடையிட்டுச் சின்னம் குன்றிய கொச்சக ஒருபோகு ஆயிற்று.

சீர்வகைக் கலிக்கு.

"விராய தளையும் ஒருஉநிலை இன்றே"
(தொல். செய். 61)

என்பதனால் தளைவிரவப்பெறும்.

"கலித்தளை அடிவயின் நேரீற்று இயற்சீர்
நிலைக்குரித் தன்றே"
(தொல். செய். 23)

என்பதனால் சீர்வகைக்கலியடியாதலின் வாழ்த்தும் என்னும் நேரீற்று இயற்சீர் வந்தது.

திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சந்தயத்துள் சுத்த சந்தயம்; நிச்சய கொர்ப்பம் எனினும் ஆம். "ஆறறி அந்தணர்" (கலி. 1) என்னும் கலியும் இது.)

சந்தயம் என்பது ஐய அணி எனப்படும். இந்த அணி இதே ஆசிரியர் எழுதிய மாறன் அலங்காரத்தில் உள்ளது. ஒரு பொருளை இதுவோ அதுவோ என்று ஐயமுறுவது ஐயஅணி. இங்கு நம்மாழ்வாரை நோக்கி, "நீயும் திருமாலும் வேறல்ல என்று பல பாடல்களால் விளக்கியுள்ளாய். ஆயினும் "நீசனேன்நிறை ஒன்றுமிலேன்" போன்ற சில பாடல்களால் வேறு என்று பொருள்படப் பேசியுள்ளாய்! இது என்ன வஞ்சனை! இவ்வாறு வஞ்சனை செய்தால் நீ திருமாலா அல்லது நீ எம்மைப்போல் உயிர்தானா என்று வேறுபடுத்திக் காண்பது எமக்கு அரிது. நின்னிலையை நீயே உணர்தல் கடன்" என்று ஐயுற்று வினவுவதாக அமைந்தமை நோக்குக.

தாது - மகரந்தம். தளை - மொட்டு. வகுளம் - மகிழ மலர். விழுமியது - சிறந்தது. பாவினை - பாடலை. மோசம் - வஞ்சனை; ஏமாற்று. இறைவர் - நூற்றெட்டுத் திருப்பதிப் பெருமாள்கள். நயவா - விரும்பாத. கற்றாய் - கைக்கொண்டாய்.

"சேமம் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசனோ நாரணனோ—தாமம்
துளவோ வகுளமோ தோள்இரண்டோ நான்கும்
உளவோ பெருமான் உனக்கு"

என்று சங்கப் புலவர்கள் உன்னையே திருமாலாகக் குறிப்பிட்டுள்ளனர். இக்கருத்து உன் பாடல்களாலும் வலியுறுகின்றது. அப்படியிருக்க "நீசனேன் நிறை ஒன்றுமிலேன்" என்பன போன்ற பாடல்களில் நீவேறு, மால்வேறு என்று கருதும்படி பேசியுள்ளாயே! இஃது உண்மையை மறைக்கும் வஞ்சனையல்லவா?

கண்ணன் வெண்ணெய் திருடிக் கட்டுண்ட எளிமையைப் பாடும்போது, அந்த எளிமைச் செயலில் ஈடுபட்டு ஆறு

மாதம் உணர்விழந்து கிடந்தாயே! நீயே திருமால் ஆனால் இவ்வாறு ஏன் நிகழ்ந்தது? இதுவும் வஞ்சனை அல்லவா?

தன்னையே பாடியவன் சடகோபன் என்று கூறுவர். அதாவது நீயே திருமால். நீ பாடியவை திருமாலைப் பற்றியன. திருமால் திருமாலையே பாடிக் கொண்டான் என்ற பொருள்படப் பல பாடல்கள் கூறியுள்ளாய்! அப்படியிருக்கப் பல திவ்விய தேசத்துப் பெருமாள்களும் உன்னிடம் வந்து என்னைப்பாடு என்னைப்பாடு என்று கேட்டுநிற்க அவர்களைப் பாடினாயே! அப்படியானால் நீ வேறு மால் வேறு என்று எண்ணத் தோன்றுகின்றதே! எங்களை இப்படி ஏமாற்றுவது ஏன்? தாய்ப்பால் உண்ணாவிரதம் கைக்கொண்டவனே! நீ திருமாலா அல்லது எம்மைப் போல் ஓர் உயிர்தானா என்று எம்மால் நினைத்துப்பார்க்க இயலாது. உன் நிலையை நீயே உணர்வது உனக்குக் கடன்'' என்பது பொருட் சுருக்கம்.

அரவணைமேல் திரைத்திருப்பாற்
கடற்குடபால் அறிதுயில்கூர்
பரன்நிலவும் திருவுந்திப்
பனிமலர்ப்பொற் பொகுட்டுஉயிர்த்த
அலகிலவாம் பகிரண்டம்
அவைஅனைத்தும் அகத்துஅடக்கி
இலகும்ஒரு தனிப்பெரும்பா
ழினையும்அகத் தடக்கியவாம்
விரசைஎனும் திருநதிக்குஅப்
புறத்தாய விழுமியஎன்று
உரைபரசும் பரந்தாமத்து
உடனுறைவோர் இருந்தெய்தும்

சுகம்இவண் இன்று அணைமென்தோள்
துயில்முகத்துஎய் தினனாக
அகனமர்ந்துஉம் மையில்தொடர்ந்த
அமைதியவாய் உயிர்எனலாம்
தொடர்புடைய தமர்பிரியத்
தொழிலியற்றி யதுஎன்றோ
மடலவிழ்வண் பொழிற்சிறையும்
மறைதெருளா வகைஅமைத்துத்
திருவுருவம் பருவநலன்
சிறந்தகுல னொடும்ஒன்றென்று
ஒருதலையா கவும்அமைத்தது
ஒருங்கிவைஎன் துணைநெஞ்சான்
முயற்சியதொன் றிலனாகும்
முறைமையிற்கந் திருவமணம்
இயற்றியதாங் இயல்தமிழ்தேர்
மகிழ்மாறன் எழில்வரைஇம்
மடவர லினைமகிழ்ந்
தளித்த
கடவுளை நினைதொறும்
களிக்கும்என் மனன்தானே. 101

(இது தன் தளையால் (கலித்தளையால்) பதினாறு அடித்தாய் ஈற்றயலும் ஈறும் முச்சீரும் நாற்சீரும் ஆகி ஆசிரியத்தளையான் வந்து அடக்கியல் இன்றி அடிமிர்ந்த ஒழுகிய கொச்சக ஒருபோகு. இவ்வனம் கலியடியாய்க் கூறாக்கால், நேரிசை யாசிரியத்தோடு இதனிடை வேற்றுமை இன்றாம் என உணர்க! ''அகன் ஞாலம்'' என்னும் செய்தற்

கலியும் அடக்கியலின்றி அடிநிமிர்ந்தொழுகிய கொச்சக ஒரு போகின் பகுதியாய்த் தனிச் சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகமற்று வந்தது.

''எழுசீர் இறுதி ஆசிரியம் கலியே''

''வெண்பா இயலினும் பண்புற முடியும்''

''ஒருபான் சிறுமை இரட்டியதன் உயர்பே''
(தொல். செய். 76, 77, 151)

என்பதனானும் உணர்க.

இக்கருத்தறியார் இதனை வெண்கலி என்ப. வெண்கலி யாமாறு முன்னர்க் காட்டுதும். அன்றியும் ''அரிதாய வறன் எய்தி'' என்னும் கலிப்பாவினுள் (பாலைக்கலி. 10) ஈற்றயலடி ''பல்லியும் பாங்கொத் திசைத்தன'' என முச்சீரான் வந்தது. ''மணிநிற மலர்ப் பொய்கை'' என்னும் மருதக்கலியுள் ''இல்லின் எழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப் பாணன் புகுதராக் கால்'' என வெண்பா இயலானும் பண்புற வந்த வாறு காண்க!

இனி

''யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது''
(தொல். செய். 149

என்பது யாப்பின் வேறுபடுவனவும் பொருளின் வேறு படுவனவும் என இரண்டாம். அவற்றுள் யாப்பின் வேறு படுவதாவது மேற்சொல்லியவாறும் இனி வருகின்றவாறும் இன்றி யாப்பிலக்கணத்தின் வேறுபடுதலாம். பொருளின் வேறுபடுதலாவது கலியுள் ஒத்தாழிசைக்கு ஓதப்பட்ட கடவுள் வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப் பொருளாக வருதல் எனக் கொள்க!

எனவே வண்ணக ஒத்தாழிசைக்கு உறுப்பாகியவற்றுள் ஒன்றும் இரண்டும் குறைந்து வருவன கொச்சக ஒருபோகு எனப் பெயர்பெறும் எனக் கொள்க! இவ்வாறு வரும் கொச்ச

கங்களை ஒரு வரையறைப்படுத்து நான்கு பாவினும் இனம் சேர்த்துப் பண்ணிற்குத் திறம்போலத் தாழிசை துறை விருத்தமெனப் பன்னிரு பகுதியாகக் கூறுவர். அவற்றுள் வெண்பாவிற்கும் ஆசிரியத்திற்கும் இனம் முன்னர்க் கூறினாம். ஒழிந்த இக்கலி முதலிய பா இரண்டிற்கும் இனம் பின்னர்க் காட்டுதும்.

பகுதி - இயற்கை. துறை - தெய்வத்தை மகிழ்தல்.)

இயற்கையில் தலைவியைக் கூடிய தலைவன் அக்கூட்டத்துக்கு உதவிய தெய்வத்தை மகிழ்ந்து போற்றுவதாக அமைந்த துறை தெய்வத்தை மகிழ்தல்.

குடபால் - மேற்கு. பொகுட்டு - தாமரையின் நடுவிடம்; ஆகுபெயராகப் பிரமனை உணர்த்தியது. உயிர்த்த-படைத்த. அலகில - கணக்கற்ற. பெரும்பாழ் - மூலப்பிரகிருதி. விரசை வைகுந்தத்தின் எல்லையாகவுள்ள நதி. பரந்தாமம் - வைகுந்தம். உடனுறைவோர் - நித்திய சூரிகள். தோள் துயில்முகம் - கலவி. உம்மையில் - சென்ற பிறப்பில் உயிரெனவாம் தொடர்புடையதமர் - தோழிமார். பொழிற் சிறை - பொழிலிடம். மறைதெருளாவகை - இரகசியம் வெளிப்படாதபடி. நலன் - குணம்.

''தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணான் உலகு'' என்ற குறளின்படி, பரம பதத்தில் நித்திய சூரிகள் எய்தும் இன்பத்தை இன்று இங்கேயே இவளது தோள்துயில் முகத்து எய்தினேன். இது முற்பிறவியில் தொடர்ந்த நல்வினையே யாகும். தோழியர் பிரிந்துபோக இவள் மலர் பறித்துத் தனித்துள்ளாள் என்று தெரிந்தோ பொழிலிடமும் இரகசியம் வெளிப்படாதபடி மறைவிடமாக அமைந்தது.

''உரு, பருவம், குணம், குலம் ஆகிய இவையும் ஒப்பாக அமைந்தன. முயற்சி ஏதும் இன்றிக் கந்திருவமணம் இயற்று

வதற்கு இம்மடவரலை அளித்த கடவுளை நினையுந்தோறும் என்மனம் களிக்கின்றது'' என்பது இப்பாடலின் பொருள்.

புத்தேளிர் நிரப்பிகப்பான்
பொருதிரைப்பாற் கடல்கடைந்து
மெய்த்தேவர் பெருமானாம்
வேங்கடத்துஎம் கண்ணபிரான்
புரந்துஅருள்நல் மருந்திறுத்த
புலந்துவரத் துறந்திழைத்த
வரம்தருபெண் அமிர்தாம்இம்
மடவரல்மென் தோள்துறந்தே
இல்லறத்தின் தொடர்புடையோர்க்கு
இன்பமும்ஆ துலர்க்கருத்தும்
நல்லறத்தின் தொடர்ப்பாடும்
நனிதரும்செம் பொருள்என்றே

ஆய்ந்ததனால்

ஒருதலைபெற் றனனாகி
உருப்பவிர்வெங் கடத்திடைபோய்
வருபொழுதில் பெருவறம்கூர்
மணிநாவின் மம்மர்நோய்
அருள்மடந்தை இலவிதழ்த்தெள்
ளமிர்தருந்தத் துறந்தனவே

அஃதான்று

வேல்நுதிவன்[1] பரற்கடத்துஆ
    ரிடைவேனில் வெயிற்குஉமையாள்
கோன்நுதற்கண் தழல்குளித்த
    மதன்எனமெய் கூர்ந்தநோய்[2]
பானல்அங்கலை கிளிமொழிமெய்ப்
    பரிசத்தால் துறந்தனவே
அஃதான்று

உருவிலா உருவிற்றாம்
    உருளிலா மசரதத்தைப்
பருகுவான் புனலெனச்செல்
    பாலைசார்ந்து உளம்கொதிநோய்
திருமகளோடு உறும்இன்பத்[3]
    திரையாடத் துறந்தனவே
அஃதான்று

வரையிரு மருங்கினும் மரீஇய வெவ்விடம்
புரைசுரத்து ஆரதர்[4] புக்குயிர்க்கு உறுநோய்
அம்மென் சாயல் அணிமயில் பைம்பூண்
கொம்மை வெம்முலைக் குன்றிடை முயங்கலின்
நனவு கனவா நயந்துழி
நினைகலாநீ ளிடைநீத் தனவே. 102

(இது, தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம் என்னும் நான்கு உறுப்பினோடும் தாழிசைதோறும் தனிச்சொல் பெற்று நேரிசை ஒத்தாழிசையில் சிறிது யாப்பின் வேறு

---

1. வேல்நுதல்வன். 2. கூர்த்தநோய்.
3. திருமகளால் பெறுமின்பத். 4. ஆரதர்ப்.

படுதலாகும், ஒருசார் ஆசிரியர் சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா என்ப. இதுவும் எண்ணிடையிட்டுச் சின்னம் குன்றிய கொச்சக ஒரு போகு.

பகுதி - பொருள்வயிற் பிரிதல். துறை - உள்மகிழ்ந் துரைத்தல்.)

பொருள்தேடச் சென்ற தலைவன் திரும்பி வந்து தலைவியுடன் இன்பம் நினைத்துக் கூறுவதாக அமைந்தமை யால் உள்மகிழ்ந்துரைத்தல் துறையானது.

புத்தேளிர் - தேவர்கள். நிரப்பு இகப்பான் - வறுமை நீரும் பொருட்டு. பெருமான் ஆம் - தலைவன் ஆகிய. நல் மருந்து - அமுதம். இறுத்த புலம்துவர - தங்கியுள்ள பொன் னுலகம் வெறுக்க. துறந்து - அமுதினைத் துறந்து. இழைத்த வரம் - செய்ததவம். தோள்துறந்து - இன்பம் வெறுத்து. செம்பொருள் - செல்வம். ஒருதலை - உறுதிப்பாடு. உருப்பு அவிர் - வெப்பம் பொருந்திய. வெங்கடம் - பாலைவழி. வறம் - வறட்சி. நாவின்நோய் - தாகம். இலவு இதழ் இலவமலர் போன்ற இதழ்.

வேல் நுதி வன் பரல்கடம்-வேலின் நுனிபோன்ற வலிய பரற் கற்களையுடைய பாலைவழி. உமையாள்கோன்-சிவன். தழல் - நெருப்பு. மதன்என - மன்மதன்போல. மெய் கூர்ந்த - உடலில் மிக்க. பானல் - கருங்குவளை மலர். கிளி மொழி - தலைவி. பரிசம் - கலவி.

உருவிலா உருவிற்று - உருவமில்லா திருந்தும் உருவம் போல் தோன்றுகின்ற. உருளிலா மசரதம் - சக்கரமில்லாத பேய்த்தேர்.

பருகுவான் புனல் - அருந்துகின்ற சிறந்த நீர். கொதி நோய் - கொதிக்கின்ற துன்பம். இன்பத்திரை-இன்பக் கடல். ஆட - மூழ்குவதால்.

வரை இருமருங்கினும் மரீய - மலையின் இருபாலும் பொருந்திய. புரை - போன்ற. சுரத்து ஆரதர் - பாலையின் அரியவழி. மயில் - தலைவி. நயந்துழி - விரும்பியவிடத்து. நீவிடை - நெடுந்தொலைவு.

தேவர்களின் வறுமைதீரக் கடல் கடைந்து கண்ண பிரான் அருளிய அமுதினை வெறுத்து, தேவர்கள் புரிந்த தவத்தால் வந்த பெண் அமுது ஆகிய தலைவியின் கலவி துறந்து, இல்லறத்தார்க்கு இன்பமும் வறியவர்க்குத் தருகின்ற நல்லறத்தின் தொடர்பும் தருவது கைப்பொருள் என்று கருதி, பாலைவழியில் வரும்பொழுது வறட்சிமிக்க நாவின்தாகம் இம்மடந்தையின் இதழ் அமுது அருந்துவதால் தீர்ந்தது.

சிவன் நெற்றிக்கண் நெருப்பில் மூழ்கித் துன்புற்ற மன்மதன்போல், பரற்காட்டிலே உடல்வருந்திய துன்ப மானது, இந்தக் கிளி மொழியாளின் கலவியால் தீர்ந்தது. 'பேய்த்தேரை நீர் என்று கருதிச் செல்கின்ற பாலையைச் சேர்ந்து, உள்ளம் கொதித்த துன்பம் இவளோடு சேரும் இன்பக் கடலில் மூழ்கியதால் தீர்ந்தது.

பாலையில் புகுந்து உயிர்க்கு உற்ற துன்பம் இவளின் முலைக் குன்றுகளில் முயங்குவதால் நெடுந்தூரம் சென்று ஒழிந்தது என்பது பாடலின் சாரம்.

மாதர்வாண் முகத்துஇருள் தீர்
மதிப்பிளவொத்து இமிழ்இசைய
ஓதநீர்ப் படுவிடம்துற்று
உரவிடையார்க்கு இடர் இழைத்த
மேதையான் இடம்தழீஇ
மேம்படுவிற் றுணைசெருத்த
திலகவா ணுதல்புருவத்[1]
திருமகள்கா மூறும்பெருமான்

அலகிலாக் குணங்களின் ஆழ்ந்து
அருமறைவண் தமிழ்கூர்ந்த
தெண்திரைத்தண் துறைப்பொருநைத்
திருநாடன் திமிரவரி
வண்டுஇரைக்கும் மகிழ்மாலை
மணிமார்பன் துடரிவாய்.

(இதுதரவு)

குறுந்துளைப்பற் பணிஉமிழ்ந்த
குருமணிகள் இருள்துரீஇ
உறும்பகல்போன்று அழலினும்மான்
ஒளிவிடும்நீள் நிலையவால்

புறக்காழ்வன் பணைஉகுத்த
புதுமணிமா தவன்புகழ்போல்
நிறக்கார்வெண் மதியினும்நீடு
இருள்துரத்தும் நிலையவால்.

கொண்டலினூங்கு இடிஎனவே
கோதையில்பே துறக்குளிறும்
தொண்டகத்தின் ஒலியடங்காத்
துயர்இயற்றும் நிலையவால்

---

1. செவ்வாய் என்று பிரதியில் உள்ளது. புருவம் என்று இருப்பின் விற்றுணை செகுத்து என்பதனோடு இயையும். ஆதலால் புருவம் என்று பாடம் கொள்ளப்பட்டது.

ஆளிஎனப் பொறிவரிய
அடுபுலியில் தெறும்திறங்கூர்
ஞாளியின்வாய்க் குரைப்புடயிர்க்கு
நடுக்குஉதவும் நிலையவால்

நற்றாயர் முகத்துஉபய
நமன்பொருவும் உருவிற்றாய்
வெற்றாலத் தினும்கொடிதாம்
விழிதுஞ்சா நிலையவால்

ஊர்துஞ்சா துஞ்சினுமோ
ஒருசிறைவாழ்ந் திருந்தஅய
லார்துஞ்சார் நீளிடைவாழ்
பவர்துஞ்சி எவன்மன்னோ
(இவை ஆறும் ஈரடித் தாழிசை)

எனவாங்கு

(இது தனிச்சொல்)

கங்குல் இன்னணம் கழியா நின்றது
திங்களஞ் சுடரினிச் சேணுறல் உளதால்
இன்னுயிர்க் கேள்வர் எய்தார்என்
பொன்னிறப் பைம்பூண் புணர்முலைக் குவட்டே. 103
(இது சுரிதகம்)

(ஏழடித் தரவும் ஈரடித் தாழிசை ஆறும் தனிச் சொல்லும் நேரிசை ஆசிரியத்தால் இற்ற சுரிதகமும் பெற்று ஒத்தாழிசையிற் சிறிது வேறுபட்ட இதனையும் அவ்வாசிரியர் பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா என்ப. இவற்றது பேதங் களும் கண்டு கொள்க.

பகுதி - இரவுக்குறி(யிடையீடு). துறை - காப்புச் சிறை மிக்க கையறுகிளவி. அலங்காரம் ஒத்தது வென்றதென்னும் வாய்பாட்டால் ஒரு தொடர்பினுள் வந்த உவமை.)

அழலைக் குருமணியும் மதியினை மூங்கில் முத்தும் இடியைத் தொண்டகப் பறையும் புலியை நாயும் ஆலத்தை விழியும் ஒப்பாயிருந்தே வென்றனவாகப் புகன்றமையால் இது ஒத்தது வென்றது என்னும் உவமையணியாதல் காண்க.

களவொழுக்கத்தை மேற்கொண்ட தலைவன் இரவில் வந்து தலைவியைக் கலந்து மகிழ்ந்து கொண்டிருந்தான். இந் நிலையில் அவன் மறைந்துவர இயலாமல், தாயும் நாயும் ஊரும் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், கூகை குழறுதல், கோழி குரல்காட்டுதல் முதலிய இடையூறு கள் நேர்ந்தமை கண்ட தலைவி வருந்துவதாக அமைந்தமை யால், இது காப்புச்சிறைமிக்க கையறு கிளவித் துறையானது.

மாதர் - அழகிய. மதிப்பிளவு - பிறைச்சந்திரன். இமிழ் இசைய - ஒலிக்கின்ற இசையையுடைய. ஓதம் - கடல். படுவிடம் - உண்டான நஞ்சு. துற்று - உண்டு. உரவிடை யார்க்கு இடர் இழைத்த மேதையான் - வலிய உரவிடை யார்க்குத் துன்பம் செய்த சிவன். இடம்தழீஇ - இடப்பாகத் திலே பொருந்தியிருந்து. திருமகள் காமுறும் பெருமான்- திருமகளால் விரும்பப்படும் திருமால்.

அலகிலா - அளவில்லாத. வண்தமிழ் - திருவாய்மொழி. பொருநைத் திருநாடன் - நம்மாழ்வார். திமிரம்-கருநிறம். விற்றுணை - இருவிற்கள்; (புருவத்துக்கு உவமை.) துடரி- ஒருமலை. குறுந்துளைப்பல் - குறிய துவாரமுடைய பல்லைக் கொண்ட. பணி - பாம்பு. உமிழ்ந்த-கக்கிய. துரீஇ-துரத்தி. அழலினும் - நெருப்பைக் காட்டிலும். நிலைய - நிலையை யுடையன.

புறக்காழ் - வெளிப்பக்கம் வயிரமுடைய, பணை - மூங்கில். உகுத்த - சொரிந்த. மதியினும் - சந்திரனைக்

காட்டிலும். கொண்டலினூங்கு இடி - மேகத்தினிடமாகிய இடி. கோதையில் - பூதத்தைக் காட்டிலும். பேதுற - மதிமயங்கும்படி. குளிறுதல் - ஒலித்தல். தொண்டகம் - குறிஞ்சிப் பறை.

ஆளி - சிங்கம். பொறிவரிய - பொறித்த வரிகளை யுடைய. புலியில் - புலியைக் காட்டிலும். ஞாளி - நாய். நடுக்கு - நடுக்கம்.

உபயநமன் - இருநமன்கள். பொருவும் - போன்ற. உருவிற்றாய் - உருவமுடையதாய். வெற்றாலத்தினும் - வெறிய நஞ்சைக் காட்டிலும். ஒருசிறை - ஒருபுறம். நீனிடை வாழ்பவர் - தொலைவில் வாழ்பவர்.

கங்குல் - இரவு. சேண் - வானம். புணர்முலைக்குவட்டு - நெருங்கிய மலைபோன்ற முலைகளில்.

இமிழ்இசைய ஒதநீர்ப் படுவிடம்துற்று உரவிடையார்க்கு இடர்இழைத்த மேதையான் இடம்தழீஇ மேம்படு பெருமான் என்றும். மாதர்வான் முகத்துஇருள்நீர் மதிப்பினவொத்து வில்துணை செருத்த திலகவாணுதல் செவ்வாய்த் திருமகள் காமுறும் பெருமான் என்றும் கூட்டிப் பொருள் காண்க! ஒலிக்கின்ற கடல்நீரில் உண்டானவிடம் உண்டு பகைவர்க்குத் துன்பம் செய்த சிவபெருமானுக்கு இடப்பாகத்தில் பொருந்தி மேம்பட்ட பெருமான் என்பதும், வான்முகமும் மதிப்பினவும் ஒத்த திலகவாணுதலும் வில்துணை செருத்த புருவமும் உடைய திருமகள் விரும்பிய பெருமான் என்பதும் பொருள்.

திருமாலின் குணக்கடலில் ஆழ்ந்து வண்தமிழ் வார்த்த நம்மாழ்வாருக்குரிய துடரிமலையிடத்து.

குறுந்துளையுடைய பல்கொண்ட பாம்பு உமிழ்ந்த மணி கள் இருளைத் துரத்தி, பகல்போன்று நெருப்புப் போன்று ஒளி வீசுகின்றது.

மூங்கில் உகுத்த முத்துக்கள் சந்திரனைக் காட்டிலும் இருளைத் துரத்துகின்ற தன்மையுடையனவாக உள்ளன.

மேகத்தினிடமாயுள்ள இடிபோல (பூதத்தைக் காட்டிலும் முழக்கமிடுகின்ற) தொண்டகப்பறை ஒலி துயர் இயற்றுகின்றது. ஆளி, புலிகளைக் காட்டிலும் வலிபடைத்த நாய்களின் குரைப்பொலி உயிர்க்கு நடுக்கத்தைச் செய்கின்றது.

நல்ல தாயரின் நஞ்சினும் கொடிய விழிகள் தூங்கவில்லை. ஊர் தூங்கவில்லை. தூங்கினாலும் அருகிலுள்ள அயலார் தூங்க மாட்டார்கள். தூரத்தில் உள்ளவர் தூங்கியதால் யாது பயன்?

இப்படியே எண்ணி எண்ணி இரவு கழிகின்றது. சந்திரன் இனி வானத்தில் தோன்றிவிடுவான். இந்நிலையில் என் கேள்வர் என் முலைகளைத் தழுவ வரமாட்டாரே! என்பது திரண்டபொருள்.

மணிமல்கு திரைத்திருப்பாற்
கடல்நடுவண் வரியரவின்
அணிமல்கும் அமளியின்மேல்
அறிதுயில்கொள் வுழிமதமா
அழுங்கஞர்கூர்ந்து அழைத்தகுரற்கு
அலர்மடந்தை முகுளமுலைக்
கொழுங்களபத் தினில்அழுந்திக்
குழைதிருமார் பையும்நெகிழ்த்துப்
பூங்கழல்வன் னிலத்துறைப்பப்
பொலந்துகில்சுற் றவிழஇருள்
தூங்குநறுந் துணர்க்குஞ்சி
சுவல்புரளத் துணைத்தோளால்

தாங்குகலு முனைக்கொடுதாய்த்
தாய்இடங்கர் முரண்முருக்கித்
தேங்கமலத் தடம்புடைசூழ்
தென்னரங்கத்து அமர்ந்துளாய்.
(இது எட்டடித் தரவு)

ஆங்கும்

ஆன்ற கதிர்போன்று
அணுக்கள்தொறும் வீற்றிருத்தல்
சான்றவர்மெய்ஞ் ஞானம்
தரிப்ப உலகனைத்தும்
ஈன்றருள்நின் மாயை
யினைத்தெருளா தேஇறப்பை
தோன்றுவைநீ என்பதுஎவன் சொல்.

கற்பனசால் கோதமனார்
கற்படிவம் கைக்கொண்டாள்
சற்படிவம் ஆகியதைத்
தாள்தா மரைதருதாள்
பொற்படிவம் செய்ததுறார் போன்ம்.

முருந்தின் நகையாள்
முறுவலிப்பப் பூந்தாள்
இருந்தை யதனை
இளவரச தாக்கிப்
பொருந்த அளித்ததுஉறார் போன்ம்.

அஃதான்று

அணங்கொருத்தி தன்னை
அளித்தினை என்னால்
தணந்தவள்நிற் கென்னத்
தணந்தவளை நோக்கப்
புணர்ந்தவரே அல்லாதுஅப்
புண்ணியன்கா ணாதது
உணர்ந்திலரோ மூடம்உணர்ந் தோர்.

காத்தலால் உந்திக்
கமலமலர் அண்டமெலாம்
பூத்த திறம் அறியார் போன்ம்.
(இவை ஐந்தும் கொச்சகம்)

துறவற முதலிய துரிசற வருளினன்
அறமலி புதல்வனை அருளியது அறிகிலர்
திவமுறு சிறுவர்கள் இருவரோடு இருவரை
அவன்வயின் அடைவினில் அருளியது அறிகிலர்.

(இவையிரண்டும் அராகம்)
தாதையாதலும்
புதல்வன் ஆதலும்
பேதை யாதலும்
அறிவ னாதலும்
பெரிய னாதலும்
சிறிய னாதலும்
கரிய னாதலும்
செய்ய னாதலும்
(இவை எட்டும் சிற்றெண்)

உணர்கிலர்

(இது தனிச்சொல்)

கன்றொடு சிறுவர் கடைகயிறு அணிகுணில்
கொன்றையந் தீங்குழல் கொடுமலர் அயன்எழும்
அவ்வுழி அவைஅவை அவர்அவர் தெருளுற
எவ்வுரு வமும்ஆம் நினதுரு வழியாது
இருப்பவும் வியாத்திஎய் தியதுஉணர்ந் திலரால்
அற்புத மாயை அலகிலாக் கருணைய
சிற்குண நினைத்தெருட் டினரே.
எற்குஇறை எனமனன் மதித்ததுஇப் போதே. 104

(இது எட்டடித்தாய் தேரிசையாசிரியத்தான் இற்ற சுரிதகம்)

(இது அம்போதரங்க ஒரு போகு. என்னை?

"அம்போ தரங்கம் அறுபதிற் றடித்தே
செம்பால் வாரம் சிறுமைக்கு எல்லை"

(தொல். செய். 152)

என்பதனாலும்

"எருத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்
அடக்கியல் வாரமொடு அந்நிலைக் குரித்தே"

என்பதனாலும் உணர்க. (தொல். செய். 153)

இங்ஙனம் கூறப்பட்ட அம்போதரங்க ஒரு போகு தன்னுறுப்பெல்லாம் கூட்டி அறுபதிற்று அடித்தாகவும் அதன் செம்பால் முப்பதடித்தாகவும் அதன் வாரம் பதினைந்து அடித்தாகவும் சிற்றெல்லை பெறும் என்றவாறு. எனவே இது தலையள வம்போதரங்க ஒருபோகும் இடையள வம்போதரங்க ஒருபோகும் கடையள வம்போதரங்க ஒரு போகும் சிற்றெல்லை கூறியவாறாயிற்று. அவற்றுக்குப்

பேரெல்லை கூறுமாறென்னை யெனின், அறுபதிற்று அடித் தெனத் தலையளவிற்கு வேறு கூறியவழி அவ்வளவைப்பற்றி அதன் செம்பாலும் வாரமும் எனப் பாகம் செய்து வந்தான் ஆதலால் கடையளவிற்குச் சிற்றெல்லை பதினைந்தாயவழிப் பேரெல்லை முப்பதின்காறும் உயரும் எனவும், இடையள விற்குச் சிற்றெல்லை முப்பதாகிய வழிப் பேரெல்லை யறுபதின்காறும் உயரும் எனவும் தலையளவிற்குச் சிற்றெல்லை அறுபதாயவழிப் பேரெல்லை இரட்டி நூற்றிரு பதின்காறும் உயரும் எனவும் கொள்ள வைத்தான் என்பதாம்.

ஆதலால் இது நாற்பத்து நாலடியால் வந்தமையால் (இடை எல்லை) இடையளவம்போதரங்க ஒரு போகு. ஒழிந்தனவும் இவ்வாறே வரும், இவையெல்லாம் இக் காலத்து வீழ்ந்தன போலும்.

திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து,

மணி - முத்துக்கள். நடுவண் - நடுவில். அரவு - ஆதி சேடன். அமளி - படுக்கை. கொள்வுழி - கொண்டிருந்த போது. மதமா - யானை. அழுங்கு அஞர் - மிக்க துன்பம். முகுளம் - தாமரை மொட்டு. நெகிழ்ந்து - விலக்கி. கழல் - திருவடி. உறைப்ப - பதிய. பொலந்துகில்-பொன்னாடை. சுற்றவிழ - அவிழ்ந்து விழ குஞ்சி - கூந்தல். கவல்-பிடரி. கலுழன் - கருடவாகனம். கொடு - கையிற் பிடித்துக் கொண்டு. தாய்த்தாய் - தாவித்தாவி. இடங்கர்-முதலை. முரண்முருக்கி - பகை ஒழித்து. கதிர் - ஒளி. மெய்ஞ்ஞானம் தரிப்ப - மெய்யறிவால் அறியும்போது. தெருளாது - தெளி யாமல். இறப்பை - இறப்பாய். தோன்றுவை - பிறப்பாய்.

கற்பன - நூலறிவு. சால் - மிக்க. கற்படிவம் கைக் கொண்டாள் - அகலிகை. சற்படிவம் - நல்லுருவம். பொற் புருவம் - அழகிய வடிவம். உறார் - நினைக்கமாட்டார், போன்ம் - அசைச்சொல்,

முருந்தை நகையான் - அபிமன்னன் மனைவி உத்தரை.
இருந்தை - கரிக்கட்டை. இளவரசு - பரீட்சித்து.

தனைத்தவன் - பிரிந்தவன். மூடம் - மடமை.

கமலமலர் - பிரமன்.

திவம் - பரமபதம். இருவரோடு இருவர் - நால்வர்.

கொடு - கொண்டு. மலர் அயன் - பிரமன். தெருளுற - தெளிய. குனில் - குறுந்தடி. வியர்த்தி - வியாபித்தல்; எல்லாமாகப் பரவுதல். சிற்குணன் - தூய குணமுடையவன். தெருட்டினர் - தெளிந்தவர். எற்கு - எனக்கு. மனன்-மனம்.

பாற்கடலில் பாம்பணையில் பள்ளி கொண்டபோது ஓர் யானை அழைத்தலால் திருமகள் சலவிலையும் கைவிட்டு கால் தரையில் அழுந்தவும் உடை சுற்றவிழவும் கூந்தல் முடியாமல் பிடரில் புரளவும் வாகனமாகிய கருடன்மேல் ஏறாமல் அவனைக் கையில் பிடித்துக் கொண்டு தாவிச் சென்று முதலையாகிய பகையைஒழித்துத் தென்னரங்கத்தில் அமர்ந்தவனே!

நீ கதிர்ஒளி எங்கும் பரவியிருப்பதுபோன்று அணுக்கள் தொறும் வீற்றிருப்பதைச் சான்றோர்கள் தம் மெய்யறிவால் உணர்கின்றனர். ஆனால் சிலர் உலகமெலாம் படைத்த நின் மாயையைத் தெளிந்து கொள்ளாமல் உனக்குப் பிறப்பு இறப்பு உண்டு என்கின்றனரே? இது என்ன வியப்பு!

கௌதமன் மனைவியின் கல்லுருவம் நீங்க நின்தாள் தூளியினால் அழகிய வடிவம் தந்ததை நினையாதவர்களாய் உள்ளனரே!

உத்தரை மனமகிழ அவள் கருப்பமாகிய கரிக்கட்டையை இளவரசனாக்கியருளியதையும் அறியாமலுள்ளனரே!

காப்புத் தொழிலே அன்றி உன் உந்திக் கமலமானது உலகங்கள் அனைத்தையும் படைத்ததை அறியாமல் உள்ளனரே!

பரமபதம் அடைந்துவிட்ட வேதியன் புதல்வர் நால்வரை மீண்டும் கொணர்ந்து அவனிடம் கொடுத்ததை அறியாதவ ராய் உள்ளனரே!

தாதை - புதல்வன். பேதை- அறிவன். பெரியன்-சிறியன். கரியன் - செய்யன் இப்படி எதிர்மறைப் பொருள்களாகவும் நீயே இருப்பதை உணராதவராய் உள்ளனரே!

பிரமன் பசுக்கள், கன்றுகளுடன் ஆயர் சிறுவரை யெல்லாம் தன்னுலகில் மறைத்து வைத்தபோது, பசுக்கள், கன்றுகள், சிறுவர்கள் மட்டுமா! அவர்கள் வைத்திருந்த கடைசுயிறு, குறுந்தடி, வேய்ங்குழல் முதலிய எல்லாமாகி ஆயர்கள் ஐயுறாதபடி யிருந்தும் நின் ஆதியஞ்சோதி யுரு அழியாது இருந்தனையே! இவ்வாறு எங்கும் பரவி எல்லா மாகி இருப்பது நீயே என்று உணராதவராய் உள்ளனரே!

உன்னையே இறைவன் என்று தெளிந்தவரே எமக்கு இறைவராவார் என்று என்மனம் இப்போது உறுதி கொள் கின்றது.

என்பது பாடலின் சாரம்.

பொன்னெடுங்குன் றெனச்செறிந்து
புடைத்தெழுமென்[1] புளகமுலை
மின்னனலாம் நுண்ணிடைஅவ்
வேய்புரையும் துணைமென்தோள்[2]
குளிர்மதிபோன்று ஒளிர்வதனக்[3]
கோமளப்பூங் கொம்பன்னாள்
தளிர்புரைமெல் லடிச்சுவடும்
தளர்ந்தனவெய் யோன்என்றால்[4]

1. புடைபரந்த. 2. தடமென்தோள். 3. மிளிர்வதனக்
4. மன்னோ,

குடதிசைவான் கதிர்சுருக்கிக்
　　கொடித்தேரி னொடுமறைந்தான்.
அடல்புனைவே டுவர்என்றால்[5]
　　அற்றம்பார்த்து ஆறலைப்பர்.
பொன்புனைபூண் மணிமார்பின்
　　புரவலஇன்று இருவீரும்
நன்குலத்துஎம் இல்வைகி
　　நறுந்தேன்செந் தினைஅருந்தி
மரைஅதளில் துயிலமர்ந்து[6]
　　வைகறைவாய்த் துயில்எழுந்து
விரைகமழ்தார் மகிழ்மாறன்
　　மெய்த்தமிழ்ச்சொல் குருகூரின்
முதிர்திரைப்பா லாழியின்வான்
　　முகடுரிஞ்சும் உதயகிரிக்
கதிர்வருமுன் சேர்தல் கடன். 105

(இது வெண்கலிப்பா. என்னை?
"வெண்தளை தன்தளை என்றுஇரு தன்மையின்
　　வெண்பா இயலது வெண்கலி யாகும்"
என்றார் காக்கை பாடினியார். இதனுள்ளும் வெண்தளை தட்டு வெள்ளோசை தழுவியும் கலித்தளை தட்டுத் துள்ளலோசைத் தாகியும் ஈற்றடி முச்சீரான் வந்த (இற்ற)வாறு காண்க.

பகுதி - உடன் போக்கு. துறை - நெறிவிலக்கல். அலங்காரம் - அவயவம் அவயவி இரண்டினையும் உவமைப் படுத்தலான் முற்றுவமை)

---

5. வேடுவர் குறுகி. 6. துயில்வைகி.

முலை, இடை, தோள், முகம், அடி ஆகியவற்றுக்கு முறையே - குன்று, மின், வேய், மதி, தளிர் ஆகியன உவமையாக்கி அவயவியாகிய தலைவிக்குக் கொம்பை உவமையாக்கியமையால் இது முற்றுவமை எனப்பட்டது.

குன்று - மலை. செறிந்து - திரண்டு. வேய் - மூங்கில். புரையும் - போன்ற. துணைத்தோள் - இருதோள்கள். வதனம் - முகம். கோமளம் - மென்மை. வெய்யோன் என்றால் - சூரியனோ என்றால். அற்றம்பார்த்து-வாய்ப்புக் கண்டு. ஆறு அலைப்பர் - வழிப்பறி செய்வர். குலம்-ஊர். இல் - வீடு, வைகி - தங்கி. மரை அதள் - மான்தோல். பாலாழியின் - பாற்கடல்போல். கதிர் - சூரியன்.

தலைவன் தலைவியுடன் கான்வழியில் உடன் போகின்றான். எதிரே கண்டவர் பாலைவழியில் பகலில் செல்லுதல் வேண்டா. இரவு எம்வீட்டில் தங்கிச் சூரியன் உதிக்குமுன் வைகறையில் செல்க என்று வழிவிலக்குவதாக அமைந்தமையால் இது நெறிவிலக்கல் துறையானது.

கொம்பனாளின் அடிச்சுவடு தளர்ந்தன. சூரியனோ என்றால் கொடித்தேரினொடு மறைந்தான். வேடுவரோ என்றால் சமயம் பார்த்து வழிப்பறி செய்வர். ஆதலால் புரவலனே! நீவிர் இருவீரும் எம்வீட்டில் இரவுதங்கி, தேனும் தினையும் உண்டு, மான்தோலில் துயின்று வைகறையில் எழுந்து கதிர் வருமுன் செல்வது கடனாகும் என்பது பாடலின் திரண்ட கருத்து.

படுதிரைப்பா லாழி பயந்தவெண் திங்கள்
நடுவண தாகிய நாள்மலர் நீலம்
இணைஎன வான்முகத்து எய்தும் துணைவிழி
நன்னீர் அருவி நறுந்தேன் அருவியுடன்
மன்னீர்மை வாய்ந்தனவாம் மாமழை வரைபுரையும்

வெண்ணித் திலத்தாமம் மேதகுமா மணிவடத்தில்
பண் அமைந் தோங்கிய பைம்பூண் புணர்முலை
கூற்றுரு நேர்ந்துஓர் குறிப்போடு உயிர்உண
மாற்றுருக் கூர்தல் மருள்வணர் ஐம்பால்
**எம்போன்று** அரும்பணி ஈறின்று இயற்றாது
உமதா ருயிர்கொண்டு ஒருவுமின் செய்த்தென்று
அருள்தக ஆண்டாண்டு அணித்துறு மைந்தர்க்கு
உருபுஅமை நூபுரம் ஓவாது ஒலிக்கும்
தளிர்புரை மெல்லடித் தையல் பொருட்டால்
இளம்பிறை வெண்கோட்டு இரும்பிணர் வான்கை
வளம்கெழு *தீவிழி* வாரண வேட்டைக்குச்
சிங்கம் குழூஉச்செய் சீறூர் அதரிடை
இங்குயாம் துன்புற ஈண்டிருள் யாமம்
பனிமகிழ் மாறன் பராங்குசன் வெற்பிற்
தனிவரல் வேலோய் தவிர். 106

(இது கலி வெண்பா. என்னை?

"ஒருபொருள் நுதலிய வெள்ளடி யியலால்
திரிவின்றி நடப்பது கலிவெண் பாட்டே',
(தொல். செய். 1 4)

என்பதனால் உணர்க. இதனுள் வெண்தளை தட்டு, வெள்ளோசை தழுவிவந்தவாறு காண்க.

பகுதி - இரவுக்குறி. துறை - இரவச்சம் கூறி வரவு விலக்கல். அலங்காரம் - பெயரொடுபெயர் நிரல்நிறை புவமை. இல்பொருள் உவமையும் உள.)

திங்கள் நீலம் என்பன முறையே முகம் விழி என்ற பெயர்களுக்கும் நீர் அருவி தேன் அருவி மாமழை வரை என்பன முறையே முத்துமாலை மணி வடம் முலை ஆகிய

வற்றுக்கும் உவமைகளாக வந்தமையால், பெயரொடு பெயர் நிரல்நிரையுவமை ஆனது. திங்களில் நீலம் அமைவதும் நீரருவியும் தேனருவியும் தனித்தனியே பெய்யும் மலையும் எங்கும் இல்லையாதலால், இல்பொருள் உவமையும் உள என்று கூறப்பட்டது.

படுதிரை - உண்டான அலை. பயந்த - பெற்ற. நீலம் - கருங்குவளை. துணைவிழி - இருகண்கள். மன்நீர்மை - நிலைபெற்ற தன்மை. மாழை வரை - பொன்மலை. புரையும் - போன்ற. நித்திலத்தாமம் - முத்துமாலை. மணிவடம் - மாணிக்கமாலை. பண் அமைத்து - அலங்காரம் செய்து. கூற்றுரு நேர்ந்து - யமன்வடிவம் கொண்டு. மாற்றுஉரு - வேறுவேடம். வணர் - வளைந்த. ஐம்பால் - கூந்தல். ஒருவுமின் - நீங்குமின். சேய்த்து - தொலைவில். அணித்துஉறு - அருகில் வருகின்ற. மைந்தர் - ஆடவர். நூபுரம் - காற்சிலம்பு. தையல் பொருட்டு - தையல்காரணமாக. கோடு - தந்தம். பிணர் - சொரசொரப்பு (சருச்சரை). வாரணம் - யானை. குழுஉச்செய் - கூடிய அதர் - வழி. யாமம் - இரவிலே. வெற்பு - மலை. தனிவரல் - தனியாக வாராதே!

தலைவன் இரவில் வந்து தலைவியைக் கலந்து சென்று கொண்டிருந்தான். இரவில் சிங்கங்களும் ஆறலை கள்வரும் உலாவும் வழியாதலால் நீ இரவில் வாராதே என்று தோழி கூறுவதாக அமைந்தமையால் இது இரவச்சம் கூறி வரவு விலக்கல் துறையாயிற்று.

திங்கள் நடுவில் உள்ள நீலம் போன்று முகமும் கண்களும் நீர் தேன் அருவிகள் பாயும் பொன்மலை போன்று முத்துமாலையும் மாணிக்க வடமும் ஒப்பனை செய்த முலைகளும் கொண்டு கூற்று ஓர் உருக்கொண்டு உயிர் உண்ணும் பொருட்டு மாறுவேடம் பூண்டு வந்தது.

ஆகலால் தூரத்தே விலகிச் செல்க என்று சிலம்புகள் ஒலி யெழுப்பும் மெல்லடியையுடைய தலைவியின் பொருட்டு, யானை வேட்டைக்குச் சிங்கங்கள் கூடும் சிற்றூர் வழியிலே இரவிலே மாறனுக்கு உரிய மலையிலே தனியே வாராதே என்பது பாடலின் திரண்ட பொருள்.

குருகையின் மகிழ் மாறன் குலகிரி தனில்வைகும்
திருமுகம் மதிபோலும் சிறுபிறை நுதல்மன்னோ
இருகயல் மதர்நோக்கம் இலவினது இதழ்செவ்வாய்
பருமணி நிரை என்னப் பழுதற மிளிர்மூரல்
வரும்இள முலை-மாதே! மதகளிறு எனலாகும்.
ஒருபிடி இடையாகும் ஒருபிடி நடைசாலும்
உருவளர் பணைமென்தோள் உயர்வுறும் அரவல்குல்
கருமுகில் குழல்மொழி கரும்பு. 107

(இது. ஆசிரியத்தளையானும் தன்தளையானும் வந்த வெண்கலிப்பா. பகுதி - சேட்படை. துறை - அவயவம் கூறல்.

தலைவியின் உறுப்புக்களைப் புனைந்துரைப்பதால் இது அவயவம் கூறல் துறையானது.)

பருமணி நிரை - முத்துக்களின் வரிசை. மூரல் - பற்கள். மதகளிறு - யானை. பிடி - கைப்பிடியளவு. பிடி - பெண் யானை. பணை - மூங்கில். குழல் - கூந்தல்.

திருமுகம் மதி. நுதல் சிறுபிறை. நோக்கம் இரு கயல். செவ்வாய் இலவினது இதழ். மூரல் பருமணி நிரை. முலை மதகளிறு. இடை ஒருபிடியளவு. நடை பிடி. தோள் பணை. அல்குல் அரவு. குழல் முகில். மொழி கரும்பு என்பன அவயவப் புனைந்துரை.

கலிவெண் பாட்டு முற்றும்

மலர்புரை யாணர் மையுண்கண் மொய்யிழாய்!
உலகியல் அறிந்தோர் உசாத்துணை உள்ளத்து அருமறை
தம எனும் கருவிகள் அடங்காச் சாக்கிரத்து
அமர்தரும் அகத்துஅவை அடங்கிய ஏனைய
சொற்பன சுழுத்தியில் பராவலும் துன்னுனர்க்கு
உற்பவ மாம்உளத்து எனல்உண் மையதாம்.

(இஃது இரண்டாம் அடி ஐஞ்சீரான்வந்த ஆறடித்தரவு)
நினதூரன் (இதுகூன்)

தளைஅவிழ் பல்பூத் தகைமெல் லணைமேல்
விளைவுறு வேட்கையின் விம்மித னாகி
விளைமலி முன்கையை வாழ்த்துபு பற்றி
இளையரில் யாமத் தினில்.

பூங்குழல் ஓர்கையில் தாங்கினன் தாங்கலும்
ஈண்டிய மென்மை இனிமைஇரா கம்கமழ்தல்
கூண்டு மழலை மிழற்றும் குளிர்பவளம்
யாண்டுஎய் தினைநீ எனும்.

வேரிக் களபம் மெழுகித் தரளவடம்
பாரித்த கொம்மை முலைநெருங்கப் பன்முறையும்
பூரித்து அழுந்தப் புணர்மார் பினைநோக்கி
யார்நிற்கு இணைஇங் கெனும்.

(இவை மூன்றும் கொச்சகம்)

வாய்ந்தமருந் தீன்ற மலர்மடந்தை நன்படிவம்
ஈந்தவர்தாம் யார்இங் கெனும்.

(இது வெள்ளைச் சுரிதகம் இடைவந்தது)

கழுவா மணிக்குக் கவினும்உறுப் பெல்லாம்
வழுவாது அமைத்து மலர்தூவிக் கண்டார்
தொழுதுஆ தரிக்கத் துளக்கமதுஉய்த் தார்ஈ
ரெழுபா ரினும்யார் எனும்.

இயற்கை உறுப்பின் எழில்அணிகள் வேய்ந்தார்
முயற்சி மறைத்தநூ ளும் மூடம்இஃது என்னென்று
உயர்த்தி உறுகட் டுரையின்உளம் ஒன்றப்
பெயர்த்தும் தழுவிய பின்.

(இவையும் ஓரிரண்டு கொச்சகம்)

அணியிழாய்
(இது தனிச்சொல்)

இக்காலத் தாராக் கவின்இஃதென் னென்றுணர்வேன்
அக்காலத்து ஒன்றி அயர்வுற் றனன்மன்னோ

(இது பேரெண்)

தோய்ந்ததுயில் விட்டுத்
துணுக்குற்று உணர்வுறலும்
ஆய்ந்ததட மென்தோள்
அணைமேல் துயில்கொள்வான்
ஆய்ந்ததட மென்தோள்
அணைசேர் துயில்முகத்துஆங்
கேந்திழைக்குஎன் நீக்கமிஃது
என்னாம்என் னாம்என்னும்.

ஆற்றுவார் ஆற்றற்கு
அமைதரும்அந் நோயதனைப்
போற்றுவார் மாட்டுஎன் புகழ்பழிஎன்
பால்மன்னோ

போற்றுவார் மாட்டுஎன் புகழ்பழி
என் றால்பிரிதல்
தேற்றுவாய் நெஞ்சே
எனும்மறைசிந் தித்தனனால்
(இவையிரண்டும் தாழிசை)

சிந்திப் பதனொடும்இச் சிந்தை அறைபோக
வந்துஇப் பசலை மறைத்தது மெய்ம் மாசுணவே.
(இதுவும் பெரெண்)

ஏடஇ[1] என்சொல்லேன் மன்யான் பிரிவென்ன
நீடிய உள்ளத் தவர்க்கு[2]
(இதுவும் கொச்சகம்)

ஆயினும்
(இதுவும் தனிச்சொல்)

எனதுயிர் எனஉறு நினதுயிர் உணர்வுற
மொழிவதும் ஒன்றோ பிரிவது புரிபவ ருடனே காமுறு
மனனே,
குமையினை உண்பதும் உறக்கமும் மறக்கும்என்
ஐயரிக் கண்கள தல்லால் மன்னோ
மெய்யென உணர்ந்துஉணர்த் துகநீ
ஒய்யென உடலினை உயிர்துறக் குமதே. 108

பா. பே. 1. ஏட. 2. உள்ளதவர்க்கு.

இதனுள் முதலடி முழுதும் முடுகியலாகவும் இரண்டாம் அடி இருசீர் முடுகியலாகவும் 'மனனே' என்பது சொற் சீராகவும் வந்தன.

இவ்வாறு வருவன கொச்சகக் கலிப்பா எனப்படும். ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குத் தாழிசையாகிய உறுப்பு மிக்கு வந்தாற் போலக் கொச்சகக் கலிப்பாவிற்கும் வெண்பா வாகிய உறுப்பு மிக்கு வரும் என்று கொள்க. இனி ஈண்டு ஓதப்பட்ட உறுப்புக்கள் மிக்கும் குறைந்தும் மயங்கியும் வருபவை கலித்தொகையுட் கண்டு கொள்க!

இதற்குக் கூறிய தொல்காப்பியச் சூத்திரம் :

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்
ஐஞ்சீ ரடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்"

"பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்று அறைந் தனரே"

(தொல். செய். 155, 156)

என்பதாம். இச்சூத்திரத்தைத் தோன்றும் என்பதளவும் பிரித்து வேறாக்கி இதனைக் கலிவெண்பாவின் உறுப்பின் வேறுபட்ட கொச்சகம் என்றும் ஒரு சார் ஆசிரியர் கூறுவர். இது தலைமகன் குறிப்புக் கண்டு பிரிவர் கொல்என ஐயுற்றுச் செல்கின்ற தலைவி அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றல் கேட்டுப் பொருள்வயிற் பிரிகின்றான் எனத் துணிந்து ஆற்றாளாய்த் தோழிக்கு உரைத்தது.

மலர்புரை - மலர்போன்ற. வாணர் - அழகு. மையுண் கண் - மை எழுதிய கண். மொய்யிழை - தோழி. உசாத் துணை - பேச்சுத் துணை. உள்ளத்து அருமறை - மனத்தி லுள்ள இரகசியம். தமஎனும் - தமக்கு உரியனவாகிய. கருவிகள் - மனமுதலிய பொறிகள். அடங்காத - விழித்திருக் கின்ற. சாக்கிரம் - விழிப்புநிலை. அடங்கிய - விழித்திராத.

சொற்பனம் - கனவுநிலை. சுழுத்தி - உறக்கநிலை. பராவல் - சஞ்சரித்தல். துன்னுநர் - காதலர்க்கு. உற்பவமாம் - தோன்றும்.

தகைதல் - செறிதல். விம்மிதன் - பூரித்தவன் வாழ்த்துபு - வாழ்த்தி. இளையர்இல் - பணியாளர் இல்லாத. யாமம் - இரவு.

இராகம் - செந்நிறம். கூண்டு - கூடிய. மழலை - மழலைச்சொல். மிழற்றும் - பேசுகின்ற. பவளம் - பவளம் போன்ற வாய். யாண்டு எய்தினை - எங்கே பெற்றாய்.

வேரி - மணம். களபம் - சாந்து. மெழுகி - பூசி. தரளவடம் - முத்துமாலை. பாரித்த - அணிந்த. கொம்மை - வட்டம். ஞெழுங்க - நெருங்கும்படி. பூரித்து - உவந்து. நிற்கு - உனக்கு.

மருந்து ஈன்ற - அமுது பெற்றெடுத்த. மலர்மடந்தை - திருமகள். படிவம் - உருவம். ஈந்தவர் - கொடுத்தவர்.

கழுவா மணிக்கு - சாணையிடாத மாணிக்கத்தைக் காட்டிலும். கவினும் - அழகு செய்கின்ற. உறுப்பு அவயங்கள். துளக்கமது - ஒளி. உய்த்தார் - சேர்த்தவர். ஈரெழு பார் - பதினாறு உலகங்கள்.

இயற்கை உறுப்பின் - இயல்பிலேயே அழகான அவயவங்களில். அணிகள் - அணிகலங்கள். வேய்ந்தார் - அணிந்தார்கள், முயற்சி மறைத்தருளும் மூடம் - முயற்சியால் மறைக்கின்ற அறியாமை. உயர்த்தி - மேன்மைப் படுத்தி. கட்டுரை - புனைந்துரை. பெயர்த்தும் - மீண்டும் மீண்டும்.

ஆராக்கவின் - தெவிட்டாத அழகு. ஒன்றி - பொருந்தி. துயில் - உறக்கம். தோள் அணை - தோளாகிய அணை.

துயில்முகத்து - தூங்கும்போது. என்நீக்கம் - என்பிரிவு. போற்றுவார் - வளர்ப்பவர். மாட்டு - இடம். மறை - இரகசியம். அறைபோக - கெட்டழிய. மொழிவதும் ஒன்றோ - சொல்வதற்கு ஒன்றா இரண்டா? பிரிவது புரிபவர் - பிரிவினை விரும்பும் தலைவர். காமுறும் - விரும்பும். குமையினை - துன்பத்தை. உண்பதும் - அடைவதும். ஐயரி - அழகிய வரிகளையுடைய. ஒய்யென - விரைந்து.

உயிர் துறக்குமதுநீ உணர்த்துக என்று பொருள் முடிவு கொள்க. உலகியல் அறிந்தோர்க்குப் பேச்சுத் துணையாகிய மனத்தின் இரகசியங்களானவை புலன்கள் அடங்காத விழிப்பு நிலையிலே மனத்துக்குள் அடங்கியிருக்கும். அப்புலன்கள் அடங்கிய சொற்பனம் உறக்கம் ஆகிய நிலைகளில் உளத்தில் சென்று சஞ்சரித்தலும் உண்டாகும் என்பது உண்மையாகும்.

தலைவன் மெல்லணையில் விருப்பத்துடன் உவந்து என் முன்கையைப் பிடித்து, பணியாளர் இல்லாத இரவிலே,

என் குழலையும் ஒரு கையால் ஏந்திக் கொண்டு, "இவ்வளவு மென்மையும் இனிமையும் நிறமும் கமழ்தலைக் கூடிய மழலைச் சொல்லை மிழற்றுகின்ற பவளம் போன்ற இதழ்களை எங்கே பெற்றாய்?" என்கின்றான்.

சாந்தம் பூசி முத்துமாலை அணிந்த வட்ட முலைகள் நெருங்கப் பலமுறையும் அழுந்தப் புணர்கின்ற மார்பினைப் பார்த்து உனக்கு யார் நிகர் என்கின்றான்.

அமுது தந்த திருமகளின் வடிவம் உனக்குத் தந்தவர் யார் என்கின்றான்.

சாணையிடாத மாணிக்கம் போன்று அழகுடைய நின் அவயவம். கண்டவர் (தெய்வப் பெண் என்று) மலர் தூவித் தொழுது ஆதரிக்கும்படி அந்த அவயவங்களை வழுவாமல்

அமைத்து, அவற்றுக்கு ஒளியைத் தந்தவர்கள் ஏழுலகிலும் யார் என்கின்றான்.

உன் அவயவங்கள் இயற்கை அழகுடையன. அவற்றுக்கு அணிகலன்கள் அணிந்து, அந்த இயற்கை அழகினைத் தம் முயற்சியால் மறைக்கின்ற அறியாமை என்னே! என்று என்னை உயர்வு படுத்திப் பேசுகின்ற கட்டுரையால் மனம் ஒன்றாகும்படி மீண்டும் தழுவிய பின்பு.

இப்போது காணத் தெவிட்டாத அழகு இதனை என் என்று உணர்கின்றேன். உன்னை முதன்முதலில் பார்த்த போது மனத்தொடு பொருந்தி அயர்வுற்றேன்! அம்மம்மா! என்கின்றான்.

இந்நிலையில் அவன் துயில் கலைந்தது. துனுக்கம் உற்று உணர்வு பெற்றவுடனே என் தோளாகிய அணையிலே துயில் கொண்டான். அந்தச் சிறு தூக்கத்திலும் 'இவளுக்கு என் பிரிவு என்ன துன்பம் செய்யுமோ' என்கின்றான்.

துயர் பொறுக்கும் ஆற்றலுடையவர் தம் மன வலிமைக்குப் பொருந்துவதான அந்தக் காமநோயினை வளர்ப்பவரிடம் என்புகழ் சேரும். பிரிகின்ற பழி என்பால் சேரும். அவ்வாறு ஆயின் நான் பிரிந்து செல்வதைக் கூறி இவளைத் தேற்றுவாய் மனமே என்று அவன் எண்ணுகின்ற இரகசியத்தைச் சிந்தித்து அறிந்து கொண்டேன்.

அவ்வாறு சிந்தித்து அறிந்தமையால் என் மனம் கெட்டழிந்தது. உடனே இந்தப் பசலையானது என் உடல் மாசுண்ணும்படி மறைத்துக் கொண்டது.

அடி தோழியே! பிரிவதற்கு எண்ணிய மனமுடைய தலைவனுக்கு யாது சொல்லித் தடுப்பேன்! என் உயிர் போல் பொருந்திய தோழியாகிய நின் உயிர் உணரும்படி

சொல்வதற்கு ஒன்றா இரண்டா? பிரிவினை விரும்பிய வருடனே விருப்பமுறும் என்மனம் துன்பத்தை உறுகின்றது. என் கண்கள் தூக்கத்தை மறக்கின்றன. விரைந்து நான் உயிர் துறப்பது உண்மை என்று உணர்ந்து தலைவருக்கு உணர்த்துவாயாக என்பதிரண்டா பொருள்.

முன்னுடைத் தாமரைமலர் முன்னிய
பின்னைமை எய்தாப் பிதாமகன் ஆகிய
தெள்ளிய நான்முகத்து ஓதியும் தேர்வரும்
ஒள்ளிய நான்மறை ஓதாது உணர்வினுட்
கொள்பவ னாகிக் கொழித்த தமிழ்மறை
புள்ளுயர் கேதனத் தாற்கு அருள் பொன்மகிழ்த்தார்
வள்ளல் உயர்தூடரி வாய்.

(இஃது ஏழடி பஃறொடை வெண்பா)

திருந்திய எண்ணெண் கலைகளும் தெற்றெனத்
தரும்பனு வலின்துறை சார்ந்துணர் கேள்வி
பொருந்திய பழிபிறங் கா அருட் புரவல!

(இது மூன்றடி நிலைமண்டில ஆசிரியப்பா)

நெய்த்தும் இருண்டும் சுருண்டும் நெறித்தனவாய்
மொய்த்தகுழல் கோதி முடிமுச்சி
வைத்தமுகை விண்டு மதுத்தூய்ச் சுவல்புரள்வது
உய்த்துஇங் கெழுதுவதொன் றோ!
இருட்பான்மை இன்றி இருதிணைஐம் பாலுட்
பொருட்பான்மை முற்றப் பொறிப்பவர்என் றாலும்
மருட்பார்வை மையுண் மதாரிக்கண் செப்பும்
அருட்பார்வை தீட்டுவதிங் கார்!

(இவை யிரண்டும் இன்னிசை வெண்பா)

காந்தள் இஃ தெனும்இணைக் கரங்களை எழுதினும்
ஆய்ந்தணி வரிவளை அவைஉராய் ஒலிப்பதும்
தோய்ந்திட எழுதவும் துணிபவர் யாரே!

(இது மூன்றடி நிலைமண்டில ஆசிரியப்பா)

வண்ண மணிக்கச்சின் வன்கட்டு அறவிம்மித்
தண்ணென்றும் வெச்சென்றும் தன்மை புரிவனவாய்
வெண்ணணித் திலவடங்கள் மீவாவும் பூண்முலைமேல்
பண்ணப் படுமோ பகர்!

(இஃது இன்னிசை வெண்பா)

உண்டு இலை என்று ஐயம் உறுநுண் ணிடைஉருவம்
கண்டெழுது வார்எவர்மென் கால்உறினும்—
தெண்டமதுஉட்
கொண்டுஒசிதல் கூடும் படிக்கும் குறித்தெழுதும்
பண் டிதர்இங் காருளர்நண் பா

(இது நேரிசை வெண்பா)

பலவாய்
மறித்தினி உரைப்பதென்! மடவரல் அவயவம்
நெறிப்பட நிகழ்த்திய படிநீ கிழியினில்
செறித்துளா தென்னிற் சீறார்
குறிக்கொளக் குழுவொடும் கொடுபோ துகவே.

(இது நான்கடியாய் வந்த நேரிசை ஆசிரியச் சுரிதகம்)
(இஃது அகநிலைக் கொச்சகக் கலிப்பா. என்னை?

"பா நிலை வகையே கொச்சகக் கலிஎன
நூல்நவில் புலவர் நுவன்று அறைந் தனரே"
(தொல். செய். 156)

என்றார் ஆகலின்,

பகுதி - மடல். துறை - அவயம் எழுத அரிதென விலக்கல். "அகவினம் பாடுவாம் தோழி" என்னும் குறிஞ்சி யுட் கலியும் பார்க்க.)

களவொழுக்கத்தில் தலைவியைக் கலந்த தலைவன், அவளை மீண்டும் அடையப் பாங்கியைக் குறையிரந்தான். குறைபெறாது மயங்கிய தலைவன் மடலேறத் துணி கின்றான். அப்போது பாங்கி நீ மடல் ஏறுவதற்குக் கிழியில் தலைவியின் ஓவியம் தீட்ட வேண்டுமே! அவள் அவயவம் தீட்டுவது எளிதல்லவே என்று கூறுவதாக அமைந்த பாடல் இது.

தான் - தன்டு. முன்னிய - படைத்த. பிள்ளைமை எய்தா - குழவிப் பருவம் அடைந்து. பிதாமகன் - பிரமன். நான்முகத்து - நான்கு வாய்களால். தேர்வரும் - தெளிதற்கு இயலாத. ஓதாது உணர்விலுட் கொள்பவன் - நம்மாழ்வார். தமிழ்மறை - திருவாய்மொழி. புள்ளுயர்கேதனத்தான் - கருடக் கொடி கொண்ட திருமால். மகிழ்த்தார் - மகிழமாலை. வள்ளல் - நம்மாழ்வார். துடரிவாய் - துடரிமலையிலே. எண்ணெண்கலை - அறுபத்து நான்கு கலைகள். தெற்றென - தெளிவாக. பனுவலின் துறை - நூல் துறைகள். புரவலன் - தலைவன். குழல் - கூந்தல், முடிமுச்சி - முடிந்த உச்சி. முகை - மலர்மொட்டு. விண்டு - மலர்ந்து. மதுத்தூய் - தேன் சொரிந்து. கவல் - பிடரில். உய்த்து - அனுபவித்து. எழுதுவது ஒன்றோ - எழுதக் கூடியது ஒன்றோ!

இருட்பான்மை - மடமை. பொறிப்பவர் - எழுதுபவர். உராய் - உராய்ந்து. கச்சு - இரவிக்கை. நித்திலவடம் - முத்துமாலை. மீவாவும் - மேலே தாவுகின்ற. பண்ணப் படுமோ - எழுத இயலுமோ? மென்கால் - மெல்லிய காற்று உறினும் - வீசினாலும். தெண்டமது உட்கொண்டு - வளைந்து. ஒசிதல் - ஒடிந்து போதல். பண்டிதர் - வல்லவர்.

மறித்து - மீண்டும். கிழி - திரைச்சீலை. செறித்துளது என்னில் - எழுதியதுண்டேல். கொடுபோதுகவே - அதை எடுத்துக் கொண்டு மடல் ஏறுவாயாக.

தாமரை மலரில் பிறந்து பிள்ளைப் பருவத்திலேயே பேரறிவு பெற்றுப் பிதாமகனாகிய பிரமன் நான்கு வாய் களால் ஓதியும் தெளிதற்கு இயலாத நான்மறைகளை ஓதாமலே உணர்வினுட் கொள்பவர் ஆகி, திருவாய் மொழியைத் திருமாலுக்கு அருளிய நம்மாழ்வாரின் துடரி மலையிலே.

அறுபத்து நான்கு கலைகளும் தெளிவாகத் தரும் பல நூல்களைச் சார்ந்து உணர்ந்த கேள்வி பொருந்திய பழி பிறங்காத புரவலனே!

இவள் கூந்தல் உச்சியில் வைத்த மொட்டுக்கள் விரிந்து மதுச்சொரிந்து பிடரியில் புரளும் அழகு அனுபவித்து எழுதுதற்கு இயலும் ஒன்றோ?

கூந்தலின் அழகை ஒருவாறு எழுதுபவர் இருந்தாலும் கண்களின் அருட்பார்வையை யார் தீட்டுவார்?

காந்தள் மலர்போலும் கைகளை எழுதினாலும் அக் கைகளில் வளையல் ஒன்றுடன் ஒன்று உராய்ந்து ஒலிப்பதை எழுதத் துணிபவர் யார்?

இரவிக்கைக் கட்டுத் தெறிக்கப் பருத்து முத்துமாலை மேலே புரள்கின்ற பூண்முலைமேல் அழகை எழுத இயலுமோ?

உண்டோ இல்லையோ என்று ஐயந்தரும் இடையைக் கண்டு எழுதுபவர் யார்? மெல்லிய காற்று வீசினாலும் வளைந்து ஒசிந்து போகும் தன்மையை எழுத வல்லார் எவர்?

பலவாறு மீண்டும் மீண்டும் சொல்வது ஏன்? தலைவியின் உறுப்புக்களை நான் சொன்னபடி இழியில் எழுதியுள்ளாய் என்றால், இந்தச் சிற்றூரில் நின் குழுவொடும் கொண்டு மடலூர்வாயாக! என்பது திரண்டபொருள்.

கதம்பரி பூண்ட கடுந்தேர் கடாஅய்
மதனுடை நோன்தாள் வலவனி னியற்
புதம்இவள் எய்தல் புதனழிந்தீர் போலும்
திதமகிழ் மாறன் றிருக்குரு கூர்வாழ்
இதமருள் எங்கையர் ஈதுறில் இன்பம்
சுதனுறும் தேர்மீளத் தூண்டு.

மடநல்லாய்!

தவற்றான் றிழையாத் தமியேனை யின
இவற லுடையாய் எனலால்இப் போழ்து
கவர்வுற் றதுநெஞ்ச கம்,

புனலூர!

பொய்யினைப் பொய்யாகப் புறம்போக்கி மேதக்க
மெய்யினை மெய்யாக்கும் விழுமியவர் மாறாடும்
செய்கைப் பொதுமகளிர்ச் சேர்ந்தாங் களவளாய்
மைய லுறா நின் மனோவாக்கும் வெண்பளிங்காய்
எய்திற்றுஎன் சொல்வது இனி.

இன்சொல்லாய்!

சொல்வன்மையரார் துயவற் றவர்விறற்சொல்
வெல்வன்மையர் ஆர் விளம்பு.

புரவல கேட்டி!

நனிநீ ரவரும் நகுதற் பொருட்டாய்த்
தொனிநீர் வளைமுக்கைத் தோதகம்கூர் மாதர்
முனிநீர் மையராக முள்ளுகிராற் செய்புண்
பனிநீர்பெய் சாந்தெழுதும் பண்பின் மறைத்து உட்
கனிநீர் மையர்போலக் கையிருதாள் பற்றித்
தனிநீ குறையிரப்பத் தாழ்ந்ததுளம் நின்கண்
இனிமேலென் செய்குவல் யான். 110

(இஃது உறழ் கலி என்னை?

கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கின் றாதல் உறழ்கலிக்கு இயல்பே
(தொல். செய். 157)

என்னும் விதியால் ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும் போக்கின்றி இற்றவாறு கண்டுகொள்க. 'அரிநீர் அவிழ் நிலம் அல்லி அனிச்சம்' என்னும் மருதக் கலியும் இது.)

கதழ்பரி - வேகமான குதிரை. கடாஅய் - செலுத்தி. மதன் - வலி. நோன்தாள் - வலியமுயற்சி. வலவனின் - பாகனுடன். புதன் - சிந்தை. திதம் - நிலைபெற்ற. மகிழ் மாறன் - நம்மாழ்வார். எங்கையர் - பரத்தையர். ஈது உறில் - இஃது உணர்ந்தால். சுதம் - கேடு. ஈனம் - அற்பம். இவறல் உடையான் - காமுகன். கவர்வுற்றது - துக்கமடைந்தது.

புறம்போக்கி - நன்குகைவிட்டு. விழுமியவர் - சான்றோர். மாறாடுதல் - மயங்குகின்ற. மையலுறா - மைய லுற்று. மனோவாக்கும் - மனமும் சொல்லும்.

வெண்பாவில் காய் எய்திற்று - கண்ணாடிபோல் காட்டிக் கொடுத்தது.

துயவு அற்றவர் - அறிவு திரிந்தவர்.

நனிநீரவர் - மிக்க பண்பாளர். தொனிநீர் - ஒலிக்கின்ற இயல்பையுடைய. தோதகம் - வஞ்சனை. முனிநீர்மைய ராக - சினக்கொண்டு. உகிர் - நகம். பண்பினால் - தன்மை யால். உட்கனி நீர்மையர் - மனம் கனிகின்ற இயல்பினர். தாழ்ந்தது - தங்கியது.

பகுதி - பரத்தையிற் பிரிவு. துறை - ஊடல் பள்ளி யிடத்து வெளிப்பட, தலைமகள் சீறேல் என்று அவள் சீறடி தொழலும் அவள் எங்கையர் காணின் நன்றன்று எனலும்.

தலைமகன் பரத்தையிற் சென்று தங்கினான். பின்னர்த் தலைவியை நினைந்து தேரில் மீண்டான். அவனைக் கண்ட தலைவிக்கும் அவனுக்கும் நடந்த உரையாடலாக இப்பாடல் அமைந்துள்ளது.

**தலைவி :**

தேர் செலுத்திக் கொண்டு பாகனுடன் நீ இங்கு வந்தது அதிசயம். உன் சிந்தை மயங்கி விட்டது போலும்! (வேறெங்கோ செல்ல நினைந்து இங்கே வந்துவிட்டாயோ!) திருக்குருகூரில் வாழ்கின்ற பரத்தையர் இங்கு வந்த இச்செயல் கண்டால் அவர்கள்பால் உனக்குக் கிட்டும் இன்பம் கேடுபடும்.

**தலைவன் :**

ஒரு தவறும் செய்யாத என்னை அற்பக் காமுகன் என்று நீ கூறுவதால் என் நெஞ்சம் துன்புறுகின்றது.

**தலைவி**

பொய்யைப் பொய்யாகப் போக்கி மெய்யை மெய் யாக்கும் சான்றோர் கூட மயங்குகின்ற செயலையுடைய பொது மகளிரைச் சேர்ந்து அளவளாவி மயக்கமுற்ற உன் மனமும் சொல்லும் கண்ணாடிப்போல் எனக்குத் தெரிகின்றது.

**தலைவன் :**

ஒன்றை மற்றொன்றாகக் கொள்ளும் சொல்வன்மையுடையவரின் வெற்றிச் சொல்லை யாரால் வெல்ல முடியும்!

**தலைவி :**

சான்றோர் சிரிக்கும்படி பொது மகளிர் சினந்து கூரிய நகத்தால் செய்த புண்களைச் சாந்தம் எழுதுவது என்னும் வியாஜத்தால் மறைத்து, தாம் செய்த தவற்றுக்காக உள்ளம் கனிபவர்போல், கையால் என் அடிகளைப் பிடித்துக் கொஞ்சுவதால் என்மனம் உன்னிடம் தாழ்ந்தது. ஆதலால் இனி உனக்கு இணங்குவது அல்லாமல் யாது செய்வேன் என்பது பாடலின் பொருள்.

அன்றினர் நிறத்துற
அழுத்துபு பறியா
வன்திறல் மாரதர்
வலம் பட ஏந்திய
கொழுங்குருதிப் புனல்முழுக்குண்
கூரிலைவே லினைவென்றே
அழுங்கனூர்கூர் நமன்படைபோன்று
அமர்புரிமை உண்கணார்
மந்தரவெற் பினைப் பழித்து
வயிரமணிப் பருவரைபோல்
சுந்தரம் ஒன்றிய பைம்பூண்
துணைத்தோளும் புனலூரன்
மின்திகழ்தட் டொளியினும்மாண்
மிளிர்வெய்திக் கதிர்சுலாம்
பொன்திணிமால் வரைமார்பும்
புணையாகப் பொதுவுண்பான்.

(இவை இரண்டும், நான்கு அடியாய் வந்த தரவு)

தண்ணறும்பூந் துணர்ப் பொதும்பர்த்
    தமிழ் மலயத்து அரவுமிழ்ந்த
ஒண்மணியும் பசுங்கழை விண்டு
    உமிழ்மணியும் கைக்கொண்டே
வயிர அழற் பிழம்பெறிகண்
    மால்யானை மதம் ஆடி.
வெயில்விரி பொன் அசும்பதனை
    மெய்ம்முழுதும் மட்டித்தே
பொறிவரிவண் டுளர்நறுமென்
    பொதியவிழ்பூ நறவருந்தி
வெறிகமழ்சந்து அகில்நாகம்
    வேர்முதல்கீண் டுருட்டியே
மாங்கனியும் வாழையின்மா
    மையங்கனியும் வருக்கையின்மாண்
தீங்கனியும் எவ்வுழியும்
    திசைதிசைபோய்த் திரைத்தெடுத்தே
முதுமொழிவான் பொருள்திறங்கள்
    முழுவதூஉம் முதுக்குறைவால்
பொதுவறஉட் கொண்டவரில்
    பொருள்முழுதும் கவர்ந்துஉராய்
நெடும்புயல்நின் றருதிவலை
    நிலத்துறு முன் எதிர்கதுவிச்
சுடும்சுரம் தண் மருதம்எனத்
    தோன்றுதற்கு ஆயிடைஅடைந்தே.

(இவைஆறும் சரடித் தாழிசை)

புறவு பருந்தொ டெருவை வெருண்டு
'பறலிய பம்பு தொழுதி வழங்கவே
உலவை முனிந்த குடசம் உழிஞ்சில்
இலகு கடம்பு குரவை நெருங்கியே
இரலை மருண்ட பிணையொ டிரங்க
அருண நிறங்கொள் ஞமலி யை யுந்தியே
உலைவில் குறும்பின் எயினர் கணம் செய்
இலைபெய் குரம்பை உழுது பெயர்ந்திடா

(இவை நாலும் அராகம்)

குல்லையும்தேன் இமிர்கொழும்பொற்
கொன்றையும்தண் காயாவும்
முல்லையும்தோன் றியும்துவன்ற
முல்லையுள்ஒல் லையில் படர்ந்தே

ஆம்பலந்தீங் குழற்குடவர்
அகன்பாடித் தொழுவுறுஉம்
ஓம்படைஏழு வினம்ஒன்றிற்கு
ஒன்றுலக்கற்று இரியவே

குடப்பால்வெண் தயிர்விராய்க்
குளிர்புனற்கங் கையைப் பழித்துக்
கடப்பாலின் வளம்மலிந்து
கலின்மருதம் ஊறுகியே

கருமேகந் தொடுசிகரக்
கருவரையும் பொருவல என்று
இருமேரு எனப்பணைத்த
இருகரையி னொடும்பொருதே

சுடுமண் உறப் படுத்து இழுகு
சுதைவழித்த மடைமுழைபுக்கு
இடுமண் உறு முழவினைவென்று
எழிலினக் குளிறியே
ஊதியங்கொள் வதற்குஉளதொன்று
உதவினர்தம் உதவியைவென்று
ஈதல்இயல்பு அறிந்தோரின்
எழில்மணிஏற் பவர்க்கு உய்த்தே
(இவையும் ஓராறும் ஈரடித் தாழிசை)

என வாங்கு
(இது தனிச்சொல்)

வண்டானம் துணைபிரிய
மகன்றிலும்தன் துணைபிரிய
தண்டாத அனம் இரிய
தடஞ்சிறைப்புள் ளினம்இரிய
பொய்கை தொறும்பரந்தே
பொழில்கள் தொறும்பரந்தே
செய்கள் தொறும்பரந்தே
திரள்கரும் பிற்பரந்தே
(இவைஎட்டும் இருசீர் ஓரடிச் சிற்றெண்)

பரந்த
(இதுவும் தனிச்சொல்)

மதிநலத்தான் மிக்க மறைத்தமிழ்தேர் மாறன்
முதிய மகிழ்மாலை முன்னோன் குருகூர்த்
ததியர் புகழ்சங் கணித்தண் துறையுட்
புதியவாம் அந்தண் புனல். 111

(இது தரவிரட்டித்துத் தாழிசை ஆறும் அராகம் நான்கும் தாழிசை பின்னும் ஓராறும் தனிச் சொல்லும் இருசீர் ஓரடிச் சிற்றெண் எட்டும் பின்னும் ஓர் தனிச் சொல்லும் பெற்று, இன்னிசை வெள்ளைக் சுரிதகத்தால் இற்றுக் கலிக்கு ஓதப்பட்ட ஆறுறுப்பும் மிக்கும் முறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும் மயங்கி வந்தமையான், இதனை ஒரு சார் ஆசிரியர் - யாப்பருங்கலக்காரிகையார் மயங்கிசைக் கொச்சகக் கலி என்ப. ஆசிரியத்தொடும் வெண்பாவி னொடும் மயங்கி வந்தமையான் என்று கொள்க. பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - புனல்] வரவுரைத்தல். அலங்காரம் - 'வென்றதொத்த' என்னும் வாய்பாட்டால் ஒரு தொடர்பினுள் பல வந்த உவமை. இதன் வேறுபாடும் காண்க )

அன்றினர் - பகைவர். நிறம் - மார்பு. அழுத்துபு - அழுத்தி. பறியா - பறித்து. மாரதர் - வீரர். வலம்பட - வலப்பக்கம்பொருந்த. குருதிப்புனல் - இரத்தம். முழுக் குண் - குளித்தலைச் செய்த. அழுங்குஅஞர் - மிக்கதுன்பம். நமன் படை - நமன் ஆயுதம். அமர் - போர். வெற்பு - மலை. மணிப்பருவரை - மாணிக்கமலை. சுந்தரம் ஒன்றிய - அழகு பொருந்திய. பூண் - அணிகலன். துணைத் தோள் - இருதோள்கள். தட்டொளி - கண்ணாடி. மிளிர்வு - ஒளி. கதிர்சுலாம் - சூர்யசந்திரர் சுற்றி வருகின்ற. வரை மார்பு - மலைபோன்ற மார்பு. புணை - தெப்பம். பொது உண்பான் - பொதுவாக அனுபவிக்கும் பொருட்டு.

துணர் தளிர். பொதும்பர் - சோலை. கழை - மூங்கில். விண்டு - பிளந்து. உகுதல் - சொரிதல். வயிரம் - வலிமை, மதம்ஆடி - மதநீரில் மூழ்கி. அசும்பு - சேறு. மெய் - உடல். மட்டித்து - பூசிக்கொண்டு. உணர்தல் - கிண்டுதல். பொதி - மொட்டு, நறவு - தேன். சந்து அகில் நாகம் - மரங்கள்,

கீண்டு - பிளந்து. மாழை அம்கனி - பொன்னிறமுள்ள அழகிய கனி. வருக்கை - பலா. நிரைத்து - சுருட்டி.

முதுமொழி - வேதம். பொருள்திறம் - உட்பொருள். முதுக்குறைவு - அறிவு. பொதுவற - பொதுநீங்க அதாவது தனக்கு மட்டும் உரிமையாக உட்கொண்டவரின் - அறிந்தவர் போல. உராய் - உலாவி. புயல் நின்று - மேகத்திலிருந்து. திவலை - நீர்த்துளி. கதுவி - பற்றி. சுரம் - பாலைநிலம். மருதம் - வயல்நிலம், ஆயிடை - அங்கு.

புறவு - முல்லை. எருவை - கழுகு. பம்பு - பரவிய. தொழுதி - கூட்டம். உலவை - உடைமரம். முளிந்த - காய்ந்துபோன. குடசம், வெட்பாலைமரம். உழிஞ்சில் - வாகைமரம்; அழிஞ்சில்மரம். இரலை - ஆண்மான். பிணை - பெண்மான். அருணநிறம் - செந்நிறம். ஞமலி - செந்நாய். உலைவில் - அழியாத. குறும்பு - பாலைநிலத்து ஊர். எயினர்கணம் - வேடர் கூட்டம். இலைவெய் - ஓலை வேய்ந்த. குரம்பை - சிறுகுடில். உழுது - பெயர்த்து. குல்லை - கஞ்சங்குல்லைச்செடி. தேன் இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற. முல்லை - முல்லைநிலம். ஒல்லையில் - விரைந்து. படர்ந்து - நடந்து. தீங்குழல் - வேய்ங்குழல். குடவர் - இடையர். பாடி - ஊர். தொழுஉறாஉ - பசுக் கொட்டிலை அடைந்து ஓம்படை - பாதுகாப்பையுடைய. மூவினம் - எருமை பசு, ஆடு. இரிய - ஓட.

விராய் - கலந்து. கடற்பாலின் - கடலிடம்போல. கவின் - அழகு. கருவரை - கரியமலை. பொருவல - ஒப்பல்ல. பணைத்த - பெரியவான. பொருது - மோதி. சுடுமண் - செங்கல். உறப்படுத்து-நன்கு செய்து. இழுகுதல்- பூசுதல். சுதை - சுண்ணாம்பு. மடைமுழை - குளத்து மடையின் துளை. புக்கு - புகுந்து. இடுமண் - (முழவின்) மார்ச்சனை. எழிலி - மேகம். குளிறி - ஒலித்து.

ஊதியம் - பயன். ஈதல் இயல்பு அறிந்தோரின் - ஈகையின் தன்மையை அறிந்தோரைப்போல. உய்த்து - கொடுத்து. வண்டானம் - கானக்கோழி. மகன்றில் - அன்றிற் பறவை. செய் - வயல்.

மதிநலம் - மெய்ஞ்ஞானம். மாறன், முன்னோன் - நம்மாழ்வார். தூதியர் - அடியார். சங்கணித்துறை - குருகூரிலுள்ள பொருநை நதித்துறை. புனல் - நீர்.

பகைவர் நெஞ்சில் அழுத்திப் பறித்து வீரர்கள் ஏந்திய வேலை வென்று நமன்படை போன்று போர் புரியும் கண்களையுடைய பரத்தையர்கள்கூடி, புனலூரனின் மந்தர மலைபோலும் தோள்களையும் மலைபோலும் மார்பையும் தெப்பமாகக் கொண்டு அம்மார்பினையும் தோளையும் பலரும் பொதுவாக அனுபவிக்க ஏதுவாகச் சோலைகளையுடையமலையமலையிலே நாகமணியும் மூங்கில்முத்தும்கைக் கொண்டு. யானை மதத்தில் முழுகி,பொன்னிறச் சேற்றினை உடல் முழுதும் பூசிக்கொண்டு, பூக்களில் தேனை உண்டு, சந்தனம் முதலிய மரங்களை வேருடன் பிளந்து உருட்டி,

மா, வாழை, பலாக்கனிகளை எவ்விடத்தும் சுருட்டி உருட்டி, வேதங்களின் நுண்பொருள் முழுவதும் தன் ஞானத்தால் தெளிந்தவர்போல், எதிர்ப்பட்ட எல்லாப் பொருள்களையும் கவர்ந்துகொண்டு உலாவி.

மழைத்துளி கீழே விழுமுன்பு எதிரே பற்றிச் சுடுகின்ற பாலை, மருதமாகத் தோன்றும்படி அங்கே அடைந்து,

முல்லை நிலத்தே பருந்து கழுகு முதலியன அஞ்சிக் கூட்டமாகப் போகும்படி உலவை முதலிய மரங்களை நெருங்கி, ஆண்மான் பிணையோடு வருந்தும்படி, செந்நாய்களைத் தள்ளிக் கொண்டு.

வேடர்களின் ஓலைவேய்ந்த குடிசைகளைப் பெயர்த்து அப்பால் பெயர்ந்து,

குல்லை முதலிய செடிகள் நெருங்கிய முல்லை நிலத்தை விரைந்து அடைந்து,

வேய்ங்குழலையுடைய இடையர் சேரியில் தொழுவி லுள்ள பசு, எருமை, ஆடு ஆகிய மூவினங்கள் ஒன்றுக் கொன்று கலக்கமுற்று ஓடும்படி

பாலும் தயிரும் கலந்து, கங்கை நதியை ஏளனம் செய்து, மேருமலைபோல் பருத்த இரு கரைகளையும் மோதி, செங்கல்லால் கட்டிச் சுண்ணாம்பு பூசிய குளத்துமடைத் துவாரங்களில் நுழைந்து, ஒலியால் முழவினை வென்று,

பயன் கருதித் தம் பொருள் தருவாரின் உதவியை வென்று ஈகையே பயன் என்று அதன் இயல்பை அறிந்தவர் போல மணிகளை ஏற்பவர்க்கு வழங்கி,

கானக்கோழி முதலியன ஓடும்படி, பொய்கை, பொழில், செய், கரும்பு ஆகியவற்றில் பரவி,

மெய்யுணர்வால் மிக்க தமிழ் வேதம் தேர்ந்த மாறனின் குருகூரில் அடியார் புகழ்கின்ற சங்கணித் துறையிலே நீர் புதியவாக வந்தது என்பது பாடலின் திரண்ட பொருள்.

புனலூரன் தோளும் மார்பும் பொதுவுண்மைப் புதுப் புனல் வந்தமை கூறலால், இது பரத்தையில் பிரிவு ஆனது. புதுப்புனலின் வருகையை விளக்குவதால் இது புனல் வரவுரைத்தல் துறை எனப்பட்டது.

தட்டொளியினும் மிளிர்வு எய்தி, பொதுவற உட்கொண்டவரில் பொருள் முழுதும் கவர்ந்து, கடற்பாலின் வளம் மலிந்து, வரையும் பொருவல என்று பணைத்த இருகரை பொறாது, முழவினை வென்று களிறு, ஈதலியல்பு அறிந்தோரின் ஏற்பவர்க்கு மணியுய்த்து என்ற இடங்களில் ஒன்றை மற்றொன்று வென்று தொத்தது எனப் பொருள் படுதலால் ஒரு தொடர்பினுட் பல வந்த உவமை அணி யானது எனக் கொள்க.

கலிப்பா முற்றும்

## கலிப்பா இனம்

நெய்யமர் வேல! நெடுமால் அரங்கத்துஉன்
ஐயரிக் கண்ணியை யார்என இன்னும் அறியேன்யான்

செஞ்சுடர் வேல! திருமால் அரங்கத்து உன்
அஞ்சனக் கண்ணியை யார்என இன்னும் அறியேன் யான்.

செம்புகர் வேல! திருமால் அரங்கத்துஉன்
அம்பமர் கண்ணியை யார்என இன்னும் அறியேன்யான். 112

(இவை மூன்றும் இரண்டடியாய் ஈற்றடி இரண்டுசீர் மிக்கு வந்தமையால் கலித்தாழிசை.

பகுதி - சேட்படை துறை - அறியாள் போன்று நினைவு கேட்டல் அலங்காரம் - அவயவ உவமை.)

ஈற்றடி இரண்டு சீர்மிக்கு வந்தன என்பதால், அறியேன் என்பது ஒரு சீராகவும் யான் என்பது ஒரு சீராகவும் கொள்ளுதல் வேண்டும் என்று தெரிகின்றது. இதில் யான் என்பது ஓரசைச்சீர் ஆகும்.

இயற்கைப் புணர்ச்சியில் தலைவன், தோழியிடம் தலைவியால் தான் கொண்ட காதலை வெளிப்படுத்தினான் தலைவியை உயர்த்திக் கூறினான். அப்போது தோழி, தலைவியை யார் என்று அறியாதவள் போலத் தலைவனை வினவுவதாக அமைவது இத்துறை.

கண்ணாகிய உறுப்புக்கு அம்பினை உவமையாக்கியதால் அவயவ உவமை அணியானது.

நெய்யமர் - நெய்பூசிய. வேல - தலைவனே. அரிக் கண்ணி - தலைவி. செம்புகர் - செவ்விய புள்ளிகள். அம்பு அமர் - அம்புபோன்ற. பொருள் வெளிப்படை.

தாய்போன்று உலகளித்த
　　தஞ்சைமால் வெற்பனையாய்!
சேய்போன்று ஒளியுடையான்
　　செங்கைத் தழைதாலும்
சேய்போன்று ஒளியுடைய
　　கொண்டிலன்என் சித்திரத்தால்
வாய்போன்று இனிவரில்என்
　　சொல்லி மறுப்பன் வினையேனே 113

(இஃது ஈற்றடி ஒரு சீர்மிக்கு ஏனையடிகள் மூன்றும் ஒத்துத் தனியே இடைமடக்காய் வந்த கலித்தாழிசை.

பகுதி - சேட்படை. துறை - குறிப்பறிதல். அலங்காரம் அவயவியுவமை.)

தலைவிக்குத் தஞ்சை மாலின் வெற்பை உவமையாக்கிய தால் இது அவயவி உவமையானது. அவயவி - அவயவம் உடையவள்.

தஞ்சை - தஞ்சாவூர். மால் - திருமால். வெற்பு - மலை. சேய் - செவ்வேள்; முருகன். ஒளி - அழகு. தழை - தழையாலாகிய உடை. ஒளியுடைய - ஒளியுடைய அந்த உடையை. கொண்டிலன் - நான் ஏற்றுக் கொள்ளவில்லை. சித்திரத்தால் வாய்போன்று - பொய்யாக உண்மைபோல்.

தலைவனுடன் தலைவிக்கு ஏற்பட்ட உறவைத் தோழி குறிப்பால் உணர்வதற்காகப் பேசும் பேச்சு குறிப்பறிதல் துறையாகும்.

தஞ்சைப் பெருமலை போன்று இனியவளே! முருகன் போன்ற அழகுடையான் ஒருவன், தழையுடை தந்தான். அந்த உடை ஒளியுடையது. ஆயினும் நான் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. அவன், ஏதாவது பொய்யான காரணம்

கூறிக் கொண்டு இன்னும் வருவானாகில், என்ன சொல்லி அவன் வரவை யான் தடுப்பது என்பதற்காகவே தழையை ஏற்கவில்லை என்பது தோழியின் பேச்சு.

மின்பெற்ற மேகம் எனமிளிரும் மெய்த்திருமால்!
அன்பில் தருதழையை ஆயிழையாள்
அன்பில் தருகஎன வாங்கி அதை அணைத்த
பின்புற்ற இன்பப் பெருக்குஎன் புகல்வென் பெருமானே! 114

(இஃது இரண்டாமடி மூன்று சீராகக் குறைந்து முதலடியும் மூன்றாம் அடியும் அளவடித்தாய்த் தம்மின் ஒத்தும் ஈற்றடி ஐஞ்சீராய்த் தம்மில் ஒத்தும் ஒவ்வாதும் வந்த கலித்தாழிசை.

பகுதி - சேட்படை. துறை - தழைவிருப்புரைத்தல். அலங்காரம் - அவயவி உவமை.)

தலைவன் தந்த தழையைப் பெற்ற தலைவியின் உள்ளக் களிப்பைத் தலைவனுக்குத் தோழி சொல்வதாக அமைந்தமையால் இது தழை விருப்புரைத்தல் துறையானது.

மின்னலைப் பெற்ற மேகத்தைத் திருமால் திருமேனிக்கு உவமையாக்கியமையால் இது அவயவி உவமையானது.

மின் - மின்னல். என - போல. மெய் - திருமேனி. திருமால் - திருமால் போன்ற தலைவன் (உவமையாகு பெயர்).

மின்னலைத் தன்னிடத்தே கொண்ட மேகம் போன்று திருமகளைத் தன்னிடத்தே கொண்டு விளங்கும் திருமேனியையுடைய திருமால் போன்ற தலைவனாகிய நீ தந்த தழையை வாங்கித் தலைவி அணைத்துக்கொண்ட போது அவள் கொண்ட மகிழ்ச்சியை எப்படிச் சொல்வேன் பெருமானே என்பது தோழியின் பேச்சு.

வாளி பின்செல முன்செலும்
மறிபுனல் ஒழுக்கத்து
ஆளி பின்செல முன்செலும்
அடுகளிறு அந்தோ!
கோளில் வான்பிடி குறுகலும்
புணர்ச்சிஉட் கொளலால்
வேளின் மேதகு பெருவிறல்
யாவரே விளைத்தார்? 115

(இது நெடிலடி (ஐஞ்சீரடி) நான்காய் வந்த கலித்துறை. துறை - நாடு வாழ்த்து. அலங்காரம் - தொழில் அதிசயம்).

இப்பாடல் மா கூவிளம் விளம் விளம் மா என்னும் வாய்பாட்டான் அமைந்தது. மன்மதனின் செயலை வியந்து கூறுவதால், இது தொழில் அதிசயஅணி எனப்பட்டது.

வாளி - அம்பு. புனல்ஒழுக்கம் - வெள்ளம். ஆளி - சிங்கம். களிறு - யானை. கோள்இல் - வலிமைஇல்லாத. வான்பிடி - பெரிய பெண்யானை. உட்கொளல் - நினைத்தல். வேளின் - மன்மதனைக் காட்டிலும். பெருவிறல் - பெரு வெற்றி. விளைத்தார் - செய்தார்கள்?

அம்பின் வேகமும் பின்னடையும்படி முன்னே செல்லும் வெள்ளத்தில் சிங்கமானது பின்னே வர முன்னே செல்லும் யானையானது, தன்பின்னே தன்பிடி வரக்கண்டு, சிங்கத்தால் தனக்கு வரும் ஆபத்தை மறந்து பிடியுடன் புணர்ச்சியை விரும்பும். ஆதலால் மன்மதனின் பெரிய வெற்றியைப் போல் வேறு யார் சாதிக்க இயலும்! என்பது திரண்ட பொருள்.

அடல்நி லாது அரண் இழந்துளார்
யாவரே யானும்
இடன் இல் லாரிடை பணிபவ
ராம்எனல் மெய்யே.
உடன்நி லாதவாய் ஞாளிமுன்பு
இரிநரி உறுநீர்ப்
படரும் மாகளிற்று எருத்ததாய்க்
களித்தது பாய்ந்தே 116

(இதுவும் கலித்துறை. துறை - நாடுவாழ்த்து. அலங்காரம் - நிதரிசனம்)

ஒருவகையான் நிகழ்வதொன்றற்குப் பொருந்தியதொரு பயனைப் பிறிதொன்றற்கு நன்மையோ தீமையோ புலப்பட நிகழ்வதாகச் சொல்வது நிதரிசன அணி. இப்பாடலும் முன்னைய பாடலின் வாய்பாடே பெற்று வந்தது.

இங்கு வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்படும் யானையின் கழுத்து, பிறிதொன்றாகிய நரிக்கு நன்மையாகத் தோன்றினமை காண்க.

அடல்நிலாது - வலிமையின்றி. அரண் இழந்துளார் - காப்பு அற்றவர். யாவரே யானும் - எவராயினும். இடன் இலாரிடை - செல்வம் இல்லாதவரிடத்தும். மெய்யே - உண்மையே. ஞாளி - நாய். இரிதல் - ஓடுதல். படரும் - செல்கின்ற. எருத்து - கழுத்து.

வலிமை குன்றிக் காப்பிடம் இழந்தவர் யாராயினும் செல்வமில்லாதவரிடத்தும் பணிபவர் ஆவார்கள் என்பது உண்மையே யாகும். அந்நிலை எதுபோல் எனில், நாயுடன் கூடிவாழ இயலாமையால், தோற்று ஓடிய நரியானது, வெள்ளத்தில் இழுக்கப்பட்டுவரும் அற்பமாகிய பன்றியின்

கழுத்தில் ஏறி உயிர் பிழைக்க இடம் பெற்றோம் என்று மகிழ்ந்ததைப் போலும்!

அரண் இழந்தவர், தாய்க்கும் செல்வமில்லாதவர், அற்பப் பன்றிக்கும் பணிவது, கழுத்தில் ஏறுவதற்கும் உவமைகள்.

இறைவ னால்அலைந்து இரியல்போ
குநர் இறை மையிலாச்
சிறைவ லாருழைச் சரண்புக
உடன் இரி திறன்என்று
அறைவ தாம்புனல் அலைக்கும். ஆ
னைகள்[1] துதிக் கையின்அத்
துறைவன் மாமுதல் தழீஇயுடன்
இரிதரு தொடர்பே. 117

(இதுவும் கலித்துறை. துறை - நாடு வாழ்த்து. அலங்காரம் - வினையுவமை)

இப்பாடலும் முன்னைய பாடலின் வாய்பாடே பெற்று வந்தது. தோற்றோடுநர் தலைமையில்லாத அடிமையானரிடம் சரண் புகுந்து அவர்களால் காக்கப்படாமல் அவர்களுடன் கூடி ஓடும் செயலுக்கு,

ஓடும் ஆனைகள் நீர்த்துறை மாமரத்தைச் சரணடைந்து அதனால் காக்கப் படாமல், அதனையும் இழுத்துக் கொண்டு ஓடுவது உவமையாக வந்தமையால் இது வினையுவமை எனப்பட்டது.

இறைவன் - அரசன். அலைந்து - அலைக்கப்பட்டு. இரியல்போகுநர் - தோற்று ஓடுபவர். இறைமை - தலைமை.

1 ஆனிதன் என்று பாடம் உள்ளது. அது பொருந்தாமை காண்க.

சிறைவலார் - அடிமைகள். இரிதிறம் - ஓடுகின்ற நிலை. ஆம் - போலும். புனல் - நீர். அலைக்கும் - வருத்துகின்ற. துறைவல் மாமுதல் - துறையிலுள்ள வலிய மாமரத்தின் அடிமரம். தழீஇ - தழுவி. இரிதரும் - ஓடும்.

வெள்ளம் இழுத்துச் செல்லும் ஆனைகள் தம் துதிக்கையினால் துறையிலுள்ள வலிய மாவின் அடிமரத்தைப் பிடித்து அதனால் காக்கப்படாமல், அதனையும் கூட இழுத்துச் செல்லும் தொடர்பானது, அரசரால் அலைக்கப்பட்டுத் தோற்று ஓடுபவர், வழியிலே தலைமையில்லாத அடிமைகளைச் சரணம் அடைந்து அவர்களால் காக்கப்படாமல் அவர்களுடன் சேர்ந்து ஓடும் செயல் என்று கூறுவதுபோலும்.

கலங்கு பாய்புனல் கடிந்தெழக் கவட்டொடும் அலங்கப்
புலம்கொள் தாருவில் புட்குலம் போகலாது இரைத்தல்
குலங்கள் தாங்குநர் நடுக்குறக் குளத்துளா யவர்பால்
நலம்கொள் வார்குழீஇக் கலுழ்வதே போன்றன நவிலின்

(இதுவும் கலித்துறை. துறை - நாடு வாழ்த்து. அலங்காரம் - வினையுவமை.)

இதுவும் முன்னைய பாடலின் வாய்பாடே பெற்றுவந்தது.

நலம் கொள்வார் கலுழ்வதற்குப் புட்குலம் இரைத்தல் உவமையாக வந்தமையால் இது வினையுவமையானது.

கலங்கு - கலங்கிய. கடிந்துஎழ - சினந்து எழுதலால். கவடு - கிளை. அலங்க - அசைதலால். புலம் - மேட்டுநிலம். தாரு - மரம். புட்குலம் - பறவைக் கூட்டம். போகலாது - பிரிந்து போகாமல். இரைத்தல் - ஆரவாரம் செய்தல். தாங்குனர் - காப்பவர் நடுக்குற - நிலை கெடுதலால். குலத்துளாய் - அக்குலத்திலேயேயிருந்து. அவர்பால் நலங் கொள்வார் - அவரிடம் நன்மையடைந்தவர்கள். குழீஇ - கூடி. கலுழ்வது - கலங்குவது. நவிலின் - சொன்னால்.

கலங்கலாகிய வெள்ளம் சினந்தெழும் போது, இளைஞருடன் அசைவதால் மேட்டு நிலத்துள்ள மரங்களிலுள்ள பறவைகள், அந்த மரத்தை விட்டுப் போய்விடாமல் ஒலியெழுப்புவது, குலத்தைக் காக்கும் தலைவர்கள் தம்நிலையில் தாழ்ந்து வறுமையால் நடுக்கமுற்ற காலத்தே, அவர்களிடம் நன்மையடைந்தவர்கள் அவர்களைப் பிரிந்து போகாமல் கூடியிருந்து கவலைப்படுவதனைப் போலும் என்பது பொருள்.

அறைபொருது அமிழ்துஅரு மணியைத் தாருவை
நறைமரை வளக்கபி லையினை நாகினைத்
துறைதொறும் சுழித்தெறி தொகுதி பாற்கடல்
நிறைஅமிழ்து உயிர்த்தபல் வளம்நிகர்க்குமே. 119

(இது கலிவிருத்தம். அலங்காரம் - தொழிலுவமையில் ஒருவயிற்போலி. துறை - நாடுவாழ்த்து.)

இது விளம் விளம் மா கூவிளம் என்னும் வாய்பாட்டால் வந்துள்ளது.

அமிழ்து (வெள்ளம்) சுழித்தெறியும் தொகுதிக் தப் பாற்கடல் அமிழ்தினைப் பெற்ற வளத்தை உவமையாக்கியமையால், தொழிலுவமையானது. ஓரிடத்தில் மட்டும் நிகர்க்கும் என்ற உவம உருபு வந்தமையால் இது ஒரு வயிற்போலி எனப்படும்.

பொருநை நீர்ப் பெருக்குக்கும் திருப்பாற்கடலுக்கும் சிலேடையுவமை. அமிழ்து பொருது சுழித்துஎறி தொகுதி எனக் கூட்டுக.

அமிழ்து - பொருநை நீர்; அமிழ்தம். அறை - பாறை. மணி - மாணிக்கம்; சிந்தாமணி. தாரு - மரம்; கற்பகம். மரை - தாமரை; பதுமநிதி. கபிலை - பசு; காமதேனு. நறை - தேன்; நறும்புகை. நாகு - சங்கநிதி; சங்கு. உயிர்த்த- ஈன்ற.

பொருநை நீர்ப் பெருக்கின்மேல் சொல்லுங்கால், மணி - மாணிக்கம். தாரு - கோங்கு முதலிய மரம். மரை - தாமரை மலர். கபிலை - பசு. நாகு - சங்கு எனப் பொருள் கொள்க.

திருப்பாற்கடலின் மேல் சொல்லுங்கால், மணி - சிந்தாமணி. தரு - கற்பகம். நறை - நறும்புகை யூட்டப் பெற்ற பதுமநிதி. (நிதியறைகளில் நறும்புகை யூட்டுவது வழக்கு) நாகு - சங்கநிதி எனவும் கொள்க.

பாறைகளைப் பொருது வருகின்ற வெள்ளமானது துறை தோறும் சுழித்து வீசுகின்ற மணிகள், மரங்கள், தாமரை மலர், பசுக்கள், சங்குகள் ஆகியவற்றின் கூட்டமானது, பாற் கடலின் நிறைந்த அமுதம் வீசிய சிந்தாமணி, கற்பகம், பதுமநிதி, காமதேனு. சங்கநிதி யாகிய பல வளங்களை நிகர்க்கும் என்பது திரண்ட பொருள்.

தரங்கவான் புனல் இரு கரையும் தாக்கலின்
மரங்கள்தாம் அசைந்து அலர் உகுத்தல் வாழும்எம்
உரம்கெடாது அளித்திஎன்று உள்ளிக் கொம்பராம்
கரங்களால் பனிமலர் கவிழ்ப்ப போன்றவே.[1] 120

(இதுவும் கலிவிருத்தம். அலங்காரம் - தற்குறிப்பேற்ற உவமை. துறை - நாடு வாழ்த்து.)

ஒரு பொருளின் இயற்கை நிகழ்ச்சிகளைக் கவி தானே கற்பனை செய்து, பிறிது ஒன்றன் நிகழ்ச்சிகளோடு ஒப்பிடுதல் தற்குறிப் பேற்ற உவமையாம்.

---

பாட பேதம் :

[1] கவிழ்ப்ப தொத்ததே. கவிழ்ப்ப தொத்தவே. போன்றதே.

மரங்கள் மலர் உகுப்பது இயற்கை நிகழ்ச்சி. அந் நிகழ்ச்சியை கருணை செய்க என்று நினைந்து கிளைக்கை களால் மலர் சொரிவதைப் போலும் என்றமையால் இது தற்குறிப்பேற்ற உவமையானது.

தரங்க வான்புனல் - அலைகளையுடைய மிக்கநீர். தாக்கலின் - மோதுவதால். அலர் உகுத்தல் - மலர் சொரிவது. உரம் - வலிமை. அளித்தி - கருணை செய். உன்னி - எண்ணி. கொம்பர் - கிளை. கரம் - கை. மலர் கவிழ்ப்ப - மலர் சொரிவன.

வெள்ளமானது இரு கரைகளையும் மோதுவதால் மரங்கள் அசைந்து மலர் உகுப்பது, மரங்கள் அந்த வெள்ளத்தை நோக்கி எங்கள் வலிமையைக் கெடுக்காமல் காப்பாற்றுக என்று நினைந்து தம் கிளைகளாகிய கைகளால் மலர் தூவி வழிபடுவது போன்றிருந்தது என்பது பொருள்.

மண்ணக மடந்தைதன் வரம்பை வான்புனற்
பெண்ணரசு அழித்ததுஎன்று உலகம் பேசுமாறு
எண்ணியே அளவினுக்கு எங்கும் ஆர்த்தியாய்
உண்ணும்நீர்க் கடனையும் உததிக்கு ஈந்ததே.[1] 121

(இதுவும் கலிவிருத்தம். அலங்காரம் - தற்குறிப்பேற்ற உவமை. துறை - நாடு வாழ்த்து.)

பொருநை நீர்ப்பெருக்கு நெய்தல் நிலத்துப் புக்க செய்தி இப்பாடலில் உள்ளது.

மண்ணகமடந்தைதன் வரம்பு - பூமகளின் எல்லையாகிய கடல். புனல் பெண்ணரசு - மழை நீராகிய பெண்ணரசு. ஆர்த்தி - நிறைவு; மிகுதி. உண்ணும் நீர்க்கடன் - தான்

[1] ஈந்தவே.

உண்ட உவர் நீர்க்கடன்; உண்ணத்தக்க நீர்க்கடன். உததி - கடல். எங்கும் ஈந்தது - பல முகத்தாலும் ஈந்தது.

மேகமானது கடலை வற்றப் பருகிவிட்டது என்று உலகத்தார் பழி கூறுவதை எண்ணிப் பார்த்து, அந்த மேக மானது, தான் உண்டதிலும் அதிகமாகப் பலமுகத்தானும் உண்ட நீர்க் கடனைக் கடலுக்குச் செலுத்தியது என்பது பொருள்.

எங்கும் ஈந்தது என்பது மேகம் கடலில் ஓரிடத்துப் புக்கு உண்ட நீரைப் பல முகத்தானும் உதவியது என்ற படி.

இயல்பாகக் கடலில் புக்க நீரை கடனை ஈவதற்காகப் புக்கது என்பது தற்குறிப்பேற்றம்.

புக்கமா நதிக்குலந்திர் புணரி மாமணி
ஒக்கவே தெளித்திடல் உததி நாயகன்
மிக்கநா யகிஎன விரைந்து பாதகா
ணிக்கையாய்த் திரைக்கரத்து இடுவ போன்றதே.122

(இது கலிவிருத்தம். அலங்காரம் - தற்குறிப்பேற்ற உவமை. துறை - நாடு வாழ்த்து.)

மாநதி - பொருநையாறு. புணரி - கடல். ஒக்க - ஒரு சேர. தெளித்திடல் - வீசுவது. உததி நாயகன் மிக்க நாயகி - கடலுக்கு அரசனாகிய வருணனின் நாயகி. திரைக்கரம் - அலையாகிய கை.

வருணனை நாயகனாகவும் நதியை நாயகியாகவும் கூறுதல் இலக்கிய வழக்கு.

தன்னிடம் புகுந்த பொருநை யாற்றுக்கு எதிரில் கடலானது முத்து, பவளம் முதலிய மணிகளை ஒருமிக்க வீசு வதானது, தனக்குத் தலைவனான வருணனுடைய மனைவி

இவள் என்று கருதிப் பாதகாணிக்கையாகத் தன் அலைக் கைகளால் எடுத்து இடுவது போன்றிருந்தது என்பது பொருள்.

நதி கடலில் புகும்போது, கடல் மணிகளை வீசுவது இயற்கை நிகழ்ச்சி. அதற்குப் பாதகாணிக்கை தருவதை உவமையாக்கியமையால் இது தற்குறிப்பேற்ற உவமை யானது.

மடைதிறந்து ஒழுகும்நீர் வாவி வாய்ப்புக
மிடைதிறம் தரும்அர விந்த நாண்மலர்
புடைதிறந் ததுமலர்ப் பூவை பொன் இதழ்க்
கடைதிறந்து எதிர்கொள நினையும் காட்சித்தே. 123

(இது கலிவிருத்தம். அலங்காரம் - தற்குறிப் பேற்ற உவமை. துறை - நாடு வாழ்த்து.)

மருத நில வளம் கூறும் பாடல் இது.

வாவிவாய் - பொய்கைகளில். புக - புகுவதால். மிடை திறம் தரும் அரவிந்தம் - நெருங்கும் பான்மையுடைய தாமரை. நாண் மலர் - அப்போது அலர்ந்த மலர். புடை திறந்தது - மலர்ந்தது. மலர்ப்பூவை - இலக்குமி. இதழ்க் கடை - இதழாகிய கதவு. காட்சித்து - காட்சி போன்றது.

நீர்மடை திறத்தலால் பாய்ந்து வரும் நீரானது பொய்கையிலே புகுதலால் தாமரை மலர்கள் மலர்ந்த தானது, இலக்குமிதேவி தாமரை இதழ் ஆகிய கதவைத் திறந்து கொண்டு அந்த நீரினை எதிர் கொள்வதற்காகக் கருதிய காட்சி போன்றது என்பது பொருள்.

நீர் புகும் போது இயல்பாகவே மலரும் தாமரையைத் திருமகள் (இதழ்க்) கதவு திறந்ததாகக் கூறியது தற்குறிப் பேற்ற உவமை.

கலிப்பாவினம் முற்றும்

## வஞ்சிப்பா

கறைவேல்விழி இலவிதழ் இதழ்
நறைநாள்மலர் அம்புயம்முகம்[1]
புருவஞ்சிலை உருவம்புயல்
உருவம்புரி குழல்எனுமது
பொன்னங்கிரி கொங்கைத்துணை
மின்னென்று உணர் இடைகண்டிலன்

எனவாங்குக்

கற்றறிவுடையஎன் நிறைபினைக் கவர்ந்துஉண்[2]
நல்திரு உறைவிடம் நண்பா
சொல்தமிழ் மாறன் துடரிவெண் பொழிலே. 124

[இஃது ஒன்றியும் ஒன்றாதும் வஞ்சித் தளையான் வந்து ஆறு அடித்தாய், 'எனவாங்கு' என்னும் தனிச்சொல் பெற்று நேரிசையாசிரியச் சுரிதகத்தால் இற்ற குறளடி வஞ்சிப்பா.

அலங்காரம் - தொகையுவமை. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - இயல்பிடம் கூறல்.)

வஞ்சித்தளை, இருவகைப்படும். அவை ஒன்றிய வஞ்சித்தளை ஒன்றாத வஞ்சித்தளை என்பன. அவை கனி முன், நிரை வருவதும், கனி முன் நேர் வருவதுமாகும். முதலடியில் கனி முன் நிரை வந்தது. இரண்டாமடியில் கனி முன் நேர் வந்தது. அடிதோறும் இருசீர் பெறுவது குறளடி. சுரிதகம் என்பது முடிக்கும் பகுதி.

தலைவியைக் கலந்து வந்த தலைவனைப் பாங்கன், நீ கண்டது எவ்விடத்து? எவ்வியல்பினது? என வினவும்போது,

---

1. அஃது ஆனனம். 2. கலந்து உண்.

தலைவன் அதற்கு விடை கூறுவதாக அமைவது இயல்பு இடம் கூறல் என்னும் துறை.

உவம உருபு மறைந்து வந்தமையால் இது தொகை புவமையாயிற்று. வேல் போன்ற விழி என வரவேண்டியது வேல் விழி என உவம உருபு இல்லாமல் தொக்கு வந்தமை காண்க.

கறைவேல் - இரத்தக் கறை படிந்த வேல். இலவு - முள்முருக்கு. இதழ் - மலர் இதழ். இதழ் - உதடு. நறை நாள் மலர் அம்புயம் - தேனையுடைய அன்றலர்ந்த மலரை யுடைய தாமரை. சிலை உருவம் - வில்லின் வடிவம். புயல் உருவம் - மேகத்தின் வடிவம். குழல் - கூந்தல். பொன்னங்கிரி - பொன்மலை. கொங்கைத் துணை - இரு முலைகள். நிறை - மன உறுதி. நல்திரு - தலைவி. மாறன் - நம்மாழ்வார். பொழில் - சோலை.

வேல் போன்ற விழி, இலவின் இதழ் போன்ற உதடு, தாமரை மலர் போன்ற முகம், புருவமாகிய வில்லுருவம் புயல் உருவமாகிய புரிகுழல், பொன்மலை போன்ற இரு முலைகள் இவற்றைக் கண்டயான் மின் என்று உணர்கின்ற இடையைக் கண்டிலேன்.

இவ்வாறு கற்றறிவினனாகிய என் நிறையினைக் கவர்ந்து உண்ட நல்ல திருமகள் உறையும் இடம், மாறனுக்கு உரிய குடமிமலைச் சோலையேயாகும் என்பது பொருள்.

வான்தோய்கதிர் அடல்திகிரியை வலன்ஏந்தியும்
மீன்தோய்மதி மிளிர்வலம்புரி இடன்ஏந்தியும்
கௌத்துவமணி வனமாலிகை கவின்மார்பினில்
பவித்திரமுறு மலர்மாயகள் பயில்வாழ்வினன்
மகரக்குழை தழைகாதினன் மணிமௌலியன்
சிகரப்பஃறலைசேர்வட மலைமேல்உறை

செல்வனை
அனவரத முரம்வரி அளிசெறி தளைஅவிழ்
இனமலர் தூய்இறைஞ் சினர்பால்
கனவிலும் உறான்கொடுங் கணிச்சி யோனே. 125

(இஃது ஆறு அடித்தாய்ச் செல்வனை என்னும் தனிச் சொல் பெற்று நேரிசையாசிரியச் சுரிதகத்தால் இற்ற சிந்தடி வஞ்சிப்பா.

திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - பொருள் தன்மை.)

சிந்தடி என்பது அடி ஒன்றற்கு மூன்று சீர் வருவது.

இப்பாடல் திருமால் என்னும் பொருளின் தன்மை கூறப் பட்டிருப்பதால் பொருள் தன்மை அணியானது.

வான்தோய்கதிர் - சூரியன். அடல்திகிரி - வலியசக்கரம். வலன் - வலப்புறம். மீன் - விண்மீன். மதி - சந்திரன். வலம்புரி - சங்கு. இடன் - இடப்புறம். வனமாலிகை - துளசிமாலை. கவின் - அழகு பெறுகின்ற. பவித்திரம் - தூய்மை. பயில் - தங்கிய. மகரக் குழை - மகர குண்டலம். மௌலி - மகுடம். சிகரப்பஃறலை - சிகரங்களாகிய பல தலைகளையுடைய. பஃறலை — பல்தலை. வடமலை திருவேங்கடமலை.

அனவரதம் - நாடோறும். வரிஅளி-வரியுடைய வண்டு. தளை - மொட்டு. அவிழ் - விரிந்த. இனமலர் - சிறந்த மலர்கள். தூய் - தூவி. இறைஞ்சினர் - வழிபடுவோர். கணிச்சியோன் - மழுவாயுதம் தரித்த இயமன்.

சூரியன் போன்ற சக்கரம் வலப்பக்கமும் சந்திரன் போன்ற சங்கு இடப்பக்கமும் ஏந்தியவன். கவுத்துவமணி

யும் துளசி மாலையும் அழகு பெறுகின்ற மார்பிலே தூய்மை யுடைய திருமகள் குடிகொண்ட வாழ்வை யுடையவன். மகர குண்டலங்கள் தங்கிய மணி மகுடமுடையவன். பல சிகரங்களையுடைய வேங்கட மலைமேல் வாழ்கின்ற செல்வனை எப்போதும் வண்டுகள் செறிகின்ற மொட்டலர்ந்த மலர்கள் தூவி வழிபட்டவரிடம் இயமன் கனவிலும் வரமாட்டான் என்பது பொருள்.

பைம்பொற் குன்றே பணைஇள வனமுலை
அம்புத்துணையே அரிமதர் உண்கண்
குனிசிலை யிரண்டே கொடுநன் புருவம்
பனிமா மதியே பழிதீர் நல்முகம்
கொடியே தளர்இடை கொண்மூ வேகுழல்
ஆடரவின்படம் ஆமேகடிதடம்
காந்தளந்துணைமலர்[1] அவையே கையும்
பூந்தளிர் அன்றே புடைபெயர்மெல்லடி
நண்பா!
படர்புகழ் மாறன் பராங்குசன்
துடரிவண் பொழிலே தோகையது இடமே[2] 126

(இது பொதுச்சீர் (நாலசைச்சீர்) பதினாறும் வந்து, 'நண்பா' என்னும் தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத் தால் இற்ற குறளடி வஞ்சிப்பா. துறை - இயல்பிடம் கூறல். அலங்காரம் - நியமஉவமை.)

ஒரு பொருளுக்கு மற்று ஒரே பொருளை உவமை யாதற்கு ஏற்புடையது என்று வரையறுத்துக் கூறுவது நியம உவமையாகும்.

---

1. காந்தளின் துணைமலர்.
2. துடரிமால் வரைவளர் தோகையதிடமே.

பொற்குன்றே முலை என்பது, பொற்குன்று தவிர முலைக்கு உவமையாதற்கு உரியன வேறு இல்லை என்று பொருள் படுவதால் இது நியம உவமையானது.

முன்னைய "கறை வேல்விழி" என்ற பாடலில் இயல் பிடம் கூறல் என்பதன் விளக்கம் காண்க.

பொற்குன்று - பொன்மலை. அம்புத்துணை - இரண்டு அம்புகள். சிலை - வில். கொடுநன் புருவம் - வளைந்த நல்ல புருவம். மதி - சந்திரன். கொண்மூ - மேகம். கடிதடம்-அல்குல். துணைமலர்-இருமலர்கள். பராங்குசன்-நம்மாழ்வார். தோகை - தலைவி. பொழில் - சோலை. நண்பா! என் உள்ளம் கவர்ந்த தலைவியின் இயல்பு யாது எனில், இவள் முலை பொன்மலையே, கண் அம்புத் துணையே, புருவம் சிலை இரண்டே, முகம் மதியே, இடை கொடியே, குழல் மேகமே, கடிதடம் அரவின் படமே, கை காந்தளின் மலரே, அடி தவிரே யாகும். அவள் இடம் பராங்குசனின் துடரி மலையைச் சார்ந்த சோலையேயாகும் என்பது பாடலின் பொருள்.

வஞ்சிப்பா முற்றும்

## வஞ்சிப்பா இனம்

நறைமகிழ் மாறன்
உறைநகர் ஆடவர்
மறைமொழி நினைதொறும்
நிறைதளரும்மே

திருமகிழ் மாறன்
அருள்நகர் ஆடவர்
அருள்தலை நினைதொறும்
உருகும்என் நிறையே

பொன்மகிழ் மாறன்
நன்னகர் ஆடவர்
முன்உரை நினைதொறும்
என்நிறை யிலவே 127

*(இது குறளடி நான்காய், மூன்றும் ஒரு பொருள்மேல் வந்தமையால் வஞ்சித்தாழிசை. பகுதி - பொருள் வயிற் பிரிதல். துறை - முன்னினைந்திரங்கல். அலங்காரம் - சுவையினுள் அசைவு பற்றிய அழுகை.)*

*தலைவன் பொருள் தேடும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணுகின்றான். நேரடியாகச் சொன்னால் தலைவி தாங்கமாட்டாள் என்று மறைமொழியாக - குறிப்பாகக் கூறுகின்றான். அவன் குறிப்புரையை உணர்ந்து கொண்ட தலைவி இரங்குவதாக அமைந்தது இப்பாடல்.*

*நறைமகிழ்-தேனையுடைய மகிழமலர்மாலை. ஆடவர். தலைவன். மறைமொழி - உள்ளுறையாகக் கூறிய சொல். நிறை - மனஉறுதி. அருள்தல் - அருளுதல். முன்உரை - முன்பு கூறிய சொல்.*

நம்மாழ்வார் வாழும் குருகூர் நகரினராகிய தலைவர் கூறிய சொல்லை நினையுந்தோறும் என் மனவுறுதி தளர்கின்றது என்பது திரண்ட பொருள்.

தண்தமிழ் மாறன்
வண்குரு கூரார்
நண்புற வாரார்
கண் துயி லாவே 128

(இஃது இரு சீரடி நான்கினால் ஒரு பொருள்மேல் ஒன்றாய் வந்த வஞ்சித்துறை. துறை - பிரிவு நினைந்திரங்கல். அலங்காரம் - சுவையினுள் அசைவு பற்றிய அழுகை.)

மாறனது குருகூரில் வாழும் தலைவர் நட்புண்டாக வரமாட்டார். ஆதலால் என் கண்கள் துயிலவில்லை என்பது தலைவியின் கூற்று.

நீர நா க மா
தார மா க மே
வார மா க மா
ணார ணா க கா 129

(இதுவும் வஞ்சித்துறை. துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் சொல்லணியினுள் பிரிந்தெதிர் செய்யுள். அனுலோமப் பிரதிலோமம் என வடநூலார் கூறுவதும் இது.)

பிரிந்தெதிர் செய்யுள் என்பது மாறன் அலங்காரம் மட்டுமே குறிப்பிடுகின்றது.

ஒரு செய்யுள் முதலே முடிந்தால், அச்செய்யுள் ஈற்றெழுத்துத் தொடங்கி எதிரேறாக நடந்து, வேறு ஓர் செய்யுளாக நிகழ்தல்,

பிரித்தெதிர்வனவே பிரித்தெதிர் செய்யுள் என்பது இலக்கணம்.

நீர நா க மா
நார மா க மே
வார மா க மா
ணார ணா க கா

இதனை அடிதோறும் ஈற்றெழுத்துத் தொடங்கிப் படித்தால் வரும் வேறுபாட்டு :

காக ணா ர ணா
மாக ம ர வா
மேக மா ர நா
மாக நார நீ

என்பதாகும்.

நீர - நற்குண முடையவனே! நாக - அனந்த சயன முடையவனே! மாதாரமாக மேவு - திருமகளைத் தாரமாக விரும்புகின்ற. ஆரம் ஆக - ஆரம் அணிந்த மார்பை யுடையவனே! மாண் ஆரண ஆக - பெருமையுடைய வேதத்தை உடலாகக் கொண்டவனே! கா - என்னைக் காப்பாயாக! இது முதலிலிருந்து முடிந்த செய்யுளின் பொருள்.

கண் - கண்போன்றவனே!
நாரணா - நாராயணனே
மா - பெரிய
க - (கருடப்) பறவையை உடையவனே!
மார - மன்மதன் போன்ற அழகுடையவனே!
வாம் மேக - தாவிச் செல்கின்ற மேகம் போன்றவனே!

மாரதா - பெரிய இரதமுடையவனே! (யுத்தவீரனே!)
மாக - ஸ்ரீ வைகுண்ட நாதனே!
நார - அன்புடையவனே!
நீ கா - நீ(என்னைக்) காப்பாயாக!

இறுதியிலுள்ள நீ என்பதனுடன் முதலிலுள்ள கா சேர்ந்து பொருள் படுகின்றது. இவ்வாறு பொருள் கொள்ளும் முறை பூட்டுவில் பொருள்கோள் எனப்படும்.

இது இறுதியிலிருந்து எதிரேறாக நடந்த செய்யுளுக்குப் பொருள்.

மா க என்பதற்குப் பெரிய பிரமனை (மகனாக) உடையவனே என்றும் பொருள் கொள்ளலாம். க - பிரமன்.

நீர் - குளம். நாகம் - ஆதிசேடன். மா - திருமகள். தாரம் - மனைவி. மேவு - விரும்புகின்ற. ஆரம் - மாலை. ஆகம் - மார்பு. மாண் - பெருமையுடைய. ஆரணம் - வேதம். ஆகம் - திருமேனி.

இது முதல் வகைப் பாடலின் அரும்பதஉரை.

மா - பெரிய. க - பறவை; பிரமன். வாம் - வாவுகின்ற. மாரதன் - போர்வீரன். மாகம் - ஆகாயம்; வைகுந்தம். நார் - அன்பு.

இது இரண்டாம் வகையின் அரும்பத உரை.

இதே பாடல் கோமூத்திரி என்னும் சித்திரகவியாகவும் அமைவதைக் காணலாம்.





சதி தக னடனாட
திக திதி காண்ஞானா
ததி தா கார்கண்ட
கதி கா கிளர்கான 130

(இது வஞ்சித்துறை. அலங்காரம் - சொல்லணியினுள் சுழிகுளம்.)

நான்கு அடிகளையும் மேனின்று கீழ் இறங்கியும் கீழ் நின்று மேல் ஏறியும் புறம் சென்று உள் முடியப் படிக்கத் தக்கதாகப் பாடப் படுவது என்பது சுழி குளத்தின் இலக்கணம்.

ஆரவாரித்து எழா நின்ற புனல், குளத்தினுள் தனிடத்து அடைந்தது யாதொன்று, அதனைக் கைக் கொண்டு சுற்றி உள்ளே அடங்குவது போலச் சுற்றி, பாவின்

அகத்துப் பொருளைக் கொண்டு அடங்குதல் கழிகுளமாம் என்பது மாறன் அலங்காரம் தரும் விளக்கம்.

இப்பாடலில் அடிதோறும் ஒற்று எழுத்து உட்பட எட்டு எழுத்துக்களே உள்ளமை காண்க!



அம்புக்குறி வழியே படித்தாலும் அதே பாடல் வருவது காண்க. குளத்து நீர் சுழித்து அடங்குவதுபோல் சுழன்று வரும்படி அமைவதால் இது சுழிகுளம் எனப்பட்டது.

இப்பாடலின் பொருள் அரிது. வல்லாருளரேல் கேட்டறிக.

கொந்தார் திருமகிழ் மார்பினர்
செந்தா மரைஅடி சேர்பவர்
தந்தா வளமுரை நாரணன்
அந்தா மந்தனை யாள்வரே 131

(இது சிந்தடி நான்காய் வந்தமையான் வஞ்சிவிருத்தம். துறை - கடவுள் வாழ்த்து. அலங்காரம் - சுவையினுள் கல்வி பற்றி வந்த பெருமிதம்.)

கொந்து - கொத்து. ஆர் - பொருந்திய. மகிழ் - மகிழ மலர். தந்தாவளம் - யானை. உரை - ஆதிமூலமே எனச் சொன்ன. அந்தாமம் - பரமபதம்.

கொத்தாகப் பொருந்திய அழகிய மகிழ மாலை தரித்த நம்மாழ்வாரின் தாமரை மலர் போன்ற திருவடிகளைச் சேர்பவர்கள். யானை ஆதிமூலமே என்று உரைத்த நாராயணனது பரமபதத்தை ஆள்வார்கள் என்பது பொருள்.

வஞ்சிப்பா இனம் முற்றும்

## மருட்பா

வாய்ந்த மகிழ்மாறன் மால்வரைமான் கண் இமைக்கும்
மோந்தகழு நீர்மென் முகைவாடும் — பூந்தளிர்க்
கால்நிலம் படர்தலும் கண்டனம்
மானிட மகளே அணங்குஅலள் மனனே. 132

(இது கைக்கிளை மருட்பா. பகுதி - இயற்கை. துறை - தெளிதல். அலங்காரம் - சந்தயத்தினுள் நிச்சயாந்தம்.)

இயற்கைப் புணர்ச்சியுள் தலைவன் முதன் முதலாகத் தலைவியைக் கண்டு இவள் தெய்வமகளோ என்று ஐயுறு கின்றான். பின்னர் கண்இமைத்தல் முதலிய குறிகளால் தெய்வமகள் அல்லள், மானிட மகளே என்று தெளிவதாக அமைவது தெளிதல் என்னும் துறையாகும்.

புறநிலை வாழ்த்து, கைக்கிளை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்னும் நான்கு பொருள்கள் பற்றி வெண்பாவாகத் தொடங்கி ஆசிரியப்பாவாக முடிவது மருட்பா என்பர்.

வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்

என்பது இலக்கணம்.

இப்பாடலின் முதல் இரண்டடிகள் வெண்பா. பின் இரண்டடிகள் ஆசிரியப்பா.

மால்வரை - பெருமலை. மான் - தலைவி. கழுநீர் - ஆம்பல்மலர். முகை - மொட்டு. படர்தல் - நடத்தல். அணங்கு அலள் - தெய்வமகள் அல்லள்.

மாறனது மலையில் கண்ட இவளின் கண்கள் இமைக் கின்றன. இவள் மோந்த ஆம்பல் மலர் மொட்டுக்கள்

வாடுகின்றன. தளிர் போன்ற பாதங்கள் பூமியிற் படிந்து நடக்கின்றன. ஆதலால் இவள் தெய்வமகள் அல்லள். மானிட மகளே என்று அறிவாய் மனமே என்பது பொருள்.

தெய்வ மகளாயின் கண் இமைப்பது முதலியன இரா என்பது கருத்து.

தேவர் பெருமான் திருப்பால் கடல் கடைந்தோன்
மூவர் எனவாம் முதல்வன் அனைத்துயிர்க்கும்
காவல் புரிவான்நிற் காக்கவே யாவர்க்கும்
தண்ணளி புரிமகிழ் மாஅல் தநியரின்
ஒண்ணிதிச் செல்வம துடன்நீ
மண்மிசை வாழி மதிநலம் தழைந்தே. 188

(இது புறநிலை வாழ்த்து மருட்பா. திணை - பாடாண். துறை - புறநிலை வாழ்த்து. அலங்காரம் - வாழ்த்து.)

இப்பாடலின் முன் மூன்று அடிகள் வெண்பா. பின் மூன்று அடிகள் ஆசிரியப்பா.

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.

தொல். 367

என்பது புறநிலை வாழ்த்தின் இலக்கணம்.

மூவர்என - பிரமன், திருமால், சிவன் என்று கூறும்படி. நிற்காக்க - நின்னைக் காக்கட்டும். தண்ணளி - கருணை. மால் தநியர்-மால் அடியாராகிய நம்மாழ்வார். ஒண்ணிதிச் செல்வம் - சங்கநிதி பதுமநிதியாகிய செல்வங்கள்.

தேவர் தலைவனும் பாற்கடல் கடைந்தவனும் மூவர் என்னும்படி வாழ்கின்ற முதல்வனும் அனைத்துயிர்க்கும் காவல் புரிவானும் ஆகிய திருமால், உன்னைக் காக்கட்டும். கருணை புரிகின்ற மகிழ மாலையணிந்த திருமால் அடியார் ஆகிய நம்மாழ்வாரைப்போல இரு நிதிச் செல்வத்துடன் பூமியில் அறிவுச் செல்வமும் பெற்று வாழ்வாயாக!

பொய்தீர் புலவிர்காள் மாறன் பொருளுரைதேர்ந்து
எய்தீர்எய் தாதும் இருந்திலீர் - மெய்யாக
இன்பமுடன் துன்பம் இழவுபேறு என்பவைதாம்
முன்புஇழைத்த ஊழான் முறைபிறழாது - என்பதுஉறீர்.
மானிடம் பாடி மதியாது பொய்சொல்லி
ஈன இளிவரவால் எற்றுண்டு – போனதுநாள்
கூற்றுவன் செய்யும் கொடுமையும் தீநரகின்
ஆற்றலவை கேட்டும் அடங்கலீர் - பாற்கடற்
பூரணன் மலர்மகள் புரவலன் அகில
காரணன் வடவேங் கடவன்
நாரணன் கழல்இனிப் பரவுமின் நயந்தே[1] 134

(இது வாயுறை வாழ்த்து மருட்பா. திணை - பாடாண். துறை - வாயுறை வாழ்த்து அல்லது பொருள் மொழிக் காஞ்சி(எனின்). அலங்காரம் - சுவையினுள் கல்வி பற்றிய பெருமிதம்.)

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குத லின்றி வழிநனி பயக்குமென்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.

தொல். 1369.

என்பது வாயுறை வாழ்த்தின் இலக்கணம் மெய்யுணர்ந்தோர் கண்ட பொருள் இது என அதன் இயல்பு உணர்த்தியது பொருள் மொழிக் காஞ்சி எனப்படும்.

பொருளுரை - திருவாய் மொழி. எய்தீர் - மாறனை அடையுங்கள். இழவுபேறு - இழப்பதும் பெறுவதும். உதீர் - அறியுங்கள். பரவுமின் - வழிபடுங்கள்.

புலவீர்! மாறன் பொருளுரை தேர்ந்து எய்தீர்! இன்பம் துன்பம் இழவுபேறு என்பன ஊழ்வினையால் முறை பிறழாது என்பதை அறியுங்கள். மானிடம் பாடிப் பொய் சொல்லி இவ்விவரவால் மொத்துண்டு வாணாள் போனது. இயமன் செய்யும் கொடுமையும் நரகின் வலிமையும் கேட்டும் அடங்காமலிருக்கின்றீரே! பாற்கடல் பூரணனாகிய நாரணன் திருவடிகளை இனி வழிபடுங்கள் என்பது பொருட் சுருக்கம்.

திருமால் பரன்எனவே தேற்றுதற்குஅன் பாக
வரும்ஆ ரியன்தனைஇம் மண்மேல் புலவீர்
ஒருமா னிடன்என்று உணராது அவன்எம்
பெருமானாம் என்றுஉற்று[1]அப் பெம்மான் அருள்கூர்
பத்தர்தம்[2] அடியிணை பரவுமின் அதுவே
உத்தம இலக்கணம் உரைசால்
முத்தியை விளைக்கும் முயற்சியும் அதுவே[3] 185

(இது செவி யறிவுறூஉ மருட்பா. திணை - பாடாண். துறை - செவியறிவுறூஉ. அலங்காரம் - அவையிலுள் கல்வி பற்றிய பெருமிதம்.)

செவியுறை தானே
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடன்எனச் செவியுறுத் தற்றே

தொல். 1371

என்பது செவியறிவுறூஉவின் இலக்கணம்.

---

1. என்று உணர்ந்து. 2. பத்தரது. 3. அஃதே.

தேற்றுதல் - தெளிவித்தல். ஆரியன் - ஆசான். எம்பெருமானாம் - திருமாலேயாவான்.

புலவீர் திருமாலே பரன் என்று தெளிவிக்க வரும் ஆசானை மானிடன் என்று உணராமல், அவனே திருமால் என்று அவனைச் சேர்ந்து அவன் அருள்கூர்ந்த அடியார்களின் திருவடிகளைத் தொழுங்கோன். அப்படித் தொழுவதுவே உத்தமமான இலக்கணமாகும். (நீங்கள் கற்கும் இலக்கணம் உத்தம இலக்கணம் அல்ல) முத்தியைத் தரும் முயற்சியும் அதுதான் என்பது பொருள்.

கருங்கடல் உடுத்த
காமர் திரு நிலமுதலா
வருங்கடன்மூ வுலகினையும்
வரம்பில்பெரு மேனியொடும்
ஒருங்களந்துஅன் றகத்தடக்கி
*ஓவாத உவகையுடன்
பெருந்தகைய மாவலியைப்
பிலம்புகவன் சிறைஇருத்திப்
பொருந்து அமரர்க்கு அருள்கூர்ந்த
பொன்னடித் தாமரையோய்!

(இஃது ஐந்தடித் தரவு. இதனுள் ஆசிரியஅடி வஞ்சியடி வெண்பாவடி கலியடி என்னும் நான்கு (வகை) அடியும் வந்து தளை ஏழும் விரவியதூஉம் கண்டு கொள்க.)

அழகிய அரங்கநின் அவிர்பொலங் கழல்புனை
கழல்புரிந் தருளிய கருமம்அஃ தொன்றோ!
பழமறை பராய பான்மையில் பவித்திரத்
தழல் வளர்த்து ஆகுதி தான்தரு கவுதமன்
வெற்பின்நற் சிறைகுறை குலிச வேந்தனில்
இற்பழி எய்திய அகலிகைக்கு ஈந்த
கற்படி மத்தினைக் காமர்
பொற்படி வமதாய்ப் புரந்ததொன் றுளதால்.

(இஃது எட்டடி எருத்தம். இதனுள் ஆசிரியத் தளைகளும் வெண்டளைகளும் கலித்தளைகளும் விராய் ஈற்றயலடி முச்சீராய் வந்தது காண்க! இதனை ஒரு சார் ஆசிரியர் நேரிசையாசிரியம் என்ப.)

அஃதான்று

(இஃது ஒழியசை)

உலகுயிர் தழைதர உறுபதி ரதியினை
நிலமிசை யுறநிறு வியும்உத வினவே!
மலர்மகள் மகிழ்தர மிதிலையில் வரனொடு
சலமிகு தனுஇற மிதித்தலை மையவே!
அலம்வரு படிதன்முன் னவன்என அணிநகர்
நலனுற உடன்உறை தருநசை யினவே!
பலகலை உணர்வொடு பரன்நிலை முழுதுணர்
புலவனொடு எழுகென எழுபுது மையவே!

(இவை நான்கும் எண்சீர் அராகம்)

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

பார்த்தன்கதழ் பரிபண்ணமை
தேர்த்தட்டினில் தேர்ந்துஅஞ்சலித்து
ஏத்துஅன்பினில் தன்பால்இடு
பூத்தும்பையது அரனார்தமது
எழில்கூர்
குழவித் திங்கட் தொழுந்தினைச் செருகும்
தழல்புரை குடிலச் சடிலத்து
அழகுறக் காண்பது அளித்ததும் அதுவே!

(இது நான்கடியாய் 'எழில்கூர்' என்றும் தனிச் சொல் பெற்று மூன்றடி நேரிசையாசிரியச் சுரிதகத்தால் வந்த குறளடி வஞ்சிப்பா)

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

மிறைபயில் கொடிய விடம்துளி குறுந்துளைப்
பிறைபுரை எயிற்றுப் பேழ்வாய்க் கட்செவி
நிறையழ லுயிர்ப்புடமிழ் நேர்நுண் கவர்நாக்
கறைமிடற்று அரவம் கலங்கிக்
குறையுயிர் படநடம் குனித்ததொன் றுளது!

(இஃது ஐந்தடி நேரிசை யாசிரியம்)

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

ஒருகுடை நிழற்கீழ் இருநிலம் புரந்த
குருகுலத் தவர்தம் குலக்கொழுந் தெனலாம்
திருவுத ரத்தினுள் செறிந்துறை கருப்பம்
இருந்தை யாய்இரு நிலத்துற
அருந்தவ மழவென அளித்ததொன் றுளதால்.

(இதுவும் ஐந்தடியாய் வந்த நேரிசை யாசிரியம்)

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

மாதுலன் ஆகிய வஞ்சனைக் கஞ்சனை
மூதுல குட்கொள் முதுமொழி தேர்ந்துணரா
ஆதுல னாம்என்று அவன்பொன் முடிஉதைத்திட்டு
டோதும்நற் செய்கைஒன்று உண்டு.

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

கூற்றுவனும் அஞ்சக்
கொலைத்தொழில்கூர் கூற்றமெனும்
நூற்றுவர்க்கு முன்னோன்முன்
நோற்றபல நோன்புடைய
ஆற்றலுறும் ஐவர்
சகாயன்எனா அன்றுதூது
ஊற்றமுறச் சென்றதும்ஒன்
றுண்டு.

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

பகடு தவழ்நடைசால் பண்பிதென மாயச்
சகடு தனைஉதைந்து சாய்த்ததுடன் அண்ட
முகடு பொதிமருதம் மூண்டுதைத்து மூலத்து
அகடு கிழித்ததும்ஒன் றுண்டு.

அஃதான்று

(இதுவும் ஒழியசை)

கட்கடைதீச் சிந்தக்
கறுவுகொள்வன் னெஞ்சினொடு
நட்புடையோர் முன்னர்
நவையுரைத்தோன் மன்னுயிரை
விட்புலமும் கொண்டாட
வீழ்பொழுதில் வான்சபையுள்
உட்கொண் டருளியதொன்
றுண்டு.

(இவை நாலும் ஒழியசை புணர்ந்துவந்த கொச்சகம். இவை ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசைப் பரிபாடல் வெண்பா)

நாட்டிய கடவுளர் நலனுறச் சென்னியில்
சூட்டியது அந்தத் துணையடிப் பூ

வீட்டியல்பு உணர்ந்த விண்ணவர் சென்னியில்
பூட்டியது அந்தப் பொன்னடிப் பூ

தனைநிகர் தான்எனும் சதுமறை தலையுறப்
புனைவதும் அந்தப் பொலங்கழற் பூ.

வினைவியங் கோள்புரி விழுத்தவம்கூர்ந்தோர்
அனைவரும் முடிக்கொளல் அவ்வடிப் பூ.

செக நீர்வளி தீ வெளி எனாப்
புகழ்புலன் பூத்தது அப் புனையடிப்பூ

அகில உயிர்களும் அவ்வுயிர்க்கு உறையுளும்
பகர்திறத்து ஈன்றதுஅப் பாதப் பூ.

(இவையாறும் பேரெண். இவற்றுள், கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து முட்டடியின்றிக் குறைவு சீர்த்தாகியும் சொற்சீரடி வந்தவாறு காண்க.)

எனவாங்கு

(இது வழியசை தனிச்சொல் என்பதும் இது)

இத்திறத் தனவாம் இறைவநின் இணையடிப் பொற்பூ
முத்திறத்து இருதிற முயற்சியர் முதலாம்
எத்திறத் தெவரே புகழினும்
அத்திறத்து அதற்குஅதற்கு அமைதிறத் தினவாம்.

(இது முதலடி ஐஞ் சீரான் வந்த நேரிசை யாசிரியச் சுரிதகம்)

அதனால்

(இதுவும் தனிச் சொல்)

முக்குணத்தினுள் முற்குணத்தின!
பொற்புடைக் கருட வாகன!
வரிவளை இடத்த!
வலன்உறை நேமிய!
கரிசொலவந்த கருணை நாரண!
உயர்வற உயர்நல முதல்வ!
ஒருதெச ரதன்அருள் புதல்வ!
திருவுறை மார்ப!

(என இவை இடை எண்ணும் அளவெண்ணும் சிற்றெண்ணும் தலைதடுமாறியும் வந்தன.)

என யாம்

(இதுவும் தனிச்சொல்)

பூரணநாதநின் பொன்னடி போற்றுதும்
பார்புகழ் மாறர் பராங்குச ஆணையை
வாழிய தாக வளர்த்தருள் கெனவே
ஊழிதோ றூழி உவந்து. 136

(இஃது நான்கடி இன்னிசை வெள்ளைச் சுரிதகத்தால் இற்றது.)

இது,

"பரிபா டல்லே தொகைநிலை விரியின்
இதுபா என்னும் இயல்நெறி யின்றிப்
பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப"
(தொல். செய். 120)

எனவும்,

"கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்
காமம் கண்ணிய நிலைமைத் தாகும்"
(தொல். செய். 121)

எனவும்,

"சொற்சீர் அடியும் முடுகியல் அடியும்
அப்பா நிலைமைக்கு உரிய ஆகும்"
(தொல். செய். 122)

எனவும்,

"கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து
முட்டடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்
ஒழியசை யாகியும் வழியசை புணர்ந்தும்
சொற்சீர்த்து இறுதல் சொற்சீர்க்கு இயல்பே"
(தொல். செய். 123)

எனவும்,

"உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்"
(தொல். செய். 233)

எனவும்,

சொன்ன முறையே பரிபாடல் உறுப்புச் சிதைவின்றி வந்தமை காண்க!

அற்றேல், தொல்காப்பியனார், 'செப்பிய நான்கும் தனக்குறுப்பாக' என்று கூறவும் இப் பரிபாடலகத்து எருத்து என்பதோர் உறுப்பினையும் கூட்டி ஐந்தாகக் கூறியது என்னை எனின், அஃதே, நன்று சொன்னாய்!

"தரவே எருத்தே அராகம் கொச்சகம்
அடக்கியல் வாரமொடு ஐந்துறுப் புடைத்தே"

என்பது அகத்தியம் ஆதலின், எருத்தம் என்பதனைத் தரவு என்று ஒரு சார் ஆசிரியர் கூறவும், அகத்தியம் உணர்ந்த ஒரு சார் ஆசிரியர், பாட்டிற்கு முகம் தரவாதலானும், எருத்தம் என்பது கழுத்தின் புறத்திற்குப் பெயர் ஆதலானும் அல்

உறுப்புத் தரவைச் சார்ந்து கிடக்க வேண்டும் என்பதானும், எல்லா நூலிற்கும் அகத்தியம் முந்துநூலாகலானும் அகத்திய னார் நோக்கத்தோடும் ஐந்துறுப்பாக்கினார் என உணர்க!

அஃதாக, இதனுள் எண் விராயது என்னை என்னின்,

"கொச்சக வகையின் எண்ணொடு விராய்
அடக்கிய வின்றி அடக்கவும் பெறுமே"

என்பதனால் விராயது அறிக!

"காமம் கண்ணிய நிலைமைத்து ஆகும்" எனவே அறத்தினும் பொருளினும் வாராது எனக் கூறிய பரிபாடலை இச் செய்யுளுடையார் வாழ்த்தியலாகக் கூறியது என்னையோ எனின்,

"வாழ்த்தியல் வகையே நாற்பாற்கும் உரித்தே"
(தொல். செய். 109)

எனச் சிறப்பு விதி ஓதினமையால், நான்கு பாவினுள்ளும் பரிபாடல் வெண்பா யாப்பிற்று ஆதலால், கடவுள் வாழ்த் தாகியும் வரப்பெறும் என்னும் முதல்நூல் ஆசிரியர் நோக்கம் பற்றிச் சங்கத்தார் பரிபாடல் கூறிய வகையாற் கூறினார் என உணர்க!

"ஆயிரம் விரித்த அணங் குடை அருந்தலை" என்னும் பரிபாடல் தரவின்பின்,

"எரிமலர் சினைஇய கண்ணை! பூவை
விரிமலர் புரையும் மேனியை! மேனித்
திருஞெமர்ந்து அமர்ந்த மார்பினை! மார்பில்
தெரிமணி விளங்கும் பூணினை! மால்வரை
எரிதிரிந் தன்ன பொன்புனை உடுக்கையை!
சேவலங் கொடியோய்நின் வலவயின் நிறுத்தும்
ஏவலும் பணிந்தமை கூறும்
நாவல் அந்தணர் அருமறைப் பொருளே"

என்பதும் எருத்தம்,

இதனை ஒரு சார் ஆசிரியம் என்றும் கூறுவர். கூறினும் இவ் 'அழகிய அரங்க' என்னும் எருத்தத்துத் தளைஏழும் வந்தன ஆதலால் இவ் எருத்தத்தை நேரிசை ஆசிரியம் என்றல் பொருந்தாது என உணர்க!

திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து.

காமர்திருநிலம் - அழகிய சிறப்புடைய பூமி. கடன் - முறைமை. கழல் - வீரக்கழல் என்னும் காலணி. கழல் - திருவடி. கருமம் - செயல். பராஅய - துதித்த. பான்மை - தகுதி. பவித்திரம் - தூய்மை. தழல் - நெருப்பு. வெற்பு - மலை. குலிச வேந்தன் - இந்திரன். கற்படிமம் - கல் வடிவம். காமர் - அழகிய. புரந்தது - காத்தது. தழைதர - தழைக்கும்படி. பகிரதி கங்கை. தனு - வில். அலம்வரு - துன்பமுற்ற உறைதரு - வாழ்கின்ற. நசையின - விருப்ப முடையன.

புலவன் - மழிசை மன்னன். கதழ் - விரைவு. பண் அமை - அணி செய்த. பூந்தும்பை - தும்பைமலர். தழல் புரை - நெருப்புப்போன்ற. சடிலம் - சடை. காண்பது - காணும்படி. மிறை - அச்சம். துனி - துனிர்க்கின்ற பிறை புரை - பிறைபோன்ற. பேழ்வாய் - பெரியவாய். கட்செவி - பாம்பு. கறைமிடறு - படமுடைய கழுத்து. குனித்தது - நடித்தது.

உதரம் - வயிறு. இருந்தை - கரிக்கட்டை. மாதுலன் - மாமன். முதுமொழி - அறநூல்கள். ஆதுலன் - வறியவன்.

நூற்றவர்க்கு முன்னோன் - துரியோதனன். பகடு - காளை. சகடு - சகடாசுரன். மருதம் - மருதமரம்.

கறுவு - சினம். நவை - பழிச்சொல். விட்புலம் - விண்ணுலகம். வினைவியங்கோல் புரிதல் - வினையை ஏவல் புரிகின்ற. புலன் - உணர்வு. உறையுள் - இருப்பிடம்.

முற்குணத்தின - முதன்மைக் குணமுடையன. இடத்த - இடப்பக்கம் கொண்டவள். நேமிய - சக்கரம் உடையவனே! கரி - யானை. முத்திறத்து இருதிற முயற்சியர் - பராங்குச ஆணை - பிறமதத்தராகிய ஆனைகளை அடக்கும் அங்குசம் போன்ற கட்டளை.

பொன்னடித் தாமரையோய்! நின் திருவடிகள் செய் தருளிய செயல் ஒன்றோ! கவுதமன் மனைவியின் கல்லுருவம் போக்கி அழகுருவம் தந்தது. கங்கையைப் பூமியில் நிறுவியது. மிதிலையில் வில் ஒடியுமாறு மிதித்தது. பரதனுடன் அயோத்தியில் பாதுகையாகத் தங்கிய விருப்பினது. மழிசை யாழ்வார் எழுகென உடன் சென்றது.

பார்த்தன் உன் மேல் சூடிய தும்பை மலர்களைச் சிவன் சடைமுடிமேல் காணச் செய்தது.

காளியன் மேல் நடனமாடியது. உத்தரையின் கருப்ப மாகிய கரிக்கட்டையைப் பரீட்சித்துவாக்கியது.

கஞ்சன் முடியில் உதைத்தது. பஞ்சவர்க்குத் தூது நடந்தது. சகடத்தை உதைத்தது. மருதம் சாய்த்தது. சபையில் இகழ்ந்த சிசுபாலனையும் ஆட்கொண்டருளியது.

தேவர்கள், நித்தியசூரிகள், நால்வேதங்கள், தவத் தோர்கள் ஆகியோரின் சென்னியிற் பூட்டியது.

ஐம்பூதங்களைப் பூத்தது. அகில உயிர்களையும் அவ் உயிர்கள் வாழ்வதற்கு இடமான உலகத்தையும் பூத்தது உன் திருவடிகள்.

எத்திறத்தவர் புகழ்ந்தாலும் அத்திறத்துக்கு ஏற்புடைய தாகும் உன் திருவடிகள்.

பூரண நாதனே! உன் பொன்னடியை மாறனின் பராங்குச ஆணையை என்றும் வாழ்வதாக வளர்த்தருள்க என்று வணங்குகின்றோம் என்பது பாடலின் பொருட் சுருக்கம்,

யாஅர் வாழ்வார் யாஅர் வாழ்வார்
எனும் உல கனைத்தும் ஈறி லாநிலை
உருபொடு சொருபின் ஆஅ னாதே
மாயையின் விரிந்த முதல்மான் ஒன்றும்
யான்எனும் தொந்தமும் அதனின் எய்திய
புலன்ஐந்தும் ஆகி அவையின்உற் றவுமான
அண்டமும் அலகில வடிவமும் ஆன்மா
முழுவதும் அயன்முதல் அமைந்திடும் தாமாய்
பொழுதெதிர் ஒருபுனல் உம்பரின் ஆமால்
பொன்னியுள் அமர்ந்தவன் அல்லால்
மாயா ஓர்தனி மழவென மகிழ்ந்து.

(இஃது ஆசிரியத் தளையாலும் வெண்தளையாலும் வந்த பதினோரடித் தரவு.)

நூல்பல தாமும் நுணங்கும் ஆரணப்
பாவின் நுட்பமும் மங் காரெனும்
சால்புணர் புலவிர்காள்! முந்திய முதல்வருள்

(இது மூன்றடியான் வந்த நிலைமண்டிலவாசிரியம்)

ஓஒ! உணர்ந்தஈது உணர்கிலர் வெள்ளை யறிவுட்
புணர்ந்தோர் பொருட்டுஅங் கிரங்கு புன்மையர்
புணர்ந்தோர் பொருட்டுஅங் கிரங்கு புன்மையும்
உணர்ந்தேன் உம்மையின் இழைத்த ஊழ்என்று
ஆஃது அலாது பலவாய்த் தொகுத்த
ஆன்மா முழுதினும் நிற்பது அறிகிலர்.

(இதுவும் ஆறடியான் வந்த நிலைமண்டில ஆசிரியம். இதன் முதற்கண் நின்ற 'ஓஒ' என்பது

"சீர் கூன் ஆதல் நேரடிக்கு உரித்தே"
(தொல். செய். 49)

என்பதனால் 'தேமா' எனச் சிறப்பின் 'ஓ' அளபெடுத்துச் சீர் கூனாய் முதற்கண் நின்றது. அதனோடு ஐஞ்சீரடி ஆக்கினும் இழுக்காது.

"வெண்தளைவிரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளஎன மொழிப"
(தொல். செய். 63)

என்பதனால் கொள்க.)

காயம் கழிதருங் கால்தன் உருபு
ளாகவே யொருங்குலவ காவ லின்புறு
மேன்மையே சற்றும் உறுகிலர் அதனொடும்
மீளவே அனைத்தும் எழுபான் மையுற
நான்முகன் தனது செயல்இது என்னத்
தாணுவாய்ப் படிமத்து அமைத்தபான் மைகளும்
வாழப் பருவத்து ஈரமில் சூரத்
தினமீறுந் தானவர் இடும்பையிற் பாறுவார்
பாறும் இடரே கண்ண்
டாளின் னூங் காளியாய்த் தூணின் ஊறல்.

(தன்தளையானும் வெண்தளையானும் வந்து பந்தடித்தாய் ஈற்றயலடி மூச்சீராய். நேர் நேர் நேர் எனக் 'கண்ண்' என ஒற்றளபெடையாய் இற்ற நேரிசையாசிரியப்பா. 'கண்ண்' என்பதனை ஒற்றளபெழாது சொற் சீராக்கினும் இழுக்காது.)

தோன்றி முன் அங் கவனுடல் போழ்ந்ததும்
அறிகில் லாதோ மன்பதனை யெனுமவைமன்

அவனிற் பாரி லல்லது பயந்த
அடல்பெருகு சிரம்கரம் ஒருபது இருபது உளான்

(இவையிரண்டு விகற்பத்தான் வந்த ஈரடி இரண்டு அம்போதரங்கம்.)

தறுகணாளன்
மத்தமடவன்
மூர்க்கர் முன்னன்
கண்டா கண்டன்
நிருதர் பெருமான்
மதுகை யாளன்

அன்பில் தீம்பன்
வெண்பொன் வெற்பைக் கிளைத்த முன்பார் தோளன்
மருப்புக்கள் உழும்உரன்
தீக் கக்கும் நேத்திரன்
வானிடி எனத்தொனி மேய சொல்லன்
தமனார் நடுங்க அமர்புரி பொருநன்
வானோர் நடுங்க வேல்விடும் மறவன்

(இவை ஒருசீர் முதலாய சிற்றெண்ணும் அளவெண்ணும் விராய் வந்தன.)

களித்த உள்ளமொடு கணக்கில் நோன்பன்
தளித்தபல் வரத்துடன் அமையா யாக்கையன்
தன்னைச் சமர்முகத்தின் ஒர்களை யதுதொடா
மன்னும் உயிர்டன் வலகமையும் நினைகிலர்

(இவை ஈரடி இரண்டு அம்போதரங்கம்)

அதற்பின் அகன்றிருந்த தேவி அடித்துணை
தொழுதனள் துதித்தெழு பொழுதுஅருள் செய்யா
அடைக்கலம் என்றவ னூராருண்மை யோரார்.

(இது மூன்றடி நிலைமண்டில ஆசிரியப்பா)

அமரிடை வசந்தன்மீ வானம் தோய்ந்திடும்
உடல்உயி ருடன்வர நின்று
தமர்தொழத் திண்தேர் நடைகற்ற தனைஉறார்.

(இது மூன்றடி நேரிசை யாசிரியப்பா)

கமையடைந் தொடுங்குவான் விருந்தறைந் திடுகாலைத்
தமையன்வந் தனன்எனப் பரதனது உயிர்தந்தான்
அமைவுகண்டு உடன்உண்பான் அருள்வைத்த குணன்உறார்.

(இது மூன்றடி நிலைமண்டில ஆசிரியப்பா)

பின்னும்

(இது ஒழியசை. தனிச்சொல் என்பதும் இது)

பொதுவர் மடவரல் நற்றாய் என்னும்
விதியின்அன் பால்முன் வெளிவரல் தேற்றார்.

(இதுவும் ஈரடி அம்போதரங்கம்)

தாய்என வனிதையர் படிமம்மேற் கொண்ட
பேயதன் ஆவி அன்றுண்டு போஒய்
மாஅயமுற் றெதிர்க்கும் சாடும் உருள்இற
நோய்வகுத் திழைத்தவன் முடிஉதைந் ததும்உறார்.

(இது நான்கடியாய்வந்த நிலைமண்டில ஆசிரியப்பா)

முடிபடி யுறவகை மொழிபவன் உயிர்தனி
ரடியுற அருள்புரி நிலைமையும் உறுகிலர்

(இது தனியனாக வந்த எண்சீரடியராகம்)

ஆதி நாதன்
வாசு தேவன்
சங் கருடணன்
பைம்பொனின் நிறவன்
பரத்துவ சொருபன்
சொலத்தகு வியூகன்
உரனுடை விபவன்
உயிர்களின் அயணன்
வெளிவரு விமலன்
மறைபுரி அமலன்
உளன் இலன்
உணர்வுற அரியவன்

(என இவை சிற்றெண்)

என்பவை

(இது தனிச் சொல்)

மறையின் மறைகளின் வழிநூல் ஒண்மையின்
இறைநிலை உணர்த்தும் ஏமஆசிரியர் முன்
மதிமருள் நிலையற வழிபடு மதியுற்று
உறவாய்த் திறப்பட உணர்த்தமெய்ஞ் ஞானம்
பிறவாப் பெற்றிகொண் டுணர்ந்திலர் அஃதும்

(இஃது ஐந்தடி நிலைமண்டில ஆசிரியம்)

அதுவே

(இதுவும் தனிச் சொல்)

இனியவர் உயிர்கட்கு இரங்கிஇங் கெவன்என
எனதுயிர் பிழைப்பதற்கு இரங்குத லுடனே
தாமரைத் தவிசிற் சதுமுகன் மேனாள்
ஆநிரை காத்தசிற் றாயரைக் கன்றினைக்
குறுந்தடி தாம்பொடு தீங்குழல் கொம்பு இவை
மாயையின் வானுற வைத்திடப் பண்டையின்
யாவையும் ஆகிமுன் உதிக்கும் திறத்தினன்

(இதுவும் நிலைமண்டில ஆசிரியப்பா)

சுருதி முதல்வன்
சுதம்இல் அமிர்தன்
பரிதி வலவன்
பதுமை கொழுநன்

(இவையும் ஓர் நான்கும் சிற்றெண்)

மீனமும் ஆமையும் ஏனமும் ஆகி
வாமன னாம் மழு வாளியும் ஆனபின்
வருபல தேவன் இவுளியு மாம்அவன்
தருமன் முதலவர் தமது நகர்பெற
நூற்றுவர் கூற்றுவன் நகர்பெற உய்த்தவன்
ஏற்றம துரைத்தும் இறைஞ்சுவ துடனே
பிறவா நெறி பெற வேண்டி
மறவாது அவனை மதிக்கும்என் மனனே. 137

(இது எட்டடியான் வந்து இற்ற நேரிசை ஆசிரியச் சுரிதகம்.)

(இதுவும் திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து. கடவுள் வணக்கம் எனினும் ஆம்.

இது சங்கப் பாடலாய பரிபாடலுள், கடுவன் இளவெயி னனார் பாட்டாய் முதலே மூன்றாவதாய்ப் பெட்ட நாகனாரிசை, பண்ணுப் பாலை யாழாய், "மாஅயோயே மாஅயோயே" என்னும் பரிபாடல் போல எருத்தமும் கொச்சகமும் இன்றி வந்த பரிபாடல்.)

மகானிலிருந்து அகங்காரம் தோன்றி அதனினின்று ஐம் புலன்களாகி அவற்றினின்று தோன்றிய அண்டமும் பல வடிவங்களும் அனைத்துயிர்களும் பிரமன் முதலிய அனைத்தும் அழிகின்ற காலத்தில் நீருழி வானனவும் திமிர் இன்றபொழுது ஓர் ஆலிலையில் அழியாத ஒப்பற்ற ஒரு சிறு குழவியாகப் பொன்னி நதியின் நடுவே அமர்ந்தவன் அல்லாமல், பல நூல்களும் வேதநுட்பமும் அளித்தவர் ஆர் என்னும் சால்பு உணர்ந்த புலவிர்காள். நீர் உணர்ந்த இதனை மற்றவர் உணராமல் அழியும் பொருளுக்கு ஏங்குவர். அப்பொருள் ஊழ்வழி அமைவது. ஆன்மா அனைத்திலும் இறைவன் நிற்பதனை அறியார். நீருழியால் உடல் அழியும்போது, திருமால் தன் உடலிலே ஆன்மாக் களை வைத்துக்காப்பதை அறிகிலர். காலம் வந்தபோது மீண்டும் அவையனைத்தும் படைக்குங் காலம் வர நான் முகனின் செயல் இது என்னும் படி படைத்து. சிவனாய் மீண்டும் அழிக்கும் முறையும், பின்பு நரசிங்கமாய்த் தூணில் தோன்றி இரணியன் உடல் பிளந்ததையும் அறிகிலர்.

பின்னர் போரில் ஒரு கணை விட்டு இராவணன் உயிர் உண்டமையும் அறிகிலர். சிறை மீண்டதே துதித்தெழு பொழுது அருள் செய்து, விடணனுக்கு இலங்கை அரசு அளித்தது தெரிகிலர். போரில் பட்டு உயிர் துறந்து வானம் அடைந்த வாரைத் தலைவன் வசந்தனை உடலுடனும் மீட்டுத் தேர் செலுத்தியதும் அறியார்.

தவம் செய்திருந்த பரதன் முன்தோன்றி, இராமன் வரவு கூறி உயிர் காத்த அனுமனின் உதவிகண்டு, அவனுடன் உடன் உண்ண அருள் செய்த பண்பையும் அறியார்.

ஆயர் மகள் யசோதையை நற்றாயாகக் கொண்டு அவதாரம் செய்ததும் அறியார்.

தாயுருக் கொண்டு வந்த பூதனை உயிர் உண்டு மாயச் சகடம் உதைத்ததையும் அறியார்.

வசைமொழிந்த சிசுபாலனைத் தன் அடியில் சேர்த்ததையும் அறிகிலர்.

அந்த ஆதிநாதனை ஆசாரியரால் மதிமயக்கம்கெடுக்கப் பெற்று வழிபடுகின்ற மெய்ஞ்ஞானத்தை உணர்ந்திலர்.

கண்ணன் அவதாரத்தில், ஆயர் சிறுவர்களையும் கன்று களையும், குறுந்தடி, தாம்பு, குழல், கொம்பு ஆகியவற்றை யும் பிரமன் வானத்திலே மறைத்தபோது, அவை அனைத்தும் தானேயாகித்தோன்றிய திருமால் மீன் முதலிய பல அவதாரம் செய்தவன்; செய்பவன். தருமன் முதலானோர் தம் அரசு பெறுவதற்காக நூற்றுவர்க்கு எமனானவன். அத்தகையவனது பெருமைகளைப் பேசி வணங்கி மறவாது அவனை என் மனம் நினைக்கும்'' என்பது இப்பாடலின் பொருள் முடிவு.

ஈறு - முடிவு. உருபு - வடிவம். சொருபு - இயல்பு. ஆனாது - கெடாது. மான் - மகான் என்னும் தத்துவம். யான் எனும் தொந்தம் - யான், எனது என்னும் இரட்டைகள். அலகில - கணக்கில்லாதனவாகிய. அயன் - பிரமன். மாய்பொழுது - பிரளய காலம். ஒரு புனல் - பிரளயம். உம்பரின் - வானளவும். பொன்னி - காவிரி. மாயா - அழியாத. மழவு - குழந்தை.

நுணங்கும் - நுணுகுகின்ற ஆரணம் - வேதம். கார் - மேகநிறத் திருமால். முதல்வர் - மூவர். உம்மை - முற் பிறப்பு. ஆவஃது - ஆவது, காயம் - உடல். கழிதருங் கால்-கெடும்போது. உருபுகளாக - திருமால்திருமேனியினுள்.

வைகுதல் - தங்குதல். உறுகிலர் - அறிகிலர். எழுபான்மை - படைப்பு. தாஅறு - நிலைபெறு. பாறுவார் - சிதறிபோடு வார். ஆளி - சிங்கம். வைறல் - பிறத்தல். போழ்தல் - பிளத்தல். சிரம் கரம் ஒருபது இருபது உள்ளான் - இராவணன். மத்தம் - மயக்கம். முன்னன் - முதல்வன். கண்டாகண்டன் - முற்பிறவியில் கண்டாகண்டன் என்னும் திருமால் அடியானாக இருந்தவன். நிருதர்பெருமான் - அரக்கர் தலைவன். மதுகை - வலிமை. அன்பு இல் - அன்பு இல்லாத. நிம்பன் - கொடியவன். வெண்பொன்வெற்பு - வெள்ளி மலை. கிளைத்த - பேர்த்த. மருப்பு - திசை யானைக் கொம்புகள். நேத்திரம் - கண்.

தொனி - ஒலி. மேய - பொருந்திய. பொருநன் - போர் வீரன். மறவன் - வீரன்.

நோன்பு - தவம். அமையா - அழியாத. யாக்கை - உடல். சமர்முகம் . போர்க்களம். வகைமை - முறை.

மீவானம் - சுவர்க்கம். தமர் - உறவினர். கமை - பொறுமைத்தவம். தமையன் - இராமன். உயிர் தந்தான் - அனுமன். அமைவு - செயல். பொதுவர் - ஆயர். வெளி வரல் - அவதாரம் செய்தது. தேற்றார் - தெளியாதவர். படிமம் - உருவம். சாடு - சகடு; வண்டி. உருள்இற - சக்கரம் நொறுங்கும்படி. நோய் - இடுக்கண். இழைத்தவன் - சகடாசுரன்.

வசைமொழிபவன் - சிசுபாலன். உறுகிலர் - உணர்கிலர். நிறவன் - நிறமுடையவன். உரன் - வலிமை. அயனன் - தங்குமிடமானவன்.

மறைகளின் வழிநூல் - ஆகமம் முதலியன. ஒண்மை - அறிவு. ஏம ஆரியர் - எங்களின் ஆசாரியர். சதுமுகன் - பிரமன். தாம்பு - கயிறு. கொம்பு - பசுமேய்க்கும் கோல், சுதம் - கேடு. பரிதி - சக்கரம். வலவன் - வலப்புறம்

தரித்தவன். பதுமை - திருமகள். ஏனம் - பன்றி. மழுவாளி - பரசுராமன். இவுளி - கல்கியவதாரம். உய்த்தவன் - அனுப்பியவன். மதிக்கும் - நினைக்கும்.

வேல்விழியிணை எனவினை கூர்த்த
வாலெயிறு என்மணி வாழ்ஒழுங் கினவே.
கன்னலின் குழம்பும் களிகூர் யாழும்
சொல்நலந் தனைவளர் வண்ணம்வாய்ந் தனவே.
கனிதுகிர் இலவ தாகும் தோகாய்!
தனிஇதழ். குழற்கற்றை கார்தோய்ந்தனவே.
மாரன் வன்போர்க்கு உரிய கைச்சிலை
பார வேல்இணை வளைந்துதிரண்டு ஏர்செய்
சால்பினில் வார்கரும் புருவம்தோ ளிணையே.
வாள்நுதற் சந்தமும் வளர்பிறை மாண்பின
பூண்உறு நோக்கிற்கு ஒருபொரு வுளதே!
மறுத்துடைத் தொளிர்முழு மதியே திருமுகம்.
உறுப்பமை துணைமுலை உபயபொற் குன்றே
வள்ளைத் தண்டே வார்கா திணையும்.
ஒள்வளை எனலாம் ஒளிவளர் மிடறே.
கதிர்வளை செறியும் காமர் கைத்துணைக்கு
எதிர்பிறிது இன்றால் காந்த ளிணையே.
சதிருடை என்நிறை தாயபொற் கொடிக்கே.

(இவை பதினெட்டடியாய் முதலடி முதற்சீர் சொற்சீராய் வந்த தரவு.)

கங்கையின் சுழியினைக் கவின்பயில் உந்தியோடு
இங்கிணை என்பதும் இறந்ததொடு ஒன்றே.

இடம்கொள முலைசுமந்து இடுகும் நுண்ணிடை
படம் கொள் அரவெனப் பகர்வதும் பழியே.
பாந்தளின் படம்எனப் பழிப்பன். பழித்தபின்
ஆய்ந்தெழில் அல்குலுக்கு அமைப்பதும் அதுவே.
கொழுங்குளிர் வாழைத் தண்டுஎனக் குறங்கினை
ஒழுங்குற உரைப்பதும் உவமைஅற் றன்றே.
தமனியத் திருமகள் தவிசெனச் சிறந்தவின்
அமர்தரு நளினமும் அணங்கின்மெல் லடிக்கே;

(இவை அஞ்சம் ஈரடி அஞ்சு தாழிசைகள்)

எனவாங்கு,

(இது தனிச்சொல்)

இன்னணம் அவயவம் இயைந்துள அவட்கே
தென்னரங் கேசன் சிலம்பின்ஓர் பொலங்கொடி
மன்னிய லொடுய்வரு மாமெனில்
சொல் நிலத்து இணைஎனத் துணியும் என்மனனே. 188

(இது நான்கடியாய் நேரிசையாசிரியத்தினால் இற்ற சுரிதகம்)

(இதனுள் கொச்சக உறுப்பும் அராகமும் வந்தில. சங்கப் பரிபாடலுள் "கார் மலி கதழ்பெயல் தலைஇ ஏற்ற நீர்மலி நிறைகலன பூமலர்ந்தனவே, தண் ணறுங் கடம்பின் கமழ் தா தூதும் வண்ண" என்னும் பதினாலாம் பாட்டின் நடையவாய் அமைந்தது.

பகுதி - சேட்படை. துறை - அவயவம் கூறல். தோழி முன்னிலை. தலைவன் கூற்று.

முத்துப் பல், யாழ்மொழி, துவர்இதழ் முதலிய அழகிய அவயவம் கொண்ட தலைவிக்கு, அத்தகைய உறுப்புகளைப் பெற்று ஒரு பொற் கொடி இனிய நடை பயின்று வருமாயின்

உவமையாகும் என்று என் மனம் துணிகின்றது என்பது இப் பாடலின் பொருட் சுருக்கம்.

வினைகூர்த்த - கொலைத் தொழில்மிக்க. என்மணி - என்று கூறும் முத்துக்கள். குழம்பு - பாகு. சொல்நலம் - மொழி. துகிர் - பவளம். இலவு - முள்முருக்கமலர். கார் - மேகம். சிலை - வில். ஏர் - அழகு. சால்பினில் - தன்மையில். மாரன் கைச்சிலை - கரும்பு. (தோளிணையும் புருவமும் முறையே மாரன் வில்லாகிய கரும்பையும் வேல் வளைந்து திரண்டு அழகு செய்வதையும் ஒக்கும். இவை எதிர் நிரல் நிறை.) சந்தம் - அழகு. பொருவுளதே - உவமை உண்டோ? இல்லை. மறு - களங்கம். உபயம் - இரண்டு. காது இணை - இரு காதுகள். வளை - சங்கு. மிடறு - கழுத்து. வளை - வளையல். காந்தள் - காந்தள்மலர். நிறைதாய - நிறையக் கவர்ந்த. பொற்கொடி - தலைவி.

உந்தி - கொப்பூழ். அரவு - பாம்பு. பாந்தள் - பாம்பு. குறங்கு - துடை. தமனியம் - பொன். தவிசு - இருப்பிடம். நளினம் - தாமரைமலர். அவயவம் - உறுப்பு.

பொலங்கொடி - பொற்கொடி. இயலொடும் - நடையுடன். துணியும் - நம்பும்.

விழுமிய திறத்துஉரை வெளிறிலா மேதை கூர்த்து
ஒழுகலைத் துடன்இகந்து ஒரீஇயஓண் சுடரினை
இதுபொருள் எனத்தெரித்து ஈறில்நுண் ணுர்வுடைப்
புதுமொழி முகத்துஅகப் படுத்திய புலமைசால்
காமரு ஞானமும் காட்சியும் கருணையும்
தாம்ஒரு தலையாத் தனியுருப் புணர்ந்த
எம்கோன் திருமகிழ் மார்பினன் இமையவர்
தம்கோன் தமிழ்மலைச் சந்தனப் பொதும்பர்க்கு

ஒருதனி விளக்கம தாய்உருத் துவந்த
திருஅமர் மாணெழில் தேசுடை மடவோய்!
நுமர்புறந் தனராய் நோக்குமர் சீறூர்க்கு
எமர்புறந் தனராய் ஏழுறு பேரூர்
தன்னுயிர்க்கு ஊறு தருபடர் உறீஇப்பிற
மன்னுயிர்க்கு உறுகண் மனக்கொளார் மனத்தினைப்
பொருளினுட் பொருள்எனப் புனிதநூல் குறித்த
அருள்கெழு தகைத்தாய் அகலாது அண்ணியது
எவ்வளவு அணித்தெனும் இந்நிலம்
அவ்வளவு எனும்நிலை மையின் அணி மைத்து.

(இது பதினெட்டு அடியான் வந்த நேரிசை யாசிரியம்)

அஃதான்று

(இது ஒழியசை. தனிச்சொல் என்பதும் இது)

சாந்தியும் வாய்மையும் கருணையும் கவிகையும்
வாய்ந்தநன் குலனும் மறைமுத லியஉரை
தோய்ந்துஅறி வுடைமையும் தூய்மையும் ஒழுக்கமும்
சாந்தியும் நிறையும் பொறையும் சால்பும் என்று
ஆய்ந்துள இவற்றின் ஒன்று அமைதியது இலவாய்
மாந்தர்என் றிடுகுறி யுடைமை மையராம்
நரரையும் துதியா நன்னிலை நிலைஇப்
பரனுடை பாராட் டியமதிப் பாவலர்
வரனுடை நாவும் மறுவில் வாய்மையும்
உரவுநீர்க்கடல்சுலாம் உரனுடை உலகம்
எப்படிக்கு அணித்தா யினதுஎனும்
அப்படிக்கு அணித்தா யினஅணி மைத்து.

(இது பன்னிரண்டடியான் வந்த ஆசிரியம்)

அஃதான்று

(இதுவும் தனிச்சொல்)

மணியினும் பொன்னினும் புனைபொலந் துகிலினும்
அணிதிகழ் செல்விபெற்று அலர்நறு மலரினும்
மான்மதக் குழம்பினும் வாசம்ஓ ரைந்தினும்
ஆனவை உறுதகைத்து அன்றெனத் துறந்தே
வாய்மையின் அகம்தூய் மையராய் வடிவமும்
தூய்மையுற் றனராய்த் துறவறத்து ஒழுகுபு
செந்நிறப் பிருதிவித் திருவுடை யாடையும்
உய்ந்நிலைத் தெனப்பொறித் துளவிலாஞ் சனையும்
திருமணி வடமும் தியான சிந்தையில்
பொருளுரை புலப்படப் புலப்படு திருமணும்
மேவிய பெருந்தகை மையின்அடி விளக்கிப்
பூவின்உள் ளவள்பணிப் பினிற்புரிந் தூட்டிய
சேடம தருந்தித் திருமகள் கோன்புகழ்
பாடியா டியபத் தியர்திரு மேனிக்கு
அருந்தவக் காந்திஎவ் வளவு அணித்து அதுபோல்
திருந்திய சிறப்பினில் செறிஅணி மைத்து.

(இது பதினாறு அடியான் வந்த நிலைமண்டில ஆசிரியம்)

அஃதான்று

(இதுவும் தனிச்சொல்)

தமராய் உள்ளவர்
தமைத்தொடர்ந்து உயிரொடுஅங்கு
அமர்புரி மிடிநிரப்
பேஎன்று ஆம்இடர்

கடிதல் எனதென விளைவிழை
பவன்முய லினுள்உளன் இன்புற்றே
அளவர தமுறை தருதிரு
வும்போன்று அணித்து.

(இது முதலடியிரண்டும் அளவடித்து ஆகவும், மூன்றாம் அடி அறுசீர் அடி முடுகியலாகவும், நான்காமடி முதல் மூச்சீர்முடுகியலாகிய ஐஞ்சீரடியாகவும் வந்த ஆசிரியம் என்னை? "காமர் கடும்புனல்" என்னும் குறிஞ்சிக் கலியுள்ளும் இவ்வாறு வந்தமை காண்க!

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியும் உளவென மொழிப"
"அறுசீ ரடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வருஉம் நேரடி முன்னே"
தொல். பொருள். செய். 63.64
என்பதனாலும் அறிக!

இசைதிசை திசைநசை பெறஉற
வசை தீர்நிதியிழை பண்பால்
அறனுடன் உயர்நலன்
எமையும்தோய்ந் தருள்கென
நாளும்
யாமே நீங்கலம்
எனஉரி மையவாத்
தாமே தகஎதிர்
தன்மைய ஆகிக்
கூடிய குறியுடைத்
தெனலாய்
நாடுடன் பீடுடை
நகர்அணி மைத்து.

(இது ஆறடித்தாய் முதலடி அறுசீரடி முடுகியலாகவும் இரண்டாமடி இருசீர் முடுகியலாகவும் நாளும் என்னும் சொற்சீரடியும் பெற்று, ஏனையடிகள் அளவடியாகவும் ஈற்றயலடி முச்சீராகவும் வந்த நேரிசை ஆசிரியப்பா.)

பிறப்பெனப் பெயரிய பிணிக்கொரு வித்தாய்
அறப்படிறு இழைக்கும் அவாவெனும் அவிச்சையை
நிலையுதல் இவைநிலை யுதல்இல இவைஎனும்
கலைபல உணர்ந்த காட்சியின் நீக்கி
ஐயுணர் வெய்திய அமைதியின் அழுக்கறும்
மெய்யுணர் வடைந்த விச்சையோர் உள்ளத்து
இடைய றாத்திறத்து ஈண்டிய இன்பம்
அடைதரு நிலைமைய தெனஅணி மைத்து.

(இஃது எட்டடியாய் வந்த நிலைமண்டில ஆசிரியப்பா)

இருநிலத்து உழுவல்அன்பு எய்தும்என் இதயமும்
திருவுரு நலன்இவை சிறத்தலின்
பொருவரு நின்னையும் போன்றுஅணி மைத்து.

(இது மூன்றடியான் வந்த நேரிசை ஆசிரியப்பா)

மூவுரு முக்குணம் முத்தொழில் எனஇசைத்து
யாவையும் தனவா இசைந்தமை அன்றியும்
ஓர்உரு ஒருகுணம் ஒருதொழில் எனதெனும்
நாரணன் உலவா நன்னர்மன் னுயிர்தொறும்
நீப்புஇன் றாஅ நிலைஇய
யாப்புஎன் னணம்அணித்து அற்றுஅணி மைத்து.

(இதுவும் ஆறடியாய் வந்த நேரிசை ஆசிரியப்பா)

அன்றியும்

(இதுவும் தனிச்சொல்)

எம்மனோர் வைகுறும் ஏமமா ளிகைமிசைக்
கொம்மை வெம்முலைக் கோதையர் முன்கைக்
கிளியினம் வைகலும் கேசவா கதிஎனும்
அளியதன் பொருளுரை அஃதுஇரு செவியுற
ஒளிகிளர் நும்மலை உறைபசுங் கிளியினம்
கேட்டவை தாமும் கேசவா கதிஎனக்
கோட்டினுட் குடம்பையிற் குதலையின் மிழற்றும்
படிக்குஅணித்து என்றால் பையுள்
அடிக்கொளும் மனத்தின் அழுங்கல் நீயே. 189

(இஃது ஒன்பதடியாய் நேரிசை ஆசிரியப்பாவினால் இற்ற சரிதகம்.)

இது 'தொன்முறை இயற்கையின்' என்னும் பரிபாடலுள் இரண்டாம் பாட்டின் உறுப்புடை நடைத்தாய் வந்தது.

பகுதி - இயற்கை. துறை - இடம் அணித்துக் கூறி வற்புறுத்தல்.

மடவோய்! நம் சிறார்க்கு எய்பெருர் தன்னுயிர்க்குத் துன்பம் வரும் என உணர்ந்தது. மன்னுயிர்க்குத் துன்பம் நினையாதவர் மனத்துக்கு அருள்கெழுதகைமை எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

சாந்தி வாய்மை முதலிய பண்புகள் இல்லாத மானிடரைத் துதியாத பாவலரின் நாவுக்கு வாய்மை எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

திருமகள் கோன்புகழ் பாடியாடிய பக்தியர் திருமேனிக்கு அருந்தவக் காந்தி எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

தமரின் மிடிநிரப்பு ஒழிக்கும் கடமை எனது என்று முயல்பவற்கு திரு எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

அறமானது, உயர்நலன் எமையும் தோய்ந்து அருளி கென்ன, யாமே நீங்கலம் என உரிமையவாய்க் கூடிய குறி புடைத்து எனலாய் எம்நகர் உம்நகர்க்கு அணிமையாகும்.

பிறவிப்பிணிக்கு விதையான அவாவினை நீக்கிய விச்சையோர் உள்ளத்துக்கு ஈண்டிய இன்பம் எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

என் இதயத்துக்கு நீ எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

நாரணனுக்கும் மன்னுயிர்க்கும் எவ்வளவு அணிமையோ அவ்வளவு அணிமையாகும்.

எம்மூரின் மாடத்தில் உள்ள கிளிகள் கேசவா கதி என்று கூற அதைக்கேட்ட நும்மூர்க் கிளிகளும் கேசவா கதி என்னும். அவ்வளவு அணிமையிலுள்ளது எங்கள் ஊர். ஆதலால் தூரத்தில் உள்ளதோ என்று வருந்தாதே!

வெளிறு - பேதைமை. மேதை -அறிவுடைமை. இகந்து - தவிர்ந்து. ஓரீஇ - விலக்கி. ஒண்சுடர் - பரம்பொருள். ஈறு - கேடு. மொழிமுகத்து - சொற்களில். மகிழ்மார்பினன் - நம்மாழ்வார். தமிழ்மலை - பொதியமலை. பொதும்பர் - சோலை. மடவோய்! - பெண்ணே! நுமர் - உன்உறவினர். நோக்கு - அழகு. எமர் - என்உறவினர். ஏமுறுதல் - இன்புறல். ஊறு - துன்பம். படர் - துன்பம். உறீஇ - அடைந்து. உறுகண் - துன்பம். மனக்கொளார் - மனத்தில் கொள்ளாதவர். அண்ணியது - பொருந்தியது. அணித்து - அருகில் உள்ளது.

அஃதான்று - அது அல்லாமலும். காந்தி - தேசு. கவிகை - தியாகம். அமைதியது - பொருந்துவது. நரர் - மனிதர். மறு - குற்றம். உரவு - மிகுதி. கலா(வு)ம் - கற்றிய.

பொலந்துகில் - பொன்னாடை. செவ்வி - பருவம். மான்மதம் - கத்தூரி. வாசம்ஒரைந்து - இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம். உறுதகைத்து - பெறத் தகுவது. அன்று - அல்ல. ஒழுகுபு - நடந்து. செந்நிறப் பிருதிவித் திருவுடையாடை - காவியுடை. உய்ந்நிலைத்து - பிழைப்பதற்கு நிலையானது. விலாஞ்சனை - அடையாளம். திருமனும் - திருமண்ணும். பூவின் உள்ளவள் - அலர்மேல் மங்கை. சேடம் - மிச்சம். பத்தியர் - பக்தர்.

தமர் - உறவினர். அமர் - போர். மிடி - வறுமை. நிரப்பு-வறுமை. கடிதல் - நீக்குதல். விளைவிழைபவன் - முயல்பவன். அனவரதம்-எப்போதும்.

நசை - விருப்பம். அற - முழுதும். படிறு - வஞ்சனை. அவிச்சை - மாயை. நிலையுதல் - நிலைபேறுடையவை. காட்சி - ஞானம். ஐபுணர்வு-ஐம்புல உணர்வு. விச்சையோர்- கல்வியாளர். ஈண்டிய - பொருந்திய. தனவா(க) - தன்னு டையனவாக. உலவா(த) - கெடாத. நன்னர் - நன்கு. நீப்பு இன்று - நீங்காமல். நிலைஇய - நிலைபெற்ற. யாப்பு - சேர்க்கை.

வைகுதல் - வாழ்தல். ஏமம் - காவல். கொம்மை - வட்டமான. கோட்டினுள் - மரக்கிளைகளில் உள்ள; குரம்பை - கூடு. பையுள் - துன்பம். அழுங்கல் - வருந்தாதே.

கதழ்எரி கால்கண் எதிர் நிழல் சீறும்
மதமலை நூலின் முதல்மொழி கூறும்
திதமத னால்அன்று அதன்உயிர் பேணும்
திருமகள் கேள்வன் கருணை விநோதன்

அடல்அர வெனஉல குயிர்தொழ வளர்தரு
வடமலை அதனிடை பலமலர் பூத்த
பூங்கொடி மானும் மாதர்வடி வனைத்தும்
ஆங்கமை வான்நீடு கிழியுட் படஎழுதி
ஈங்கெதிர் வேன்என் றனிர்.

(இது வெண்டளையும் ஆசிரியத்தளையும் வஞ்சித் தளையும் விரவி, ஒன்பதடித்தாய் ஈற்றயலடியும் ஈற்றடியும் வெண்டளைத்தாய் நாற்சீரும் முச்சீருமாய் இற்ற தரவு.)

கருங்கடல் உடுத்த கண்ணகல் ஞாலம்
ஒருங்குஅகப் படுத்துஇருள் ஒளித்திடக் கதிர்விரித்து
ஒருதனித் திகிரி உரனுடை ஊர்திப்
பரிதியங் கடவுள் அலம்வரும் பரும
ஒண்பொன் மால்வரை ஒன்றல இரண்டென
எண்கொளப் புடைத்து இணைத்துஇறு மாந்து
வளர்இள வனமுலை வடிவினை எழுதினும்
புளகமுற்று அடிக்கடி புடைப்பதை எழுதலும்
ஏந்தெழில் வள்ளைத் தண்டினை எழுதினும்
வாய்ந்தபொன் னூசலின் மறுகுவ தெழுதலும்
காந்தளை எழுதினும் கதிர்வளை யுழல்வதும்
ஏய்ந்துடன் ஒலிப்பதும் எழுதலும்[1] அரிதால்
உழுவல்அன் பிடைநின் றூட்டிய இன்பக்
கெழுதகைக் கேளிர் இன்னும் கேள்மின்

(இஃது ஆசிரியத்தளையானும் இயற்சீர் வெண்டளை யானும் பதினாலடித்தாய் வந்த தரவு.)

---

பாடபேதம்: 1. எழுதுவது.

அரிமதர் உண்கண் எழுதினும் மருள்மருள்
புரிவன வகைவகை பொறிப்பதும் அரிதே
குமிழினை எழுதினும் குணன்நுகர் குறிப்பு உயிர்ப்பு
உமிழ்திறம் எழுதலும் உணர்வுற வரிதே.*

(இவை இரண்டும் ஈரடி இரண்டு அம்போதரங்கம்.)

இதழ்அமுது உதவலும் எழுதுவது அரிதே.
புதல்முனி வுறநெறி புதுமையும் எவரே.

(இவை இரண்டும் ஓரடி இரண்டு அம்போதரங்கம்)

பதம்நட முறஅணி பரிபுர ஒலியுற
இதமுறத் தேமொழி எழுதுவது அரிதே.

(இஃது எண்சீரான் வந்த தனியராகம்)

என இவை

(இது தனிச்சொல்)

எழுதிய கிழிஒன்று உளஎனில் இன்பம்
பழுது படாதுஅலகுஅலகொடு பயிலும்
அன்றிலின் கூட்டம் அகற்றலும் நின்பால்
பொன்றலில் அருள்புறம் போம்வகை தொடங்கி
வன்தொழில் ஆடவர் மகிழ்ந்துஅயல் போதரப்
பூளையும் எருக்கும் புனைதா ராக
வேளைமுன்பு அடர்த்தவன் வெண்ணீறு அணிந்து
பனைமடல் பாய்மா வாகப்
புனைமணி மாட வீதிபோ துகவே!

(இஃது ஒன்பதடியான் வந்து இற்ற நேரிசை ஆசிரியச் சுரிதகம்.

பாடபேதம்: 2. வரிதே.

இது பகுதி - மடல். துறை - எழுத அரிது என்றல்.)

வடமலையின்கண் மாதர் வடிவனைத்தும் எழுதி எதிர்வேன் என்றீர்! உதயகிரி ஒன்றல்ல இரண்டு என்னும் படி புடைத்த முலை வடிவம் எழுதினும் அவை புள கமுற்றுப் புடைப்பதை எழுதுவது அரிது. வள்ளைத்தண்டு போன்ற காதுகளை எழுதினாலும் பொன்னூசல்போலக் (குழைகள்) அசைவதை எழுதுவது அரிது.

காந்தள் போன்ற கைகளை எழுதினாலும் அவற்றில் வளையல் அசைவதும் ஒலிப்பதும் எழுதுவது அரிது.

கெழுதகைக் கேளிர்! இன்னும் கேட்பீராக! கண்களை எழுதினும் மருட்சியைப் புரியும்வகை பொறிப்பது அரிது. குமிழ்ப்பூப்போன்ற மூக்கினை எழுதினாலும் மூச்சு விடும் திறம் உணர்வது அரிது.

இதழ் எழுதலாம்.

அமுது உதவும் திறம் எழுதுவது அரிது.

புருவம் எழுதலாம்.

சினத்தால் நெறிகின்ற புதுமை எழுதுவது [அரிது.

பாதங்களை எழுதலாம்

பரிபுரஒலி எழுதுவது அரிது.

வாய் எழுதலாம்

தேமொழி எழுதுவது அரிது.

இவ்வாறு அரிது என்று கூறப்பட்டவற்றையெல்லாம் எழுதிய ஓவியம் ஒன்று உண்டு என்றால், அலகோடு அலகு இணைத்துக்கூடும் அன்றிலின் கலவியை அகற்றல்போல, நின்னிடத்துக் கருணையே இல்லாமல் வன்தொழில் மேற் கொண்ட தலைவியின் உறவினராகிய ஆடவர் விலகிப்போக, நீ பூளைப்பூவும் எருக்கம் பூவும் மாலையாகப் புனைந்து மன்மதனைக் கொன்றவனாகிய சிவபிரானின் திருநீறு பூசிக் கொண்டு பனைமடலே குதிரையாகக் கொண்டு வீதியில் வருவாயாக!'' என்று தோழியானவள் தலைவனிடம் கூறிய தாகப் பொருள் அறிக!

கதழ்எரி - மிக்க தீ. கால்கண் - சிந்துகின்ற கண். சீறும் - கோபிக்கும். மதமலை - யானை. நூலின் முதல் மொழி - ஆதிமூலமே என்று பெயர். திதம் - உறுதி. அதன்உயிர் - யானையின் உயிர். பேணுதல் - காத்தல். அடல் அரவு என - வலிய பாம்பு என்று. வடமலை - வேங்கடம். வேங்கடம் அரவகிரி எனப்படுவதனால் இவ்வாறு கூறினார். மாதர் - தலைவி. கிழி - திரைச்சீலை. எதிர்வேன் - எதிரே வருவேன் என்றனிர் - என்று கூறினீர்.

கண் அகல் - இடம் விரிந்த. அகப்படுத்த இருள் - சூழ்ந்து கொண்ட இருள். அகப்படுத்த இருள் என்பது அகப் படுத்திருள் என வந்தது, விகாரம். திகிரி - சக்கரம். பரிதி. சூரியன். அலம்வரும் - சுற்றிவரும். பரும - பருமையான. பொன்வரை - மேருமலை. எண்கொள - எண்ணும்படி- புடைத்து - பருத்து. இணைத்து - இரண்டாகி. வனமுலை. அழகிய முலைகள். வள்ளைத்தண்டு - காது (உவமையாகு பெயர்). மறுகுவது - அசைவது. காந்தள் - கை (உவமை யாகுபெயர்). வளை - வளையல். உழல்வது - அசைவது. ஏய்ந்து - பொருந்தி. உழுவல் அன்பு - விடாது தொடர்ந்த அன்பு. கேளிர் - தலைவரே!

அரி - செவ்வரி. மருள்மருள் - மருட்சிமிக்க.பொறிப்பது- எழுதுவது. குமிழ் - மூக்கு (உவமையாகு பெயர்). குணன் நுகர் குறிப்பு - தலைவனின் பண்பாகிய நிறையினைக் கவர்ந்து கொண்ட குறிப்புடைய. உயிர்ப்பு - மூச்சு. உமிழ்திறம் - விடும் இயல்பு. உணர்வுறல் - அறிவது.

புதல் - புருவம். முனிவுற - சினத்தலால். நெரிதல் - வளைதல். நடம்உற - நடனமிட. பரிபுரம் - சிலம்பு.

அலகு - (அன்றிலின்) மூக்கு. கூட்டம் - கலவி. புறம் போம் வகை - நீங்கும்படி. போதர - போய்விட. தார் - மார்பில் அணியும் மாலை. வேள் - மன்மதன். அடர்த் தவன் - கொன்றவன்; சிவன். பாய்மா - பாய்ந்து செல்லும் குதிரை. போதுக - வருக.

பிற்சேர்க்கை

## இந்நூலில் வந்துள்ள பாவும் பாவினமும்

(எண்கள் பாக்களைக் குறிப்பன)

## தொடையும் தொடை விகற்பமும்



## பா, பாவினங்கள் பற்றிய சில குறிப்புக்கள்

## அணிகள்

## அகத்திணைப் பகுதிகள்



## அகத்துறைகள்

## புறத்திணைகள்



## புறத்துறைகள்

## திருப்பதிகள்



## மலைகள்



## ஆறுகள்

## விளங்காத கதைகள்



## பலபொருள்

## இந்நூலுள் எழுத்தாளப்பட்ட பிற நூல்கள்

# தமிழமுதக் கோவை

## அருட்கவி அரங்க சீனிவாசன்

### குறள் வெண்பா

சாந்த மலையத் தலையில் வரும்தமிழே
காந்தம்; இரும்பென் கருத்து 1

அடிதோறும் முதற்சீர் முழுதும் (சாந்த, காந்த என) ஒன்றியமையால் தலையாகெதுகை. இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் விரவி வந்தமையால் ஒழுகிசைச் செப்பலோசையுடையது. பிறப்பு என்னும் வாய் பாட்டால் முடிந்தது. "வெள்ளைக்கு இரண்டடி இழிபு" என்ற விதி பெற்று வந்த ஒரு விகற்பக் குறள் வெண்பா. அடிதோறும் முதற்சீரும் மூன்றாம் சீரும் மோனை பெற்று வந்தமையால், பொழிப்பு மோனை.

சாந்த மலையத் தலை = சந்தனமரங்களையுடைய பொதிகை மலையின் உச்சி. தமிழ், காந்தம்; என் கருத்து, இரும்பு என்க.

தேன்இனி தென்ப அமிழ்தம் இனிதென்ப
பைந்தமிழ் துய்க்கா தவர். 2

இருவிகற்பக் குறள்வெண்பா. "மோனை முதலா(க) முழுதும் ஒவ்வாது விட்டால் செந்தொடை" என்ற விதிப்படி யமைந்த செந்தொடை. மலர் என்னும் வாய்பாட்டால் முடிந்தது.

துய்க்காதவர் என்ப; என்ப என வினைமுடிவு கொள்க. துய்க்காதவர் = நுகராதவர்.

தமிழுக்குத் தாய்நெஞ் சுதவும் புலவர்க்கு
வானத் தரசும் துரும்பு. 3

முதலடியில் இலைண மோனையன்றி, ஏனைத்தொடை யேதும் வாராமையால், இது மருட் செந்தொடை.

## வெண்பா

கரும்புத் தமிழைக் கருதினும் இன்பம்
இருந்துளத் தெண்ணினும் இன்பம்—விரும்புதமிழ்
வல்லாரைக் கண்டு வணங்கினும் பேரின்பம்
பல்காலும் இன்பம் இன் பம். 4

இடையே தனிச்சொல் பெற்று வந்தமையால், நேரிசை வெண்பா. இருவிகற்பமாக வந்தமையால் இருவிகற்ப நேரிசை வெண்பா எனப்படும். ஈற்றுச் சீர்தோறும் வந்த சொல்லே வந்தமையால், அடியியைபுத் தொடை. இரண்டாவது அடியில் முதல் மூன்று சீரிலும் மோனை வந்தமையால், கூழைமோனை. ஓராசிடையிட்டு வந்துள்ளது. இது, ஓராசிடையிட்ட இரு விகற்ப நேரிசை வெண்பாவாகும்

"நெற்றிச் சுருக்கமிலை; நீடுவாழ்ந் தீர்; இன்னும்
கற்றைக் குழல்நரையாக் காரணம்என்?"—
"உற்றதுகேள்!
முற்றும் தமிழ்க்கு முழுமனமும் தந்தார்க்குச்
சற்றும் வருமோ தளர்வு?" 5

இதுவும் நேரிசை வெண்பா. அடிதோறும் பொழிப்பு மோனை வந்தமை காண்க. ஒரு விகற்பமாக வந்தமையின் ஒரு விகற்ப நேரிசை வெண்பா எனப்படும். ஈராசிடையிட்டு வந்தமை காண்க.

முன்பகுதி வினா, பின்பகுதி விடை. விடையும் வினா வாகவே அமைந்தமையின், இது வினாவிடையாம்.

நீடு வாழ்ந்தீர் = நெடுங்காலம் வாழ்ந்தீர்; அதாவது முதுமை எய்தினீர். கற்றைக்குழல் = திரளான மயிர்முடி. நரையா = ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

விடமுண்டும் ஈசன் விளியாமை, தேவி
அடர்மங் கலியவலி அன்று;—படியில்
வழுவா அருச்சனையாம் வண்தமிழால் அன்றோ
அழியாமை பெற்றான் அவன்! 6

தனிச் சொல்லை நீக்கிப் பார்ப்பின், தனித்தனியே இருகுறள் வெண்பாக்களாக நிற்பதை உணர்க. இடையில் ஆசு ஏதும் பெற்று வரவில்லை. இருவிகற்பமாக வந்தது. இது, இருவிகற்பத்து இருகுறள் நேரிசை வெண்பா. மூன்றாமடி இரண்டாம் எழுத்து 'ழு' ஆகவும், நான்காமடி இரண்டாமெழுத்து 'ழி' ஆகவும் வந்தமையால், வருக்க எதுகை. 'அடர்மங்', 'கலியவலி' என வகையுளி வந்தமையால் இவை சிறப்பில் சீர்கள் எனப்படும்.

விடம் = நஞ்சு. விளியாமை = இறவாமல் இருப்பது. அடர் = பொன்தகடு. அடர்மங்கலியம் = பொன் தகட்டால் ஆகிய மங்கலியம் எனக் கொள்ளின், மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. பொன்தகடாகிய மங்கலியம் எனக் கொள்ளின், இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. படியில் = உலகத்தில் அல்லது ஒப்பில்லாத. வழுவா(த) = தவறில்லாத.

ஐந்தருவிக் குற்றாலத் தார்கின்ற பேரெழிலும்
சந்தனமும் தென்றல் தருமணமும்—முந்தளவி
கும்பமுனி அன்றுதரும் கோலத் தமிழ்அன்றோ
இம்பரமு தாகும் எமக்கு! 7

மணை, மும் என ஈராசிடையிட்டுத் தனிச் சொற்பெற்று இருவிகற்பமாய் வந்தமையின் இரு விகற்பத்து ஈராசிடை நேரிசை வெண்பா.

முந்து அளவி = முதலில் கலந்து. கும்பமுனி = அகத்தியன். தமிழை அகத்தியன் தந்ததாகக் கூறுவது இலக்கிய மரபு. பேச்சு வழக்கிலிருந்து இலக்கியமாக மாறிய தமிழுக்கு முதன் முதல் இலக்கணம் வகுத்தமையின், அகத்தியனுக்கு இப்புகழ் இட்டியது. "தமிழ்தந்தான்" என்று கம்பனும் கூறியது காண்க.

"எண்ணும் பிறவி இனி யில்லை; வீட்டின்பம்
நண்ணு"கென ஈசன் நவின்றக்கால், —"விண்ணுலகில்
இன்றமிழுண் டா?"என்பாம், "இல்லை" எனில்,
"இச்சுவையே
நன்றமிழ்தின் மேல்" என்பாம் நாம். 8

இதுவும் இருவிகற்ப ஈராசிடை நேரிசை வெண்பா. மூன்றாவது அடியில், இரண்டாம்சீர் ஒழிந்த மற்றைய மூன்று சீரிலும் மோனை வந்தமையால், மேற்கதுவாய் மோனை.

"நண்ணுகவென" என வரற்பாலது, 'நண்ணுகென' என வந்தது செய்யுள்விகாரம். "அமிழ்தின் மேல்" என்பதில் வரும் ஐந்தாம் வேற்றுமை உருபு (இன்) ஒப்புப் பொருளில் வாராமல், எல்லைப் பொருளில் வந்தது. அமிழ்தத்தைக் காட்டிலும் எனப் பொருள்படுதல் காண்க.

சுந்தரனார் சொற்றமிழைத் துய்க்கும் ஒரு காதலினால்
மைந்தர்களை ஈடுவைத்தான் வார்சடையான்
என்றக்கால்,
சிந்தனையைச் செந்தமிழ்க்குச் சேர்க்காத தீயவரை
இந்த நிலம் தாங்குவதும் ஏன்? 9

முதலடி முதல்மூன்று சீரும் மோனை பெற்றமையால், கூழைமோனை. மூன்றாமடி நான்குசீரும் மோனை பெற்றமையால் முற்றுமோனை. இரண்டாமடியில் பொழிப்பு மோனை வந்தமை காண்க. மூன்றாமடி முதலிரண்டுசீரும் எதுகை பெற்றமையால், இணையெதுகை, தனிச்சொல் பெறாமையால் இன்னிசை வெண்பா. இது. ஒரு விகற்பத்து இராசிடை இன்னிசை வெண்பா எனப்படும். முற்றிலும் காய்ச்சீரே வந்தமையால், ஏந்திசைச் செப்பலோசை.

வெஞ்சமாக்கூடலூரர் இறைவன், தன்னைப் பாடிய சுந்தரருக்குப் பொன்தரத் திருவுளம் கொண்டான். அதற்காக ஒரு முதிய ஆய் மகளிடம் தம் புதல்வர் இருவரையும் ஈடாக வைத்துப் பொன் பெற்று, அப்பொன்னைச் சுந்தரர்க்கு வழங்கினான் என்பது கொங்குமண்டலச்சதகம் 10-ஆம் பாடலிற்கண்டது.

கொள்ளைவண்டு இமிரும் நாட்பூங்
    கோதை ஓர் பாகர் முன்பு
கள்ளம்இல் உள்ளத்து அன்பு
    கனிந்தன கிழவி யார்பாற்
பிள்ளைகள் ஈடுகாட்டிப்
    பெற்றசெம் பொன்னை எல்லாம்
தெள்ளிய தமிழ்ப்பா சொன்ன
    திருத்தொண்டர்க்கு உவந்து அளித்தார்

என இவ்வரலாற்றினை வெஞ்சமாக் கூடற் புராணம் கூறுகிறது.

கம்பன் இராமகதை கஞ்ச மலர்போலும்;
செம்மைதரும் கற்பனைகள் தேன்போலும்;
                                        அத்தேனைச்
சுற்றிவந்து பாடிச் சுவைக்கும்அளி போலுமே
கற்றறிந்தார் தங்கள் கருத்து. 10

இது இருவிகற்பத்து இன்னிசை வெண்பா.

கஞ்சமலர் = தாமரைப்பூ. அளி = வண்டு. கருத்து அளிபோலும் என்க.

நெஞ்சுக்கின் பூட்டும் தமிழ்ஒன்றே—நெஞ்சுடனே
காதுக்கின் பூட்டும் தமிழ்ஒன்றே—காது,நெஞ்சு
கண்ணுக்கின் பூட்டும் தமிழ்ஒன்றே—வண்ணமிகும்
முத்தமிழே எங்களுயிர் மூச்சு. 11

முதல் மூன்று அடிகளிலும் அடிதோறும் ஒரூஉ எதுகை. தனிச் சொற்கள் பெற்றுப் பல விகற்பத்தால் வந்தமையால் பலவிகற்பத்து இன்னிசை வெண்பா.

நெஞ்சுக்கு இன்பூட்டும் தமிழ்=இயல்தமிழ். நெஞ்சுடனே காதுக்கு இன்பூட்டும் தமிழ்=இசைத்தமிழ். காது, நெஞ்சு, கண்ணுக்கு இன்பூட்டும் தமிழ்=நாடகத்தமிழ்.

காடு, நெஞ்சு, கண்ணுக்கு என்பதைக் காதுக்கும், நெஞ்சுக்கும், கண்ணுக்கும் எனக் கூட்டுக.

ஆக்கை நிலத்தெடுத்தியாம் ஆஅ பயன்பெற்றேம்;
தேக்கெறியும் முப்பால் தெளிவுண்டேம்;—கோக்கம்பன்
சொன்னகவி இன்பம் சுவைத்தேம்; இமையவர்தம்
இன்னமுதும் வெஃகேம் இனி. 12

நெடில், குறில், உயிர், அளபெடை, ஆய்தம், குற்றிய விகரம், குற்றியலுகரம், ஐகாரக் குறுக்கம், வல்லினம், மெல்லினம், இடையினம், மெய், உயிர்மெய் ஆகிய அசைக்கு உறுப்பாய் வரும் எழுத்துக்கள் பதின்மூன்றும் வந்தமை காண்க.

நிலத்தெடுத்தியாம்—கருவிளங்கனியாகக் கொள்ளின். "வெள்ளைத்தன்மை குன்றிப்போம், சீர்கலிபுகின்" என்ற

விதிப்படி வெண்பா ஓசை சிதையும். ஆதலால், "சீரும் தளையும் சிதையின், சிறிய இஉ அளபோடு ஆரும் அறிவர் அலகுபெறாமை" என்ற விதிப்படி, "நிலத்தெடுத்தியாம்', என்பதின்கண் உள்ள குற்றியலிகரத்தை அலகிடாமல் தள்ளி கருவிளங் காய்ச்சீராகக் கொள்க.

"தற்சுட்டு அளபு கழி ஐ முவழியும் நையும்" என்ற விதிப்படி "ஆக்கை" என்பதின்கண் ஈற்று ஐகாரம் குற்றெழுத்தின் இயல்பினதாய் ஒருமாத்திரை பெற்று வந்து ஐகாரக் குறுக்கம் ஆனது.

இது, இருவிகற்பத்து ஈராசிடை நேரிசை வெண்பா.
தேக்கெறியும் = நிரம்ப உண்ணுகின்ற.

மண்டு சுவையாம் மதுர மதுவெறியைக்
கொண்டு திரிவார் குளிர்நாவும் நன்னெஞ்சும்
கண்டுபா கூறும் கனித்தமிழ்க்கே—தொண்டு
புரிபவர்தாள் என்சென்னிப் பூ. 13

முதலடியில் மேற்கதுவாய் மோனை வந்தது. இருவிகற்பத்து இன்னிசை வெண்பா. மூன்றாம் அடியில் தனிச்சொல் வந்தது காண்க.

குளிர்நா கண்டு பா கூறும் = குளிர்ந்த நாவானது, (தமிழினிமை) கண்டு பாடல்களைக் கூறுகின்ற. நல்நெஞ்சு கண்டு பாகு ஊறும் = நல்லமனத்தின்கண் (கற்) கண்டும், (தேன்) பாகும் ஊறுகின்ற. இது நாவுக்கும், நெஞ்சுக்கும் சிலேடை. குளிர்நா = குளிர்ந்த சொல்லன்றி, வன்சொல் அறியாத நா என்க. தமிழ்ச்சுவை மதுவெறி கொண்ட நெஞ்சாதலின், நல்நெஞ்சு ஆனது. கண்டு=கற்கண்டு. தாள் ஆனது சென்னியில் சூடும் பூவை ஒக்கும் என்க.

திருவள் ளுவர்தந்த தெய்வக் குறளில்
ஒருகுறள் தேறி ஒழுகும் திறத்தார்க்
கினிவினை சேரா; இறையும் மடிதற்
றருள்தா முந்தும்; அமர நிலை எய்தும்;
வருவ துயரில்லை மற்று. 14

ஒருவிகற்பத்து ஐந்தடிப் பஃறொடை வெண்பா இரண்டாம், மூன்றாம் அடிகள் முதலில் முரணைத் தொடுத்தமையால் அடிமுரண்தொடை. திருவள் ளுவர்தந்த என வகையுளி பெற்றமையால் இவை சிறப்பில் சீர்கள் எனப் படும்.

இறையும் = இறைவனும். மடிதற்று = ஆடையை இறுக உடுத்துக் கொண்டு. அதாவது ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு. மற்று வருவதுயர் இல்லை என்று கூட்டுக. வருவ துயர் = வருவனவாகிய துயர்; பண்புத்தொகை. வருவ = வினையாலணையும் பெயர்.

அன்னியர்கள் ஆண்டிடினும், ஆட்சிமொழி
அன்றெனினும்,
தன்னுடைய பிள்ளைகளே தாம்பழித்துப் பேசிடினும்;
இன்னும் பலகொடுமை மாற்றார் இயற்றுகினும்
அன்னை தமிழ்தான் அழியா ததுவியப்போ!
பின்னும் வளர்ந்து பெருகும் சிறப்பன்றோ
மன்னும் மருட்கை யுடைத்து. 15

ஒருவிகற்பத்து ஆறடிப் பஃறொடை வெண்பா. முதல் அடி முற்றுமோனை. மூன்றாம் அடி ஒரூஉ மோனை இறுதியடி இணைமோனை.

மாற்றார் = பகைவர். மருட்கை = வியப்பு.

கன்னிக் குமரியவள் கால்மாட்டிற் காத்திருக்கச்,
சென்னித் தலைமாட்டிற் செங்கதிர்போல்
—மின்னுகின்ற
ஐந்துபடை ஏந்தி அணிவேங் கடத் திருமால்
வந்துபகை கேடுதரா வண்ணமங்கு—முந்திநிற்க,
மற்றைஇரு பாலும் மறிகடல்கள் தண்ணலையாம்
கற்றைக் கவரிநறுங் காலிரட்ட,—நற்றெலுங்கு
மாமலையா ளம்துளுவு வான்கன் னடமகளிர்
பாமலரைத் தூவிப் பணிகேட்ப,—ஏமுற்றுப்
பூமங்கை மேனி புளகிக்கப், பாவலவர்
தாமங்கை கூப்பித் தலைவணங்க,—மாமனச்சிங்
காசனமேல் வீற்றிருக்கும் அன்னை தமிழ்க்குரிமைச்
சாசனமே ஆக்கிஉயிர் தந்தார்க்குக்—காசினியில்
எப்போதும் இன்பம் எதிலும்பே ரின்பமென
முப்போதும் சங்கே முழங்கு. 16

*இது வெண்டளை பெற்று, ஒரு பொருள்மேல் வந்தமை யால் கலிவெண்பா.*

*கால் இரட்ட = காற்றினை வீச.*

ஊறியஉள் ளுணர்வுகளைத் தருந்தாய் என்றும்
உயரறிவைத் தருவதனால் தந்தை என்றும்
வேறியலும் இருபாலும் ஆக உன்னை
விரும்பிஉரு வகம்செய்ய வேட்கை கொண்டேன்
வீறியசெஞ் செழுந்தமிழே! பொதுமை யாக
மிக்க இலக் கணவழுவொன் றிலாத வண்ணம்
கூறியுனை அழைப்பதற்கே "எந்தாய்" என்றோர்
கொழுஞ் சுவைச்சொல் அடியேற்குக்
கொடுத்திட்டாயே! 17

காய் காய் மா தேமா என்ற வாய்பாட்டுச் சீர்களடக்கி வந்த எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம். "விரும்பி உரு வகம் செய்ய" இவ்விடத்தில் வகையுளி வந்தது. "மிக்க இலக், கணைவழு" என்னுமிடத்தும் அது. பண்டைக்காலத்து இது நெடுந்தாண்டகம் என வழங்கப் பெற்றது. ஒற்றுநீக்கி, அடிக்கு முப்பது எழுத்துக்கள் உயர் எல்லையாகவும், இருபது எழுத்துக்கள் சிற்றெல்லையாகவும் வருதல் உண்டு. உனை - இடைக்குறைவிகாரம். இரண்டு, நான்காம் அடிகளில் ஏழாஞ் சீரிலும் மோனை வந்துள்ளது. அடிதோறும் இவ்வாறு வருவது சிறப்பு என்க. "வில்லி" பாடல்களில் இம்மரபைப் பரக்கக் காணலாம்.

எந்தை என்ற சொல் விளி ஏற்கும் போது எந்தாய் என வரும். எம்+தாய்=எந்தாய்—இது அண்மை விளியில் இயல்பாக வந்தது. எந்தாய் - சிலேடை. தந்தையையும் எந்தாய் என அழைக்கலாம். தாயையும் எந்தாய் (எம்+தாய்) என அழைக்கலாம். எந்தாய்—இருபாற்கும் பொதுவான விளி.

தமிழ் மொழியின் சொல்வளத்தைக் காட்டுவதால் இது தமிழ்ச் சிறப்பை உணர்த்திற்று.